# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

தொகுதி 3

பதிப்பாசிரியர்

இ. சுந்தரமூர்த்தி

மா. ரா. அரசு



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

## தொகுதி 3


பதிப்பாசிரியர்

இ. சுந்தரமூர்த்தி

மா.ரா. அரசு






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies

இரண்டாவது முதன்மைச்சாலை

மையப் பல்தொழில் நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Indhiya Vidutalaikku Munthaiya Thamil Idhalgal, Part-III |
| Editors | : | E. Sundaramoorthy<br>M.R. Arasu |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Tharamani, Chennai - 600 113<br>Ph:22542992 |
| Publication No | : | 518 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 2004 |
| Edition | : | First |
| Paper used | : | TNPL 18.6 Kg Maplitho |
| Size of the Book | : | Demy 1/8 |
| Printing Types | : | 10 Points |
| No. of Pages | : | xii+188 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.60/- (Rupees Sixty only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 600 004 |
| Subject | : | Studies on Tamil Journalism |


இதழியல் ஆய்வு - தொகுதி 4

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

அரிய பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாகத் தொகுத்து வெளியிடுவது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தொடர் பணிகளில் ஒன்றாகும். அவ்வகையில் பல்வேறு நிலைகளில் இதுகாறும் சுமார் 1500 கருத்தரங்குகள் இந்நிறுவனத்தால் நடத்தப்பெற்றுள்ளன. 1999 ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டாக்டர் மா.இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையத்துடன் இணைந்து இதழியல் கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தியது. இக்கருத்தரங்கக் கட்டுரைகளில் ஐந்து தொகுதிகள் வெளிவந்துள்ளன.

இத்தொகுப்பு நூல் தத்துவபோதினி, ஜநவிநோதிநி, செந்தமிழ், சித்தாந்தம், குமரன், ஹநுமான், கல்கி ஆகிய இதழ்கள் பற்றிய அரிய செய்திகளை ஆய்வு நோக்கில் தருகின்றது.

இந்நூல் இதழ்கள் பற்றிய ஒரு களஞ்சியம் எனினும் மிகையில்லை. 1999இல் நடைபெற்ற இவ்விதழியல் கருத்தரங்கக் கட்டுரைகளை இப்போது இந்நிறுவனம் பெரிதும் முனைந்து நூலாகக் கொண்டுவருகிறது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிக வரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி பண்பாடு – மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு பு. ஏ. இராமையா இ.ஆ.ப. அவர்களுக்கும் சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திரு சு. கண்ணனுக்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்டிங் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை
27-08-2004

இயக்குநர்

# கட்டுரையாளர்கள்

1. **முனைவர் பழ. அதியமான்**
நிகழ்ச்சிப் பொறுப்பாளர்
சென்னை வானொலி நிலையம்
சென்னை - 600 004

2. **திரு. இளங்கோ குமணன்**
37, 12 ஆவது நிழற் சாலை
அசோக் நகர்
சென்னை - 600 083

3. **முனைவர் பா. இறையரசன்**
எம் 41டி, பெரியார் நகர்
கொரட்டூர்
சென்னை - 600 080

4. **முனைவர் இரா. ஞானபுஷ்பம்**
55/1, பாஞ்சாலி அம்மன்
கோவில் தெரு
அரும்பாக்கம்
சென்னை - 600 106

5. **முனைவர் மு. தங்கராசு**
15, சாய்ராம் தெரு
பன்னீர் நகர்
முகப்பேர் மேற்கு
சென்னை - 600 037

6. **திரு. ரா.அ. பத்மநாபன்**
71, எல்லையம்மன் கோவில் தெரு
அடையாறு
சென்னை - 600 020

7. **முனைவர் அருணை பாலறாவாயன்**
தமிழ் இணைப் பேராசிரியர்
இலயோலா கல்லூரி
சென்னை - 600 034

8. **திரு பெ.சு. மணி**
11, இராமகிருஷ்ணாபுரம்
இரண்டாவது தெரு
மேற்கு மாம்பலம்
சென்னை - 600 033

9. **முனைவர் த. வசந்தாள்**
தமிழ் இணைப் பேராசிரியர்
எத்திராஜ் மகளிர் கல்லூரி
சென்னை - 600 008

# பொருளடக்கம்

# பதிப்புரை

இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் என்னும் பொருண்மையில் நான்கு கருத்தரங்கங்கள் நடத்தப் பெற்றன. மூன்றாவது கருத்தரங்கக் கட்டுரைகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முந்தைய தமிழ் இதழியல் வளர்ச்சியைக் காண்பதற்கு இதில் அமைந்துள்ள கட்டுரைகள் பயன்படவல்லன. சென்னையிலிருந்து நாகர்கோவில் வரையிலுள்ள தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து வெளியான பல்வேறு பொருளமைதிகளைக் கொண்ட பல கட்டுரைகள், கதைகள், கவிதைகள் மற்றும் பல தகவல்கள் இவ்விதழ்களில் வெளியாகியுள்ளன.

### தமிழ் இதழியல் வரலாற்றில் நாகர்கோவில் (1840-1900)

பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்தே நாகர்கோவிலை மையமாகக் கொண்டு பல இதழ்கள் வெளிவந்தன. 1840 முதல் 1900 வரையிலான காலப்பகுதியில் கிறித்தவ சமயத்தை வளர்த்தல் என்பதையே நோக்கமாகக் கொண்டு பத்திற்கும் மேற்பட்ட இதழ்கள் தொடர்ந்து வெளிவந்தன. அவற்றுள், சுவிசேஷப் பிரபல விளக்கம் (1840), தேசோபகாரி (1861), சுவிசேஷ தூதிகை (1862), மாதர்போதினி (1895) ஆகியன குறிப்பிடத்தக்க சில இதழ்கள். சென்னை மாகாணம் என்றழைக்கப்பட்ட பத்தொன்பதாம் நூற்றாண்டு தமிழகத்தில் சுகுணபோதினி, மாதர் மித்திரி, மகாராணி, மாதர் மனோரஞ்சனி போன்ற பெண்களுக்கான இதழ்கள் வெளிவந்தன. நாகர்கோவிலில் இருந்தும் 'மாதர்போதினி' என்ற பெயரில் மகளிர் இதழ் ஒன்று வெளிவந்த புதிய தகவலை இக்கட்டுரை தருகிறது. இந்த இதழில் வெளியான, 'இந்தியாவில் பாலிய விதவைகள்' என்கிற கட்டுரை குறிப்பிடத்தக்கது. இக்கட்டுரை, "வங்காளத்தில் மட்டும் நான்கு பெண் குழந்தைகளில் ஒன்று விதவையாயிருக்கின்றது. அப்படியானால் இந்தியா முழுவதிலும் உள்ள விதவைக் குழந்தைகளின் தொகை எவ்வளவு பெரியதாயிருக்கும்" என்ற வினாவை எழுப்பி, அந்நாளைய குழந்தை மணத்தின் கொடிய நடைமுறையையும் அதன் விளைவுகளையும் புலப்படுத்துகிறது. மேலும் விரிவாகவும் முழுமையாகவும் இப்பகுதியிலுள்ள இதழ்களை ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டியதன் தேவையைக் கட்டுரையாளர் தெளிவுபடுத்தி இருக்கிறார்.

### தத்துவபோதினி (1864)

இராம்மோகன் ராய் கல்கத்தாவில் சமூக, மத சீர்திருத்த நோக்கங்களைப் பரப்புவதற்கு 20.8.1828இல் தோற்றுவித்த பிரம்ம சமாஜம் இந்தியா முழுமையும் பரவியது. தமிழில் பிரம்ம சமாஜ செய்திகளை வெளியிடுவதற்காக 7-5-1864இல் தத்துவபோதினி

தொடங்கப் பெற்றது. வேதங்களைப் பயிற்றுவித்தல், பெண் கல்வி, சதிராட்டத்தை ஒழித்தல், சாதீய ஏற்றத் தாழ்வுகளைக் களைதல், குழந்தைத் திருமணத்திற்கு எதிர்ப்பு, விதவை மறுமண ஆதரவு போன்ற பல நிலைகளில் முற்போக்கான சிந்தனைகளுடன் தத்துவபோதினி தொடங்கப்பெற்றது. பெண்களை நமது பழம் நூல்களை ஆதாரம் காட்டியே அடக்கினார்கள். உண்மையில், "இது சத்தியமென்று பெண்களும் வெகுகாலமாக நம்பிவிட்டார்கள். இவ்வித மூடாத்துமாக்களல்லவோ நம்மைப் பெற்று ஊட்டி வளர்க்குந் தாய்மார்கள்... நமது பெண்களை வருத்தி அகௌரவப்படுத்தினதால், கடவுள் நமது தேச கௌரவத்தை அழித்து நம்மைப் பல நூற்றாண்டும் அந்நியருடைய ஆதினமாக்கிப் பல துன்பங்களை அனுபவிக்கும்படி செய்தார்" என்று தத்துவபோதினி பெண்களுக்கு எதிரான அடக்குமுறையைக் கண்டித்தது.

தத்துவபோதினி ஒன்பது ஆண்டுக் காலம் வெளிவந்தது. இக்குறுகிய காலத்திற்குள் இவ்விதழில் மூன்று ஆசிரியர்கள் பணியாற்றியுள்ளனர். இவ்விதழின் முதற் கட்டத்தில் வி. ராஜகோபாலாச்சாரியார் என்னும் உயர்நீதிமன்ற வழக்கறிஞர் ஆசிரியர் பொறுப்பில் இருந்தார். இரண்டாவது கட்டத்தில் சேலம் சுப்பராயலு செட்டி என்பவர் ஆசிரியராக இருந்தார். மூன்றாவது கட்டத்தில், பிரம்ம சமாஜ கொள்கைகளை வங்கமொழியில் கற்றவரும் சமாஜ கொள்கைகளை விளக்கும் 'பிரம்மதர்மா' என்னும் வங்கமொழி நூலைத் தமிழில் மொழிபெயர்த்தவருமான ஸ்ரீதரலு நாயுடு ஆசிரியரானார். பிரம்ம சமாஜமும் அவ் இயக்க இதழான தத்துவபோதினியும் இருபதாம் நூற்றாண்டின் நவீன சிந்தனைகளுக்கும் மறுமலர்ச்சி இலக்கிய வடிவங்களுக்கும் வழிகோலின.

### *ஜநவிநோதிநி (1870)*

சென்னை அரசாங்க சார்பில் செயல்பட்டுக் கொண்டிருந்த துரைத்தனக் கல்விச் சங்கத்தார் ஜநவிநோதிநி இதழைத் தமிழ் மற்றும் தெலுங்கு மொழிகளில் 1870ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து வெளியிட்டு வந்தனர். "மகிழ்ச்சியூட்டக் கூடியதும் அறிவுறுத்தக் கூடியதுமான தகவல்களைத் தரும் இதழ்" என்று இதழ் நோக்கைப் புலப்படுத்தும் தொடரோடு வெளிவந்த ஜநவிநோதிநி, அதற்கேற்றாற் போல் ஒரு தகவல் பெட்டகமாகவே திகழ்ந்தது. ஒவ்வொரு இதழும் கட்டுரைகள், கதைகள், வாசகர்கள் அறிய வேண்டிய நிகழ்ச்சி பற்றிய குறிப்புகள் என்பனவற்றை உள்ளடக்கமாகக் கொண்டு இதழின் இலட்சியத்தை நிறைவேற்றியது. மனித வாழ்வின் மேம்பாட்டிற்கான சிந்தனைகள் இதழ்கள் முழுமையும் விரவிக்கிடக்கின்றன. "நம்மால் கூடியவரையில் பாடுபட்டுச் சிறியோர் பெரியோர் ஆகிய அனைவர்க்கும் இனிப்புண்டாக்குகின்றவையான மலர்களையே ஆய்ந்தெடுத்து இதனுள் சேர்த்திருக்கிறோம்" என்று இதழாசிரியக்

குழுவினர் கட்டுரைகளைத் தேர்வு செய்யும் முறை குறித்துக் கூறுவது அறியத்தக்கது. பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே இவ்விதழ், வாசகர்களின் தன்னம்பிக்கையை வளர்த்து, வாழ்வில் அவர்கள் முன்னேற்றமும் உயர்வும் பெறுதற்குரிய வழிவகைகளைத் தொடர்ந்து எழுதிவந்தது. உலக வரலாறு, மன்னர்கள், அறிவியலாளர்கள், கல்வியாளர்கள் போன்றோரின் வாழ்க்கைச் செய்திகள், அறிவியல் கட்டுரைகள் முதலியவற்றை வெளியிட்டுத் தகவல் களஞ்சியமாகவும் விளங்கியது.

### *செந்தமிழ் (1903)*

இதுவரையிலும் அச்சில் வெளிவராத நூல்களை அச்சாக்கம் செய்தல், தமிழுக்குத் தேவையான மொழிபெயர்ப்புகளை உருவாக்கித் தருதல், தமிழ்மொழி இலக்கியம் குறித்த ஆராய்ச்சியை மேற்கொள்ளுதல் போன்றவற்றை அடிப்படை நோக்கங்களாகக் கொண்டு செந்தமிழ் செயல்பட்டது. 1903இல் தொடங்கி இன்றளவும் செயல்பட்டுக் கொண்டிருக்கும் இவ்விதழில் இரா. இராகவையங்காரும் மு. இராகவையங்காரும் தொடக்க கால ஆசிரியர்களாகத் திகழ்ந்தனர். அரசஞ் சண்முகனார், சி. கணேசையர், நா. கதிரைவேற்பிள்ளை, சோம சுந்தர பாரதியார், வி. கனகசபைப் பிள்ளை, வி.கோ. சூரிய நாராயண சாத்திரியார் மற்றும் பல தமிழ் அறிஞர்கள் இவ்விதழில் அரிய பல கட்டுரைகளை எழுதி, தமிழை வளப்படுத்தியுள்ளனர். உ.வே. சாமிநாதையர் தேவையுலா, திருவாரூர் உலா, சங்கரநாயினார் கோயில் அந்தாதி, சிராமலைக்கோவை ஆகியவற்றைச் செந்தமிழில் வெளியிட்டுள்ளார். இதனால், இவ்விதழைப் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை, "தமிழ்நாட்டுப் பெரும் பேராசிரியனாய் அமைந்து தமிழ் மக்கள் வீடுதோறும் சென்று தமிழ்க் கல்வி நலத்தை அவர்கள் நுகரும்படி செய்துவந்த பெருமை செந்தமிழ் பத்திரிகைக்கே உரியதாயிருந்தது" எனப் பாராட்டுகிறார். கட்டுரை எழுதுவோருக்குப் பணம் கொடுத்தல், மாணவர்கள் தமிழறிவு பெற்றிட வசதியாக, இதழுக்கான கட்டணத்தைப் பகுதியாகக் குறைத்து மாணவர்களுக்கு வழங்கிடத் தீர்மானம் நிறைவேற்றுதல் போன்ற பயனுள்ள செயல்களும் செந்தமிழ் இதழின் தொடக்க காலப் பணிகளாகும். சிறந்த தமிழ் அறிஞர்களை ஆசிரியர்களாகக் கொண்டு தமிழ்ச் சங்கத்தார் இவ்விதழைத் தொடர்ந்து நடத்தி வந்துள்ளனர். இதற்கான வழிகாட்டுதல் குழுவும் சிறந்த அறிஞர்களைக் கொண்டு அமைந்திருந்தது.

### *சித்தாந்தம் (1912)*

சைவ சித்தாந்தத்தைப் பரப்புவதற்காகச் 'சித்தாந்தம்' தோற்றுவிக்கப்பெற்றது. சென்னை மயிலாப்பூரிலிருந்து இவ்விதழ் வெளிவந்தது. பூவை கலியாணசுந்தர முதலியார் என்னும் இயற்பெயரிலும் 'மணவழகு' என்னும் புனை பெயரிலும் ஏராளமான

கட்டுரைகளை எழுதிய இவரே சித்தாந்தம் இதழுக்கு ஆரம்ப கால ஆசிரியர். சித்தாந்தம் இதழில் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை, மாகறல் கார்த்திகேய முதலியார், எஸ். பால்வண்ண முதலியார், மறைமலையடிகள், கா. ஆலாலசுந்தரம் பிள்ளை போன்ற பலர் தங்கள் பங்களிப்பை நல்கியுள்ளார். தீவிர சைவ சித்தாந்த கொள்கைப் பிடிப்பு கொண்ட இவ்விதழில், அதற்கு எதிரான கருத்துகள் வரும்பொழுது மறுத்தெழுதியும் சித்தாந்தக் கருத்துகளோடு தொடர்புடையவற்றை ஆதரித்தும் பல கட்டுரைகள் வெளிவந்துள்ளன. சிறுசிறு நீதிக் கதைகள் மூலமாகவும் சித்தாந்தக் கருத்துகள் விளக்கப்பட்டுள்ளன. சைவ சித்தாந்தம், இச்சித்தாந்தத்திற்கு அடிப்படையாக அமைந்த தமிழ், சித்தாந்த நுட்பங்களை உணர எளிமைப்படுத்தித் தரப்படுகின்ற கதை, சித்தாந்தம் இதழை நடத்தியதோடு நூலகத்தையும் நடத்தியமை போன்ற பல செய்திகள் சித்தாந்தம் இதழ் வழியாகத் தமிழில் பதிவாகியுள்ளன.

*குமரன் (1923)*

செட்டிநாட்டுச் சமூக மக்களின் குரலாகவும் சமூக விழிப்புணர்வைப் புலப்படுத்துவதாகவும் தமிழ்ப் பண்பாட்டின் மீது உரிய அக்கறை கொண்ட இதழாகவும் 'குமரன்' விளங்கியது. 1923இல் தொடங்கப்பெற்ற குமரன் 1944 வரையிலும் வெளிவந்தது. இவ்விதழுக்கு சொ. முருகப்பா ஆசிரியராக இருந்தார். இதழ்களில் செய்திக்கட்டுரை, சமயம், செட்டியார் சமூகத்தாருக்கான சிறப்புச் செய்திகள், கப்பல்கள் செல்லும் நேரங்கள் மற்றும் தங்கம், வெள்ளி போன்றவற்றின் சந்தை நிலவரங்கள் போன்ற செய்திகள் உள்ளடக்கங்களாக அமைந்தன. சமூகத்தில் தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்த வேண்டும் என ஒரு கட்டுரை, செய்தி வெளியிட்டது. "பள்ளர், பறையர், சக்கிலியர், நாவிதர், குறவர், தீயர் முதலிய வகுப்பார்களை உயர்த்த அவர்கள்பால் அறியாமை காரணமாக நிகழும் பல தீய பழக்கங்களை அறிவுச்சுடர் கொளுத்தி மாற்ற முற்படல் வேண்டும்" எனத் தாழ்த்தப்பட்ட சமூகத்திற்கு உயர்சாதி மக்கள் செய்ய வேண்டிய வேலைகளை இக்கட்டுரை பதிவு செய்துள்ளது. பல கட்டுரைகளில் புலால் மறுத்தல், இறை வழிபாட்டில் உயிர்க் கொலையைத் தவிர்த்தல், வயதான பசுக்களைப் பேணுதல் வலியுறுத்தப்படுகின்றன. மேலும், "வடநாட்டில் சிறந்த தேசாபிமானிகளாக விளங்குபவர் முழுமையும் தாய்மொழியில் வல்லுநராகவே, பண்டிதராகவே இருப்பதைக் காண்கிறோம். இங்குள்ளவர்கள், சிறந்த தமிழ்நடை எழுதுதலையும் புறக்கணிக்கின்றனர்'' என மொழிப்பற்றும் இவ்விதழில் வலியுறுத்தப்படுகின்றது. வ.வே.சு. ஐயர் சேரன்மாதேவியில் தாம் நடத்திய 'பரத்வாஜ் ஆசிரமத்'தில் பிராமணர் - பிராமணர் அல்லாதார் என்கிற பாகுபாட்டை உணவு உண்ணும் இடத்தில் ஏற்படுத்தினார். இத்தீண்டாமைக்கு எதிராகக் குமரன் தொடர்ந்து போராடியது அக்காலத்தில் தீண்டாமைக்கு எதிராகப் பாடுபட்ட அறிஞர்களிடம் இச்செய்தியைக் கொண்டு சென்றது. வ.வே.சு. ஐயர்

இக்குருகுலத்தை நடத்தியபோதிலும் இதற்கான பெருமளவு நிதியுதவிகளைச் செட்டியார்கள் செய்தனர் என்பது குறிப்பிடற்குரியது. தமிழக அரசியலோடு செட்டிநாட்டு மக்களின் வாழ்வியலையும் அறிந்து கொள்ள இவ்விதழ் பல நிலைகளில் உதவுகிறது.

### ஹநுமான் (1937)

செய்திகளை வரிவடிவத்தில் தருவதை விட ஓவியங்கள், ஒளிப் படங்கள் வழியாக மக்களிடம் கொண்டு சென்ற வெற்றிகரமான இதழ்களுள் ஒன்று 'ஹநுமான்'. ரா.அ. பத்மநாபன், துமிலன், 'நாலி' போன்றோர் ஒருங்கிணைந்து இவ்விதழின் பொறுப்புகளைப் பகிர்ந்து கொண்டனர். செய்திகளை ஒளிப் படமாக்கித் தருவதிலும் எழுத்து வடிவில் விவரிக்கும்பொழுது அவற்றை நகைச்சுவை உணர்வோடு எழுதுவதிலும் ஹநுமான் தனக்கெனத் தனித்த தன்மையைக் கொண்டிருந்தது. இதனாலேயே இதழ் தொடங்கிய 1937ஆம் ஆண்டிலேயே இதன் விற்பனை 20,000 படிகளைத் தொட்டது.

இராஜாஜி தமிழகத்தின் முதல் அமைச்சராக இருந்தபோதும் தம் துணிகளைத் தாமே துவைத்து உலர்த்துவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் இவ்விதம் வீட்டின் பின்புறம் தம் வேலையைச் செய்து கொண்டிருந்தபொழுது மெயில் நாளேட்டார் அதை ஒளிப்படம் எடுத்து வெளியிட்டனர். இதை ஹனுமான் எடுத்துத் தெளிவாக மறுவெளியீடு செய்து இராஜாஜியின் எளிமையை மக்கள் அறியுமாறு செய்தது. மேலும் சிறுகதைகள், இலக்கியக் கட்டுரைகள், 'கண்ணே பாப்பா' என்ற தலைப்பில் குழந்தைகளுக்கான கதைகள் போன்றவற்றைத் தொடர்ந்து வெளியிட்டு ஹனுமான் சிறந்த சேவை செய்தது. இரண்டாம் உலகப்போரின்பொழுது ஏற்பட்ட காகித விலையேற்றம், ஒளிப்படங்களைப் பிளாக்குகளாக மாற்ற உதவும் துத்தநாகத் தகட்டின் விலையேற்றம் ஆகியன இவ்விதழ் நின்றுபோக முதன்மைக் காரணமாயின. இவ்விதழின் இரண்டாம், மூன்றாம் கட்ட ஆசிரியர்களாகச் சங்கு சுப்பிரமணியம், 'நாலி' ஆகியோர் இருந்தனர். ஏறத்தாழ, பத்து ஆண்டுகள் மட்டுமே வெளிவந்த பொழுதும் தமிழர்களிடையே படிக்கும் பழக்கத்தை அதிகப்படுத்துவதற்கு இவ்விதழ் சிறப்பாகப் பணியாற்றியிருக்கிறது.

### கல்கி (1941)

ஆனந்த விகடனில் ஆசிரியராகப் பொறுப்பேற்றுத் திறம்பட நடத்திய ரா. கிருஷ்ணமூர்த்தி தம் நண்பர் சதாசிவத்துடன் சேர்ந்து 1941இல் கல்கி இதழைத் தொடங்கினார். சிந்திக்க வேண்டிய கனமான செய்திகளை மிகவும் எளிமைப்படுத்தி, நகைச்சுவை உணர்வோடு எழுதுவதில் கல்கி சிறப்பாகச் செயல்பட்டார். நமது மூடப் பழக்கவழக்கங்களைக் கூறவந்த கல்கி, "ஒரு மாதத்தை எடுத்துக் கொண்டால் அமாவாசை, பாட்டிமுகம், நவமி திதி இவை உதவா.

பின்னர் பரணி, கார்த்திகை நட்சத்திரங்கள்; வாரத்திலோ வெள்ளிக்கிழமை கலக நாள். சனிக்கிழமை செவ்வாய்க் கிழமை ஆகா... பின்னர் மரண யோகமும் கரிநாளும், மாதம், திதி, நட்சத்திரம், கிழமை, யோகம் எல்லாம் கூடியநாள் ஒன்றிருந்தால் அதில் ராகு காலம், தியாஜ்யம், பிரதோஷம் இந்த வேளைகள் கூடா. இவ்வளவு விபத்துக்களையும் கடந்து ஒருவன் ஏதேனும் காரியம் செய்யப் போனால் யாரேனும் ஒரு தும்மல் தும்மிவிட்டால் போதும், அன்று விடுமுறைதான்" என நகைச்சுவை இழையோடக் கண்டிக்கிறார். ரா. கிருஷ்ணமூர்த்தி 'கர்நாடகம்', 'தமிழ் மகன்', 'விவசாயி', 'தமிழ்த்தேனீ', 'யமன்', 'ரா.கி.' போன்ற பல புனைபெயர்களில் எழுதியபோதும் 'கல்கி' என்னும் பெயரே அவருக்கு நிலைத்து விட்டது. கல்கி இதழில் அரசியல், இலக்கியம், கதைகள், கட்டுரைகள் மற்றும் பிற செய்திகளும் அதிக அளவில் வந்தன. இராஜாஜி, டி.கே. சிதம்பரநாத முதலியார், கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, நாமக்கல் கவிஞர், பெ. தூரன், சின்ன அண்ணாமலை, சுப்புடு, அரு. இராமநாதன், விந்தன், சாவி போன்ற மிகப்பலர் தம் எண்ணங்களைக் கல்கியில் பதிவு செய்துள்ளனர்.

### இதழாளர் பாரதியார்

சுதேசமித்திரன், சக்ரவர்த்தினி, இந்தியா, விஜயா, சூரியோதயம், கர்மயோகி, Bala Bharat, Bala Bharata ஆகிய இதழ்களில் பாரதியார் பணியாற்றியிருக்கிறார். இருபதாம் நூற்றாண்டில் இந்தியா என்ற கருத்துருவாக்கமும் அதை நோக்கி இந்தியர்களை இணைப்பதுவுமாகிய பணியில் நாடு முழுவதிலும் இந்திய மொழிகளில் பல்வேறு இதழ்கள் உருவாகின. அந்த எழுச்சியில் தமிழிலும் பல்வேறு இதழ்கள் தோன்றின. அவற்றில் இந்தியா இதழின் பங்களிப்பு மிகவும் பெரிது பாரதியின் இதழாசிரிய ஆளுமையின் முழுமையை இந்தியாவில் காணலாம். மகாகவி பாரதியார் எனத் தமிழர்களுக்கு அடையாளப் படுத்தப்பட்ட பாரதி இன்னமும் இதழாளர் பாரதியார் என்கிற கோணத்தில் முழுமையாகப் போய்ச்சேரவில்லை.

இந்தியாவிலுள்ள தேச பாஷைப் பத்திரிகைகளின் நிலைமை சில அம்சங்களில் மிகவும் பரிதாபத்துக்கிடமாக இருக்கிறது. கடிதங்களை எழுதுவோரில் பலர் இலக்கணப் பயிற்சிகூட இல்லாமல் பத்திரிகைக்கெழுதத் துணிகிறார்கள். அவற்றைப் பத்திராதிபர்கள் சில மையங்களில் பிழை களையாமலே பிரசுரம் செய்துவிடுகிறார்கள். இதுவுமின்றி இலக்கணப் பயிற்சியற்ற சிலர் பத்திராதிபராக இருக்கும் விநோதத்தையும் இந்நாட்டிலே காண்கிறோம். நவீன நாகரிகத்தின் முக்யச் சின்னங்களிலொன்றாகிய பத்திரிகைத் தொழிலில் நாம் மேன்மை பெறவேண்டுமானால், மேற்கூறப்பட்ட பிழைகளைத் தீர்த்துக் கொள்ளக்கடவோம் என்று பாரதி கூறியுள்ளமை. தமிழ் இதழியல் வளர்ச்சியில் மட்டுமல்லாமல் இந்திய மொழி இதழ்களின் வளர்ச்சியிலும் அவருக்கு இருந்த ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் புலப்படுத்துகிறது.

இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் என்ற தலைப்பில் அமைந்த தொடர் சொற்பொழிவுகள் நான்கு தொகுதிகளாக வெளியிடப்படுகின்றன. நாட்டின் விடுதலை, மொழியின் மேம்பாடு, தமிழரின் அடையாளம் காணுதல், மேலைநாட்டுப் புதுமை இலக்கிய வகைகளை இனங்கண்டு தமிழ்ச் சூழலுக்கு ஏற்ப அவற்றை அறிமுகம் செய்தல் போன்ற நிலைகளில் அவ்விதழ்கள் தமிழுக்குச் செய்த கொடை அளப்பரியது. இந்நான்கு தொகுதிகளிலும் அமைந்த கட்டுரைகள் அவற்றைப் பல நிலைகளில் வெளிப்படுத்தியுள்ளன. அத்துடன், இன்னும் விரிந்த தளத்தில் விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்களைப் பல்வேறு கோணங்களில் ஆய்வு செய்ய வேண்டியதன் இன்றியமையாமையையும் தெளிவுபடுத்துகின்றன.

இத்தொகுதியையும் சேர்த்து, இதுவரையில் வெளிவந்த இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்த் தொகுப்புகளில், முதல் தொகுதியில் 16 கட்டுரைகளும் இரண்டாம் தொகுதியில் 10 கட்டுரைகளும் மூன்றாம் தொகுதியில் 9 கட்டுரைகளும் நான்காம் தொகுதியில் 8 கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. மொத்தம் நாற்பத்தி மூன்று கட்டுரைகளைக் கொண்ட ஆயிரம் பக்கங்களுக்கு மேல் அமைந்துள்ள இத்தொகுதிகளில் உள்ள செய்திகள் தமிழ் இதழ்களின் அமைப்புமுறை, உள்ளடக்கம், பல்துறைப்பட்ட இதழ்களின் உருவாக்கம், படிக்கும் பழக்கத்தின் வளர்ச்சி ஆகியவற்றை அறிந்திடத் துணை செய்வன. நிறுவனச் சார்பில் நடைபெறும் இதழியல் கருத்தரங்குகளில் ஆய்வுரை, அமர்வுத் தலைமையுரை, கருத்துரை, சிறப்புரைகள் வழங்குவதற்கு உரிய அறிஞர்களைத் தேர்வு செய்யும் குழுவினர் முனைவர் பொற்கோ, முனைவர் இரா. இளவரசு, முனைவர் இ. சுந்தரமூர்த்தி, திரு. மா.ரா. அரசு ஆகியோருக்கு நன்றி.

இதழியல் கருத்தரங்குகளை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தோடு இணைந்து நடத்த இசைவளித்ததோடு கருத்தரங்குகள் சிறப்புற நடைபெற ஒத்துழைப்பு நல்கிய இந்நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு நன்றி. இந்நூல் வெளியீட்டில் பெரிதும் ஈடுபாடும் ஆர்வமும் காட்டிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கு நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

பல்வேறு காலங்களில் பல்வேறு உயரிய நோக்கங்களுக்காகத் தொடங்கப் பெற்ற இதழ்களைக் கட்டுரையாளர்கள் அரிதாகத் தேடிச் சிறப்பாக வடிவமைத்துத் தந்திருக்கிறார்கள். அவர்களின் கட்டுரைகள் முறையாகத் தொகுக்கப்பெற்று நூல் வடிவம் பெறுவது தமிழ் ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் நலம் பயக்கும் என்பதில் ஐயமில்லை. தகவல் பெட்டகமாகக் கட்டுரைகளை உருவாக்கிய அனைவருக்கும் நன்றி. இந்நூல் உருவாகும்போது அச்சுப் பணிகளில் பெரிதும் துணைநின்ற முனைவர் கி. ஜெயகுமார் அவர்களுக்கு நன்றி.

# தமிழ் இதழியல் வரலாற்றில் நாகர்கோவில்

**1840 - 1900** இளங்கோ குமணன்

"செய்திகளை எளிதாகப் பரவச் செய்வது இந்த இதழின் நோக்கமாக இருக்கும். அவை பயனுள்ளனவாகவும் பொழுது போக்கிற்குரியனவாகவும் வணிகத்தைப் பெருக்கத் துணை செய்வனவாகவும் தனிப்பட்டோருக்கு ஊக்கம் தருவனவாகவும் இருக்கும். இந்த அடிப்படையில் தன் போக்கை வகுத்துக் கொள்ளும் இந்த இதழ், தவறு செய்பவர்களை மக்களுக்கு உணர்த்தும். நாட்டு நிகழ்ச்சிகளை உடனுக்குடன் விமர்சிக்கும். வினோதமான அறிவிப்புகளையும் விளம்பரங்களையும்கூட இதில் காணலாம். இப்பொழுது இது சில ஏவலர்களால் பொதுமக்களுக்குக் கிடைக்கும்படி செய்யப்படும்." இந்த அறிவிப்பினைத் தாங்கியபடி இந்தியாவின் முதல் இதழான 'பெங்கால் கெசட்' அல்லது 'கல்கத்தா அட்வர்ட்டைசர்' 1780ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 29ஆம் நாள் வெளியானது.[1]

இவ்விதழ் வெளிவந்த ஐம்பத்தோர் ஆண்டுகள் கழித்து 1831இல் சென்னைக் கிறித்தவ சமய இயக்கத்தவர்களால் 'தமிழ் மாகசீன்' என்ற முதல் தமிழ் இதழ் வெளியிடப்பட்டது.[2]

இருநூற்றுப்பதினேழு ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கப்பெற்ற இந்திய இதழியலும், நூற்று அறுபத்தேழு ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கப்பெற்ற தமிழ் இதழியலும் இன்று வியத்தகு வளர்ச்சியைப் பெற்றிருக்கின்றன. அத்தொடர்ச்சியான வளர்ச்சியில் இந்தியாவின் தென்கோடியில் அமைந்திருக்கும் கன்னியாகுமரி மாவட்டத்தின் தலைநகரான நாகர்கோவிலுக்கும் ஒரு பெரும்பங்கு அமைந்திருக்கின்றது.

1840ஆம் ஆண்டிலிருந்து 19ஆம் நூற்றாண்டின் இறுதி வரையில் நாகர்கோவிலிலிருந்து வெளிவந்த இதழ்களை ஆய்வு செய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## ஆய்வின் இடர்ப்பாடுகள்

1840ஆம் ஆண்டு முதல் 1900ஆம் ஆண்டு வரை தமிழ் இதழியல் துறையில் நாகர்கோவிலின் பங்கு குறித்து ஆய்வு மேற்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டபோது கட்டுரையாளர் மிகுந்த இடர்ப்பாடுகளைச் சந்திக்க வேண்டி இருந்தது. 19ஆம் நூற்றாண்டில் வெளிவந்த இதழ்கள் குறித்த சரியான தகவல்கள் முறையாகப் பாதுகாத்து வைக்கப்படவில்லை. ஏன் இந்நிலை? இந்நாள் குமரி மாவட்டத்தின் வரலாற்றினை அறிந்துகொள்வது இதற்கு விளக்கமாக அமையும்.

இன்று கன்னியாகுமரி மாவட்டம் என்று பெயர் பெற்றுள்ள இப்பகுதி அந்நாளில் தென் திருவிதாங்கூர் என்று அழைக்கப் பெற்றது. அகஸ்தீஸ்வரம், தோவாளை, விளவங்கோடு, கல்குளம் ஆகிய நான்கு வட்டங்கள் அடங்கிய பகுதியே அன்றைய தென்திருவிதாங்கூர் ஆகும்.

இப்பகுதி, ஏழாம் நூற்றாண்டு வரை ஆய் மன்னர் வழி வந்தவர்களாலும் பத்தாம் நூற்றாண்டு வரை பாண்டியர்களாலும் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை சோழர்களாலும் 1729 வரை வேணாட்டு மன்னர்கள், பிற்காலப் பாண்டியர்கள், நாயக்கர்கள், முகமதியர்கள் எனப் பலராலும் 1729 முதல் 1948 வரை திருவிதாங்கூர் சமஸ்தானத்தினராலும் ஆளப்பட்டது.

1956ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதிக்குப் பின்னரே தென்திருவிதாங்கூர் 'கன்னியாகுமரி' எனப் பெயர் பெற்றது. பல தலைமைகளின்கீழ் ஆளப்பட்டு வந்ததால் இப்பகுதியின் பல துறைகளின் வரலாற்று உண்மைகள் முறையாகப் பாதுகாத்து வைக்கப்படவில்லை. குமரி மாவட்டம் கேரளத்திலிருந்து பிரிக்கப்பட்டபோது நிர்வாக வசதியின் பொருட்டு, பல துறைகள் சார்ந்த குறிப்புகள், கேரளத்திற்கும் தமிழ்நாட்டிற்குமாகப் பிரிந்து சென்றன. இதனால், பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் இதழியல் வரலாற்றில் நாகர்கோவிலின் பங்கு குறித்த செய்திகளை அறிவது கடினமாகவே உள்ளது.

## ஆய்விற்குரிய இதழ்கள்

1840ஆம் ஆண்டு முதல் 1900ஆம் ஆண்டு வரை நாகர்கோவிலிலிருந்து பின்வரும் இதழ்கள் வெளிவந்தன:

*சுவிசேஷ பிரபல விளக்கம் (1840)*
*பாலதீபிகை - சிறுவர் இதழ் (1852 வரை)*
*தர்மப்புள்ளி போதம் (1859)*
*தேசோபகாரி (1861)*
*தென்திருவிதாங்கூர் கிறித்துவ தூதன் (1863)*
*சுவிசேஷ தூதிகை (1865)*
*சத்திய வேதக்கொடி (1882)*
*தீர்க்க தரிசன வர்த்தமானி (1884)*
*தீர்க்க தரிசன சுப்பிரதீபிகை (1889)*
*கிறிஸ்தவன் (1890)*[3]

இப்பட்டியலில் உள்ள இதழ்களில் தேசோபகாரி, சுவிசேஷப் பிரபல விளக்கம், சுவிசேஷ தூதிகை ஆகிய மூன்று இதழ்கள் பற்றிய செய்திகளையும் பட்டியலில் இல்லாத மாதர்போதினி என்னும் இதழையும் மட்டுமே கள ஆய்வில் காணமுடிந்தது.

## கிறித்தவர்களின் வருகையும் இதழ்களும்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தென்திருவிதாங்கூரில் வெளிவந்த இதழ்கள் அனைத்துமே கிறித்தவ சமயத்தினரால் வெளியிடப்பட்டவை. 18, 19ஆம் நூற்றாண்டுகளில் தென் திருவிதாங்கூரில் நிலவிய கடுமையான தீண்டாமையே கிறித்தவம் இப்பகுதியில் நுழைவதற்கான முதன்மைக் காரணமாகும் என்று கூறமுடியும். குமரி மாவட்டத்தில் உள்ள மயிலாடி என்னுமிடத்தைச் சேர்ந்த மகாராஜன் வேத மாணிக்கம் என்பவர் தரங்கம்பாடியில் தமிழ் பயின்று வந்த இலண்டன் மிஷனைச் சேர்ந்த போதகரான சங். உல்லியம் தொபியாஸ் றிங்கல் தௌபே என்பவரைச் சந்தித்து, தென் திருவிதாங்கூர் பகுதிக்குச் சமயப் பிரசாரம் செய்ய வருமாறு கேட்டுக் கொண்டார். 1806ஆம் ஆண்டு மயிலாடியில் தென்திருவிதாங்கூர் சீர்திருத்த சபையாகிய இலண்டன் மிஷன் தொடங்கப்பட்டது. 1809ஆம் ஆண்டில் இலண்டன் மிஷனின் முதல் ஆலயம் உருவானது.[4]

## திருவிதாங்கூரின் முதல் அச்சகம்

1818இல் மிஷனரியாய் வந்த சங். சார்லஸ் மீட் ஐயரவர்கள் தமிழும் மலையாளமும் மிகுதியாகப் பேசப்படும் இப்பரந்த நிலப்பகுதியில் கிறித்து மார்க்கத்தின் அடிப்படை உபதேசங்களைப் போதிக்க ஓர் அச்சகம் மிகவும் அவசியம் என்பதை உணர்ந்தார்.

சன்மார்க்க நூல்களையும், வினாவிடை, பள்ளிப்பாட நூல்கள் முதலியவற்றையும் அச்சிட்டு வெளியிடுவது நன்மை பயக்கும் எனக் கருதினார். 1819இல் தம் விருப்பத்தைத் தலைமைச் சங்கத்தாருக்குத் தெரிவித்து அவர்கள் இசைவைப் பெற்று, தரங்கம்பாடியிலிருந்து அச்சு இயந்திரமும் உபகரணங்களும் கொண்டுவந்ததோடு, அச்சுத் தொழிலில் தேர்ச்சி பெற்ற தாவீது மேஸ்திரியையும் வேறு சிலரையும் அழைத்து வந்து, அச்சகம் ஒன்றை 1821 ஏப்ரல் முதல் தேதி அன்று நாகர்கோவிலில் நிறுவினார். திருவிதாங்கூரின் முதல் அச்சகம் இதுவேயாகும். அச்சகத்துடன் NAGERCOIL TRACT SOCIETY என்னும் துண்டுப் பிரசுரக் கழகமும் நிறுவப்பட்டது.[5] திருவிதாங்கோட்டு மிஷன் சார்பாக நாகர்கோவில், நெய்யூர், கொல்லம் ஆகிய மூன்று இடங்களில் அக்காலத்தில் அச்சுக்கூடங்கள் நிறுவப்பட்டிருந்தன.[6]

அச்சுத்துறையைத் தென்திருவிதாங்கூரில் காலூன்ற வைத்த கிறித்தவ சமயத்தார், Protestent பிரிவைச் சார்ந்தவர் ஆவர். இவர்கள் தங்கள் மதப்பிரச்சாரத்திற்குப் பயன்படும் வகையில், சென்ற 19ஆம் நூற்றாண்டில் இதழ்களை வெளியிட்டுள்ளனர். இது குறித்து விரிவான விவரம் அறியவும் வேறு பல செய்திகள் தெரியவும் அவ் இதழ்களை ஆய்வுக்கண்கொண்டு நோக்குவது அவசியம்.

### சுவிசேஷ பிரபல விளக்கம் (1840)

இப்பத்திரிகையைப் பற்றி 'மாதர்போதினி' என்ற இதழில் பின்வருமாறு ஒரு விளம்பரம் காணப்படுகின்றது:

A monthly Publication, 8 pages, 8 vo containing incidents of Missionary Labour and Success in all parts of the world, collected from Journals and reports of various Evangilical Societies.

N.B. orders for the 'Messengar' or 'Gleaner' with remitance, to be sent to the Rev. J. Duthic, Nagercoil.

Annual Subscription to either of the magzines (Exclusiva of postage) 2 annas per copy - 12 copies can be sent for half anna postage, and 25 copies for 1 anna.[7]

சுவிசேஷ பிரபல விளக்கம் இதழானது மிஷனரியின் நடவடிக்கைகளையும் செயல்பாடுகளையும் வெற்றிகளையும் வெளியிடக்கூடிய ஓர் இதழாக அமைந்திருக்கின்றது.

## இதழின் காலம்

டாக்டர் ஜான்மர்டாக் வெளியிட்டுள்ள பட்டியலில் சுவிசேஷ பிரபல விளக்கம் 1840இல் வெளிவந்துள்ளது எனக் குறிப்புள்ளது.[2] தேசோபகாரி இதழில் 1934ஆம் ஆண்டு மறைத்திரு கே.ஏ. ஜேக்கப் ஐயர் தேசோபகாரி இதழ் இடைவெளிக்குப் பிறகு மீண்டும் வெளிவரத் தெடங்கியபோது விடுத்த அறிக்கையில் சுவிசேஷ பிரபல விளக்கம் இதழ் நின்று போவது குறித்தும் தெரிவித்துள்ளார் (தேசோபகாரி இதழ் பற்றிய செய்திகளில் அறிக்கை குறிக்கப்பட்டுள்ளது). எனவே 1840 முதல் 1940 வரை (94 ஆண்டுகள்) இவ்விதழ் வெளிவந்துள்ளது என்று கருதலாம்.

இவ்விதழின் அமைப்பு, படைப்பு ஆகியவற்றைப் பற்றி அறிந்து கொள்ளும் முன், இவ்விதழ் தொடர்பாகச் சொல்ல வேண்டிய செய்தி ஒன்று உண்டு.

தேசோபகாரி இதழின் 125ஆவது ஆண்டு சிறப்பு மலரில் பாளையங்கோட்டையைச் சார்ந்த R.S. ஜேக்கப் என்பார் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். 'தேசோபகாரி எனும் நேசோபகாரியே!' என்ற கட்டுரையில் "...... சுவிசேஷ பிரபல விளக்கம் குமரிப் பேராயத்தில் இப்பொழுது இல்லை. ஆனால் நெல்லையில் 'சுவிசேஷ பிரபல்ய வர்த்தமானி' என்ற பெயரில் இன்றளவும் நடந்து வருகிறது. . . ." (ப.32) என்று குறித்துள்ளார். இக்குறிப்பு பல வினாக்களை எழுப்பவே விடைகள் வேண்டி, கட்டுரையாளர் பாளையங்கோட்டை சென்று அக்கட்டுரையின் ஆசிரியரைச் சந்தித்த போது விளக்கங்கள் கிடைத்தன. சுவிசேஷ பிரபல விளக்கம் இதழிற்கும், சுவிசேஷப் பிரபல்ய வர்த்தமானி இதழிற்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதும், அக்கருத்து ஆராயாமல் எழுதப்பட்டது என்பதும் தெளிவாகியது.

## இதழின் அமைப்பும் பிற தகவல்களும்

சுவிசேஷ பிரபல விளக்கம் - பார்வைக்குக் கிடைத்த இதழ்கள், 1912, 1914, 1915, 1916 ஆகிய ஆண்டுகளின் சில இதழ்கள்.

## மாத இதழ்

> 8 பக்கங்களைக் கொண்டது ஓர் இதழின் விலை இரண்டு அணா. வெளியீட்டாளர் - Printed for the South Travancore Treat and Book Society at the London Mission Press - Nagercoil.

என்ற குறிப்பு இதழின் கடைசிப் பக்கத்தில் காணப்படுகின்றது. விளம்பரங்களும் படங்களும் இல்லை. பார்வைக்குக் கிடைத்த இதழ்களில், அட்டைப்படமும் இல்லை.

## ஆசிரியர்

இதழில் ஆசிரியர் பெயர் காணப்படவில்லை. இதழ் பற்றிய அறிவிப்பில் சந்தா Rev. J. Duthic பெயருக்கு அனுப்பப்பட வேண்டும் எனக் காணப்படுகிறது.

## படைப்புகள்

இதழின் 8 பக்கங்களிலும் கட்டுரைகளே நிறைந்திருக்கின்றன. அவை அனைத்துமே மதத் தொடர்பானவை என்றே சொல்ல வேண்டும். பொதுத் தலைப்புக்கள் அதிகம் இடம் பெறாத இவ்விதழ் அந்நாளில் அனைத்துத் தரப்பு மக்களிடமும் வெற்றி பெற்றிருக்குமா? என்பது சந்தேகம்.

தேசோபகாரி இதழின் படைப்புக்கள் போல், மதப்பிரச்சாரத்தைப் பொது தலைப்புகளில் இணைத்துப் படைப்புக்களை வெளியிடாமல் நேரடியாகவே கட்டுரைகள் புனையப்பட்டிருப்பது இவ்விதழின் பிரச்சார நோக்கத்தைப் புலப்படுத்துவதாக உள்ளது.

## படைப்புகளின் தன்மை

1914ஆம் ஆண்டு வெளிவந்த இதழில் ஒரு கட்டுரை 'ஓர் பிராமண வாலிபன் - (A Brahamana Lad)'. இத் தலைப்பில் அமைந்த கட்டுரையைக் கருத்தூன்றிப் படித்தால் இவ்விதழின் நோக்கம் ஐயமற விளங்கும்.

> இந்திய சுதேஷ மிஷனைச் சேர்ந்த (Dr. Dima Nath of the N.M.S.) ஒருவர் எழுதுகிறதாவது:

கடந்த ஆண்டு மே மாசத்தில் ஒரு பிராமண வாலிபன் கிறித்து மார்க்க சத்தியங்களை அறியும் பொருட்டு இந்திய சுதேச மிஷன் சம்பந்தமாய் மான்கோமறி என்னும் இடத்தில் திவ்விய ஊழியம் செய்து வருகிற ஆஜாமியிடத்தில் வந்து சேர்ந்தான். அவர் அவனை ஏற்றுக்கொண்டு அவனோடு பட்சமாய்ப் பேசினதின் பேரில் அவன் ஓர் உண்மையுள்ள வாலிபன் என்றும், அவனுடைய இனத்தான் ஒருவன் இதற்கு முன்னேயே கிறித்தவனாகி இருப்பதாகவும், அவன் மூலமாகவே இவனுக்கும் இந்த திவ்விய வெளிச்சம் கிடைத்திருப்பதாகவும் அறிந்து கொண்டார். ஆகையால், அவன் ரண்டு மாசமாக அவரோடு தங்கியிருந்து திவ்விய போதனையை அடைந்தான். இதற்குள்ளாக சுதேச போதகர் இதற்கு முன் அவனுக்கு அறிமுகமாயிருந்த ஐரோப்பியரும் சுதேசிகளுமான போதகர் மாரிடத்தில் அவனைப் பற்றி எழுதி விசாரித்தார். ஒருவராவது அவனைக் குறித்துக் குறை கூறவில்லை. அன்றியும் ஆரிய சமாஜ்சாரரின் சில சிறு தொந்தரவுகளின் நிமித்தம் அவன் தன் சொந்த இடத்தை விட வேண்டியதாயிற்று என்றும் வெளிப்பட்டது. ஆகையால் கடந்த ஜூலை மாதம் 20ஆம் தேதி ஜேம்ஸ் உல்லியம்ஸ் ஐயரால் அவனுக்கு ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. இந்த வாலிபன் 'நான் ஒருவருக்கும் பாரமாயிராமல் என் சொந்த கையால் பாடுபட்டு எனக்கு அன்ன வஸ்திராதிகளைச் சம்பாதிக்கத்தக்க ஒரு கைத்தொழிலைப் படித்து, சம்பளமின்றிக் கர்த்தருடைய ஊழியத்தைச் செய்ய வேண்டும் என்று விரும்புகின்றேன்'. அவனுக்குத் தையற்காரன் வேலையில் நோட்டம் இருப்பதைக் கண்டு அத்தொழிலை நன்றாய்ப் படித்துக்கொள்ளும் பொருட்டு ஓரிடத்திற்கு அனுப்பி இருக்கிறோம். இதுவரையிலும் அவனுடைய நடப்புகள் யாவும் திருப்திகரமாயிருக்கின்றன. கிறித்து சபையின் நன்மையை நாடும் நண்பர் யாவரும் இந்த வாலிபனைத் தங்கள் ஜெபங்களில் நினைத்துக் கொள்ளும்படி நாடுகிறோம்.[8]

இக்கட்டுரையைப் படித்த பின்பு, கிறித்துவ மதத்தார் தங்கள் மதத்திற்கு வரும் வேற்று மதத்தாரை எங்ஙனம் மதிக்கின்றனர்? அச்செய்தியை எங்ஙனம் பரப்புகின்றனர் என்பதையெல்லாம் புரிந்து கொள்ள முடிகின்றது.

கிறித்துவ மதம் இந்தியா முழுவதும் பரவ வேண்டும் என்று அன்றைய சூழலில் கிறித்துவர்கள் காட்டிய ஆர்வத்தை 'பஞ்சாப்' என்ற தலைப்பில், அமைந்த கட்டுரை விளக்குகிறது.

> சமீப காலத்தில் பஞ்சாப் நாட்டில் இருந்து ஒரு சந்தோஷமான செய்தி வந்து எட்டியிருக்கிறது. அது இந்தியாவில் சுவிசேஷப் பிரபல்யத்தை விரும்பும் யாவர்க்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்குகிறது. எப்படியெனில் அங்குள்ள ஜனசங்கியைக் கணக்கு எடுக்கப்பட்டதில் மகமதியருக்குள் யாதொரு கூடுதலும் காணப்படவில்லை. சீக்கியருக்குள் கொஞ்சம் கூடுதல் உண்டானது வாஸ்தவமே. ஆயினும் இதற்கு முன் உள்ள ஆண்டுகளைப் போல் அவ்வளவு இல்லை. ஆனால் இந்துகளுக்குள்ளே மிகவும் குறைவு உண்டாவதாகக் காணப்படுகிறது. கிறித்துவர்களின் தொகையே ஒன்றுக்கு இரண்டாகப் பெருகி இருக்கிறது. அதாவது நூறு கிறித்தவர்களுக்கு இருநூறாகப் பெருகி இருக்கிறார்கள். இரண்டு ஆண்டுகளுக்கு முன்னே அங்கே ஒரு லெட்சம் கிறித்துவர்கள்தான் இருந்தார்கள். இப்போது இரண்டு லெட்சத்திற்கு அதிகமானவர்கள் கிறித்தவர்கள். இந்துக்களுக்குள் உண்டாகி இருக்கிற குறையைவிட்டு இரண்டு வகையான அபிப்பிராயங்கள் உண்டாகின்றன. அவை என்னவெனில் மாகாமாரி நோயால் இந்துக்களில் அநேகர் மாண்டு போனதும் நூதனமாய் அவர்களில் பெரும் தொகையானவர்கள் கிராமம் கிராமமாயும், குடும்பம் குடும்பமாயும் கிறித்து மார்க்கத்தைத் தழுவிக் கொண்டது காரணமென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். எப்படியாகிலும் எம்பெருமான் இயேசு ரட்சகரே உலக இரட்சகர் என்று பஞ்சாப் நாட்டில் உள்ள ஜனங்களும் ஆய்ந்து ஓய்ந்து அறிந்து கொள்ள ஏதுவாயிற்று. ஆகையால் வட

*இந்தியாவும் வெகு சீக்கிரத்தில் அற்புத நாதரின் திருவடியை அடையும் என்பதற்கு ஐயம் இல்லை.*

*தென்னிந்தியாவே! நீ என்ன செய்யப்போகின்றாய்? சத்துவம் பொருந்திய தேவ ஆவியானவர் உன் நடுவில் ஸ்தாபிதமாகி இருக்கிற திருச்சபைகளில் கிரியை செய்யும் காலம் வந்துவிட்டது. ஆகையால் இனி தாமதியாதே. போக்குச் சொல்ல இனி இடமில்லை. இதோ வாசற்படியிலே நின்று தட்டுகிறார். அவர் சத்தத்தைக் கேட்டு உன் கதவைத் திறப்பாயாக. இதுவே ரட்சணிய நாள்.*[8]

சுவிசேஷ பிரபல விளக்கம் இதழின் படைப்புகள் அனைத்துமே மேற்கண்ட முறையில் அமைந்துள்ளன. தனது நோக்கமான மிஷனரி செயல்பாடுகள், வளர்ச்சிகள், வெற்றிகள் ஆகியவற்றிற்குத் தனது படைப்புகள்வழி இவ்விதழ் செயலாற்றி வந்திருப்பதைக் கண்டறிய முடிகிறது.

## தேசோபகாரி (1861)

"தேசோபகாரி என்னும் இப்பத்திரிகை இந்த தேசத்தின் மெய்யான உபகாரியாய்ப் பயன்படுவதற்குத் தேவன் அனுக்கிரகம் செய்வாராக" என்ற பிரார்த்தனையோடு தேசோபகாரியின் முதல் இதழ் வெளியானது.[9]

தேசோபகாரியின் முதல் இதழ் 1861ஆம் ஆண்டு ஜனவரியில் வெளிவந்தது. இவ்விதழின் முதல் ஆசிரியர் மறைதிரு பேலிஸ் ஐயர்.[10] இவ்விதழ் இன்னும் வெளிவந்து கொண்டிருக்கிறது. 125 ஆண்டுகளுக்கு மேலாக வெளிவரும் இவ்விதழ் இடையில் இருபத்து நான்கு ஆண்டுகள் வெளிவரவில்லை. 1909 டிசம்பர் மாதம் தேசோபகாரி, தன்னுடைய வாசகர்களுக்கு இதழ் பற்றிய செய்தி ஒன்றை வெளியிட்டது. அந்தச் செய்தி பின்வருமாறு அமைந்திருந்தது:

### பத்திராதிபர் குறிப்பு

*நமது பத்திரிகையை வாசிப்போருக்கு :*

*தேசோபகாரியாகிய இப்பத்திரிகை இம்மாசத்தோடு நிறுத்தலாகிறதென்று மெத்த சங்கடத்துடன்*

> தெரிவிக்கின்றோம். தமிழருக்கு உபயோகமான இப்பத்திரிகையையும் வேறு சில பத்திரிகைகளையும் பிரசுரம் செய்யும் செலவில் மிக்க பாகத்தைத் தந்துதவி உத்தரவாதமாயிருந்த சென்னைப் பட்டணத்துக் கிறித்துவக் கல்வி அபிவிருத்தி சங்கத்தார் தங்கள் மாசாந்தரப் பத்திரிகைகளில் சிலதை ஒன்று சேர்த்துப் பிரசுரிக்கத் தீர்மானித்திருக்கின்றனர். ஆகவே, இது முதல் தேசோபகாரியையும் மாதர் போதினியையும் ஒன்று சேர்த்து நலமிக்கப் பிரசுரஞ் செய்வோம். வருகிற சனவரி மாதம் முதல் தேசோபகாரி பிரசுரமாகாமல், அதில் வெளிப்படும் விஷயங்களில் மிகுதியானவை மாதர்போதினியில் நடைபெறும்.[11]

1909ஆம் ஆண்டு வெளிவந்த மேற்கண்ட அறிக்கைக்குப் பின்னர், 1934ஆம் ஆண்டு மறைதிரு. ஜே.ஏ. ஜேக்கப் ஐயர் என்பவர் பின்வருமாறு அறிக்கை ஒன்று விடுத்துள்ளார்:

> தென் திருவிதாங்கூர் இலண்டன் மிஷன் சபைகளிலுள்ள கிறித்தவர்களின் பக்தி அபிவிருத்தியைக் கருதியும் பொது முன்னேற்றத்தைக் கருதியும் ஒரு தீபிகை அச்சிட்டுப் பிரசுரஞ்செய்ய வேண்டுமெனச் சபாலோசனைச் சங்கம் தீர்மானஞ் செய்திருக்கிறது. பல ஆண்டுகளாகப் பிரசுரஞ் செய்யப்பட்டு வந்த தேசோபகாரி, மாதர்போதினி, வேதியர் விளக்கு, தர்மப்பள்ளி போதம், சுவிசேஷ பிரபல விளக்கம், சுவிசேஷ தூதிகை முதலிய மிகவும் அருமையான தீபிகைகள் நின்று போகவும் அவற்றிற்குப் பதிலாய் எல்லாக் கிறித்தவர்களுக்கும் பிரயோஜனமாகவுள்ள தீபிகைகள் பிரசுரமாகாத குறையை அகற்றும் பொருட்டு இத்தீர்மானஞ் செய்யப்பட்டது. இம் மாதாந்த தீபிகை தேசோபகாரி என்றழைக்கப்படும்.[12]

இவ்வறிக்கையின்படி 1909ஆம் ஆண்டு ஜனவரி மாதம் நின்று போன தேசோபகாரி மீண்டும் 1934ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் வெளிவரத் தொடங்கியது. இதனைக் கணக்கிட்டுப் பார்த்தால் முன்பு குறித்தபடி

இருபத்து நான்கு ஆண்டுகள், இரண்டு மாதங்கள் இதழ் வெளிவரவில்லை என்பதை உறுதி செய்யலாம்.

## அமைப்பும் பிற செய்திகளும்

இவ்விதழின் பக்க எண்ணிக்கையைப் பொறுத்தவரையில் இரு கருத்துக்கு இடமிருக்கின்றது. கட்டுரையாளரின் பார்வைக்குக் கிடைத்த 1873ஆம் ஆண்டின் தேசோபகாரி இதழ்கள் இருபது பக்கங்களையே கொண்டவையாக இருக்கின்றன. ஆனால் இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் 1950க்குப் பிறகு பக்கங்களின் எண்ணிக்கையில் நிரம்ப வேறுபாடுகள் இருக்கின்றன. இது குறித்து இதழ் வெளியீட்டாளர்கள், "பக்கங்களின் அதிகபட்ச அளவு இருபதிலிருந்து முப்பத்திரண்டிற்குள் எனக் கொண்டாலும் பக்க அளவில் மாற்றங்கள் ஏற்படலாம். குறிப்பிட்ட பக்க அளவு கிடையாது"[13] எனக் கருத்து தெரிவிக்கின்றனர்.

இவ்விதழின் பக்க எண்கள், ஆண்டின் முதல் இதழின் முதல் பக்கம் ஒன்று எனக் குறிக்கப்பட்டு ஆண்டு இறுதியில் இருநூற்று நாற்பது என முடிகிறது. 1873ஆம் ஆண்டில் வெளிவந்த இதழ்களைப் பார்வையிடும் வாய்ப்பு கிட்டியபோது இதனை அறிய முடிந்தது. ஒரு மாத இதழின் பக்கங்கள் இருபது என்ற அளவிலேயே அன்று இருந்திருக்கின்றன. ஒவ்வொரு ஆண்டின் மொத்த இதழ்களும் தொகுதி என்ற அளவில் கணக்கிடப்படுகின்றன.

## விலை

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தேசோபகாரி இதழின் ஆண்டுச் சந்தா 6 அணா. இத்தகவலை 1899ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வெளிவந்த 'மாதர்போதினி' என்ற இதழில் காணமுடிகிறது. 1988இல் இவ்விதழின் ஆண்டுச் சந்தா ரூ.15.

## வெளியீட்டாளர் - ஆசிரியர்

ஒவ்வொரு இதழின் கடைசி பக்கத்திலும் Printed for the Christian Literature Society for India at the London Mission Press, Nagercoil என்ற குறிப்பைக் காணலாம்.

*1861 முதல் 1979 வரையில் இதழாசிரியர்களாக இருந்தவர்களின் விவரம்:*

| ஆண்டு | ஆசிரியர் பெயர் | பணியாற்றிய காலம் ஆண்டு | மாதம் |
|---|---|---|---|
| 1861 ஜனவரி-1877 மே | மறைதிரு F.பேலிஸ் ஐயர் | 16 | - 4 |
| 1877 மே-1909 டிச. | மறைதிரு Faster | 32 | - 7 |
| 1910 ஜனவரி-1934 மார்ச்சு | பத்திரிகை வரவில்லை | 24 | - 2 |
| 1934 ஏப்ரல்-1935 ஜூலை | மறைதிரு J.A. ஜேக்கப் ஐயர் | 1 | - 3 |
| 1935 ஜூலை-1953 ஜூலை | எஸ்.ஏ. அசரையா | 18 | - 0 |
| 1953 - 1959 ஜூன் | மறைதிரு J.A. ஜேக்கப் ஐயர் | | |
| 1959 ஆகஸ்டு - 1967 மே | வி.டி.சகாயம் ஐயர் | 7 | - 3 |
| 1967 ஜூன் - 1970 ஜூன் | மறைதிரு எட்வர்ட் சாம் ஐயர் | 3 | - 0 |
| 1970 ஜூலை - 1973 செப். | மறைதிரு ஏ.கிறிஸ்துதாஸ் | 3 | - 2 |
| 1973 அக். - 1976 செப். | மறைதிரு எட்வர்ட் சாம் ஐயர் | 2 | - 11 |
| 1976 மே - 1977 ஏப்ரல் | எஸ்.பதி. ஐயர் | 0 | - 6 |
| 1977 மே - 1979 ஆகஸ்டு | மறைதிரு சி. சாமுவேல் ஐயர் | 2 | - 3 |
| 1979 ஆகஸ்டு - | ஏ.ஜே.எம். கேசிரி ஐயர்[14] | | |

### படங்கள்

இதழ்கள் அனைத்தும் அழகிய படங்களால் நிறைந்துள்ளன.

> இவற்றிற்கான அச்சுக்கட்டைகள் (Blocks) இங்கிலாந்து தேசத்திலிருந்து நல்நம்பிக்கை முனையைச் சுற்றிக் கப்பல் மார்க்கமாய்த் தருவிக்கப்பட்டன.[15]

படங்கள் அனைத்தும் படைப்பின் தன்மையை விளக்கும் வகையில் அமைந்திருக்கின்றன. படங்கள் வரையப்பட்டுப் பின் அச்சுக் கட்டைகளாக்கப் பட்டிருக்கின்றன. ஓவியக் கலை, அச்சுக் கலை என இரு கலைகளின் சிறப்பு வெளிப்பாடுகளாகப் படங்கள் அமைந்திருக்கின்றன.

### படைப்புகள்

ஓர் ஆண்டுக்கு உரிய படைப்புகள் அனைத்தும் திட்டமிடப்பட்டு ஆண்டின் முதல் இதழிலேயே வெளியிடப் படுகின்றன.[16] படைப்புக்களில் பெரும்பாலும் கட்டுரைகளே

முதன்மை வகிக்கின்றன. ஓர் இதழில் சுமார் ஆறு அல்லது ஏழு கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. அவை பொதுவாக மூன்று பக்க அளவில் அமைந்துள்ளன.

கிறித்தவப் பெரியார்களின் வாழ்க்கை வரலாற்றுத் தொடர்கள், மதத் தொடர்பான பாடல்கள், ரோமன் மார்க்கம், பழைய, புதிய ஏற்பாடுகளின் சரித்திர சம்பந்தம், சமாச்சாரத் திரட்டு போன்றவை தொடர்ந்து வெளிவந்திருக்கின்றன. தாவர சாஸ்திரப் பாடங்கள் என்றொரு தொடர் முப்பத்தைந்து மாதங்கள் வெளிவந்திருக்கின்றது. படைப்புக்களின் தலைப்புக்கள் ஆங்கிலத்திலும் தமிழிலும் அச்சடிக்கப்பட்டுள்ளன. படைப்புக்களை எழுதியவர்களின் பெயர்கள் குறிக்கப்படவில்லை. தலையங்கம், தனியார் விளம்பரங்கள், புகைப்படங்கள் இவற்றைப் பத்தொன்பதாம் நூற்றாண்டு இதழ்களில் காண முடியவில்லை.

## படைப்புகளின் தன்மைகள்

தேசோபகாரி இதழின் படைப்புகளை இரு வகைப்படுத்தலாம். ஒன்று மதத் தொடர்புடையவை; மற்றொன்று பொதுத் தலைப்புகள். பெரும்பாலும் படைப்புகளின் நோக்கம் மதப் பிரச்சாரமாக இருந்தாலும் சமூகக் கொடுமைகள், சமூகப் பிரச்சினைகள் பற்றிய செய்திகளும் இடம்பெற்றுள்ளன. பார்வைக்கு 1871, 1873, 1876, 1877ஆம் ஆண்டுகளுக்குரிய இதழ்கள் சில கிடைத்தன. அவற்றின் சுவையான படைப்புகள் சிலவற்றைப் பார்ப்பதற்கு முன் சில தலைப்புகளை மட்டும் காணலாம். இவற்றின் மூலம் இதழின் படைப்புக்களின் தன்மையினைக் குறித்த ஒரு பார்வை கிடைக்கும்.

விஷ்ணு (1873 - ஜூலை)
சென்னைப் பட்டணத்தின் அதிகரிப்பு (1873 - ஜூலை)
சீனச் சிறுவர்களின் விளையாட்டு (1873 - ஜூலை)
ஸ்திரீகளைப் பற்றிய பழமொழிகள் (1871 - ஜூலை)
ஜில்லா கோர்ட்டு நீதியதிபர் (1873 - பிப்.)
சோம்பி மனையாளும் சுறுசுறுப்பு மனையாளும் (1877-ஏப்ரல்)
வீட்டு ஈக்களின் பிரயோசனம் (1876 - ஜனவரி)

இனி, படைப்புகள் தெரிவிக்கும் செய்திகளை அறிய சில கட்டுரைகளைக் காணலாம். முதலில் மதத்திற்கு முதன்மை கொடுத்து

வெளிவந்த எண்ணற்ற கட்டுரைகளில் ஒன்றை அறியலாம். 1873ஆம் ஆண்டு வெளியான கட்டுரை, 'விஷ்ணு'. இக்கட்டுரையில் இருந்து ஒரு பகுதி :

> விஷ்ணுவின் தோற்றங்களில் ஒன்று கிருஷ்ணாவதாரம். இந்த கிருஷ்ணனுக்கும் லோக ரட்சகராக உற்பவித்த இயேசு கிறிஸ்துவுக்கும் சரித்திர விஷயங்களில் அற்ப சொற்ப ஒற்றுமை இருக்கிறதினாலே அவர்கள் இருவரும் ஏகமென்பதாக அறிவாளிகளான சில இந்துக்கள் தந்திரமாய்ப் பேசுகிறதுண்டு. ஆனால் மரமானது தன் கனிகளால் அறியப்படுவது போல, மனிதரும் தேவர்களும் தங்கள் நடக்கையினால் நிதானிக்கப்பட வேண்டியவர்கள். கிருஷ்ணனுடைய நடப்புகள் மகா கேவலமான பாவாத்துமாவுக்கு உரியவைகள். ஆதலின் அவைகளை எழுத்தில் விஸ்தரிப்பதுதானே தகுதியல்ல. கிறிஸ்துவோ மாசற்ற தெய்வாத்துமாவானவர். கிருஷ்ணனாலே உலகத்துக்கு யாதொரு சற்பிரயோசனமும் வரவில்லை. தேவ மனிதனாகிய கிறிஸ்துவோ மனிதர்களுக்குச் சத்திய மார்க்கத்தை உபதேசித்து, சற்பிரவையான முன்மாதிரி காண்பித்து, சர்வ லோகத்தின் பாவத்துக்காவும், தம்மையே தேவகோப சாந்திப் பலியாக ஒப்புக் கொடுத்து, இவ்வளவாய் உலகத்தாரில் அன்பு கூர்ந்தார். அவரை ரட்சகராகப் பற்றிக் கொள்ளுகிறவர்கள் ஈடேறுவார்கள். நாம் ரட்சிப்படைவதற்கு அவர் நாமமேயல்லாமல் வேறொரு நாமம் பூமியெங்கும் கட்டளையிடப்படவில்லை.[7]

இக்கட்டுரையில் இந்து மதக் கடவுளாகிய விஷ்ணுவை எதிர்மறையாக விமரிசித்திருப்பதை உணரலாம். மதத் தொடர்பான கட்டுரைகளில் எல்லாம் இவ்வணுகுமுறையைக் காணமுடிகிறது.

இக்கட்டுரை 1861 ஜனவரியில் வெளிவந்த தேசோபகாரியில் பிரசுரமாகியுள்ளது. இக்கட்டுரையைப் போன்றே பல சுவையான படைப்புகளை நாகர்கோவிலிலிருந்து வெளிவந்துள்ள இதழ்களில் காணமுடிகிறது.

பொதுத் தலைப்புகளில் வெளியான கட்டுரைகளில் இல்லத்தரசிகளுக்குப் பயன்படும் வகையில் பாடலுடன் கூடிய கட்டுரை ஒன்று, 'சோம்பி மனையாளும் சுறுசுறுப்புள்ள மனையாளும்' என்ற தலைப்பில் வெளியாகியுள்ளது. இந்தப் பாடலைக் கும்மி மெட்டில் அமைத்து எழுதியிருப்பவர் THOMAS TUSSER.

நேரம் விடிந்ததும் அனந்தலாடி - வெகு
நேரம் உறங்குவாள் சோம்பேறி;
வாரணம் கூவுதல் கேட்டவுடன் - நித
வாடிக்கையாகவே நற்பாரி - துயில்
ஓடிக்கலைய எழும் விரி
தூற்றும் செய்தி கொண்டு, நேரம் போக்க - வீடு
தோறும் திரிவாளே சோம்பேறி;
ஆற்றலுடனே தன் வீட்டுக் காரியத்தை
ஆய்ந்து புரப்பாளே நற்பாரி - இவள்
மாந்தர் குலத்தினில் பெண் வீரி.[18]

இவ்வாறு தொடரும் பாடலின் இறுதியில் இப்படியோர் கேள்வியுடன் கட்டுரை நிறைகிறது.

> புருஷர்கள் வீட்டிலே சுகத்தைக் காணாத போது, சாராயக்கடைக்குப் போக மனம் வைப்பார்கள். இந்தியாவிலும் இவ்வாறு நடக்கிறதில்லையா? நாரிமார் தங்கள் வீடுகளைக் கணவர்களுக்கு மனோகரமாக்கு கிறதினால் அவர்களில் ஸ்திரமற்றவர்களும் குடியருமானவர்களைச் சீர்திருத்தக் கூடாதா?[19]

'ஜில்லா கோர்ட்டு நீதியதிபர்' என்ற தலைப்பில் பிப்ரவரி மாதம் 1873ஆம் ஆண்டு ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. நையாண்டி (Satire) பாணியில் அமைக்கப்பட்டிருக்கும் இக்கட்டுரை அக்காலத்தில் ஜில்லா கோர்ட்டு நீதியதிபர் எங்ஙனம் திகழ்ந்திருக்கின்றனர் என்பதற்கு ஒரு விளக்கமாக அமைகிறது.

> பகல் உஷ்ணத்தின் நிமித்தம் நியாயாதிபதி கச்சேரியின் வெளிப் பிரகாரத்தில் ஆசனம் போட்டருக்கிறார். அவர் தமக்கு மேலே தொங்குகிற ஒரு பங்காவை இழுத்து விடுகிறதினால் செயற்கையான இளங்காற்று வீசிக்

> கொண்டிருக்கிறது. அவர் பக்கத்தில் இரண்டு குமாஸ்தாக்கள் தரையிலே உட்கார்ந்திருக்கிறார்கள். முன்புறத்தில் கை விலங்கிட்ட ஒரு குற்றவாளியைக் கொண்டு வந்துவிட்டு, நாயக்கரும், சிப்பாயிகளுமான கூட்டத்தார் வரிசையாய் நிற்கிறார்கள். நீதியதிபர் மேசையின் மேல் காலைத் தூக்கிப் போட்டிருக்கிற விதம் சிரிப்புக்கிடமாய் இருக்கிறது. அப்படி இருந்தாப் போலே அவர் அருகே நிற்கிற ஒலி சிப்பாயியைக் கூப்பிட்டு, "குயி ஹை அக் லாவூ" என்பார். தற்கணமே அச்சேவகன் ஓடிப்போய் நெருப்புக் கொண்டு வந்து கொடுப்பான். நியாயாதிபதி அதிலே சுருட்டுப் பற்றவைத்து, விசாரணை நடக்கும் நேரமெல்லாம் புகை வலித்துக் கொண்டிருப்பார்.[20]

இந்த ரீதியில் தொடரும் கட்டுரை இப்படி முடிகின்றது:

> முற்காலத்தில் இவ்வகுப்பு உத்தியோகங்களில் காலி உண்டாகும்போது, எடுத்தாப்போல் யாரையும் தெரிந்து நியமிப்பார்கள். இப்போதோ சாமர்த்தியவான்களைத் தெரிந்தேற்படுத்தும் பரீட்சை முறைமை ஏற்பாடாயினதால், நீதி சாஸ்திரம் கற்றுத் தேறி அதில் கடினமான பரீட்சை கொடுக்கிறவர்களேயன்றி, ஏனையோர் உத்தியோகம் பெறுவதற்கு இடமில்லை. இந்துக்களிலும் சிலர் சோதனை கழிந்து, இவ்வகை ஸ்தானங்களுக்கு யோக்கியராகக் காணப்பட்டிருக்கிறார்கள். இனி காலஞ் செல்லவே இந்துக்களிலும் மகமதியரிலும் அனேகர் துரைத்தன அலுவல்களுக்காகத் தாயதி பண்ணுவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை.[21]

கிறித்தவர்கள் அல்லாதவர்களும் எல்லாத் துறைகளிலும் முன்னேறத் தொடங்கிய கால கட்டத்தைப் படம் பிடித்துக் காட்டும் விதமாக அமைந்த கட்டுரை இது. ஒவ்வொரு இதழின் கடைசிப் பக்கத்திலும் 'சமாச்சாரத் திரட்டு' (Summary of News) என்ற தலைப்பில் உலகச் செய்திகளை வெளியிட்டு, மக்களின் பொது அறிவை வளர்ப்பதில் தேசோபகாரி ஆர்வத்தோடு தன்னை ஈடுபடுத்திக் கொண்டது.

### *1988இல் தேசோபகாரி*

*1988இல் வெளிவந்த தேசோபகாரி இதழினை ஆய்வு நோக்கத்துடன் அணுகினால் ஒரு நூற்றாண்டுக்குப் பின் இவ்விதழ் பல விதங்களில் மாறியிருப்பதைப் புரிந்துகொள்ள முடிகின்றது. வடிவமைப்பில் இதழ் அப்படியே இருந்தாலும், வழங்கும் செய்திகளில் அன்றைய அளவு சமூக நோக்கு இருப்பதாகக் கொள்ள முடியவில்லை. அன்றைய தேசோபகாரியில் பொதுவாக, ஒரு சில சகோதர இதழ்கள் பற்றிய விளம்பரங்களைத் தவிர விளம்பரங்கள் என எதையும் காண முடியவில்லை. கிறித்தவ மதத்தாரின் சடங்குகளையும் நிகழ்வுகளையும் பகிர்ந்து கொள்ளக் கூடிய ஒரு குடும்பப் பத்திரிகையாகவே இன்று தேசோபகாரி வெளிவந்து கொண்டிருக்கிறது என்று கருதலாம்.*

### *சுவிசேஷ தூதிகை (1865)*

A monthly publication, 8 pages. 8vo. Suited especially to native christians. Its object is by Gods blessing to arrouce the careless to direct the anxious Enquirer, and to compfort, and Belivers. Edited by the Rev. G. PARKER. B.A., Nagercoil.

*சுவிசேஷ தூதிகை மாத இதழினைப் பற்றிய ஒரு விளம்பரம் மேற்கண்டவாறு மாதர்போதினி இதழின் 1907ஆம் ஆண்டின் 111ஆவது இதழின் கடைசிப் பக்கத்தில் காணப்படுகிறது. இவ்விதழ் குறித்துத் தெளிவு பெற வேண்டிய செய்தி ஒன்று உள்ளது. ஜான்மர்டாக் வெளியிட்டுள்ள 19ஆம் நூற்றாண்டு இதழ்கள் பட்டியலில் "சுவிசேஷ தூதிகை - 1865,* The South Travancore Christian Messenger - 1863",[22] *என இரு இதழ்களின் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. ஆனால் பார்வைக்குக் கிடைத்த இதழின் தலைப்பானது,* The South Travancore Christian Messanger, *சுவிசேஷ தூதிகை என்று உள்ளது.*

*பார்வைக்குக் கிடைத்த இதழ் 1912ஆம் ஆண்டு* vol.50. *இதனைக் கருத்தில் கொண்டு கணக்கிட்டால் முதல் இதழானது 1862ஆம் ஆண்டு வெளிவந்திருக்க வேண்டும். எனவே, ஜான்மர்டாக் குறிப்புப்படி* 'The South Travancore Christian Messanger - 1863' *எனக் குறிக்கப்பட்டுள்ள இதழின் ஒரு படிவம்தான் பார்வைக்குக் கிடைத்திருக்கவேண்டும். 1862இல்* 'The South Travancore Christian Messanger' *என்ற ஓர் இதழும், 1865இல் சுவிசேஷ தூதிகை என ஓர்*

இதழும் தனித்தனியே வெளிவந்திருக்குமோ என்பது கேள்விக் குறியே! இதழாய்வாளர் சோமலேயின் தமிழ் இதழ்கள் நூலில் சில பழைய இதழ்கள் பற்றிய விவரங்கள் வரிசையில் "1863 - தென் திருவிதாங்கூர் கிறிஸ்துவ தூதன் : இந்த ஆண்டில் வெளிவந்தது"[23] எனக் குறிக்கப்பட்டுள்ளது. இக்குறிப்பு The South Travancore Christian Messanger - 1863 எனக் குறித்துள்ளதன் மொழிபெயர்ப்பேயன்றி ஆய்ந்து அறிந்த கூற்று அல்லவோ என்று சிந்திக்க வேண்டியுள்ளது. இனி பார்வைக்குக் கிடைத்த The South Travancore Christian Messanger - சுவிசேஷ தூதிகை - இதழ் பற்றிய செய்திகளைக் காண்போம்.

## வெளியீட்டாளர்

Printed for the S. Travancore Tract and Book Society at the L.M. Press. Nagercoil என்ற குறிப்புக் காணப்படுகின்றது.

ஜனவரி மாத இதழில் முதல்பக்கம் ஒன்று என எண்ணிட்டு டிசம்பர் மாதம் 96 என முடிகின்றது. பார்வைக்குக் கிடைத்த ஜூலை மாத இதழ் ஒன்றின் கடைசிப் பக்கம் 56 என முடிவதிலிருந்து இதனை நாம் உறுதி செய்து கொள்ளலாம். பார்வைக்குக் கிடைத்த 1909, 1912, 1915 ஆகிய ஆண்டுகளின் இதழ்களில் விளம்பரங்கள், படங்கள், புகைப்படங்கள், தலையங்கங்கள் எதுவும் காணப்படவில்லை. அட்டைப்படங்களும் இல்லை.

## இதழின் காலம்

1862ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற இப்பத்திரிகை, தேசோபகாரியின் 1934ஆம் ஆண்டு இதழில் வெளியான அறிக்கையின்படி (அறிக்கை, தேசோபகாரி இதழ் பற்றிய செய்திகளில் குறிக்கப்பட்டுள்ளது) 1934 வரை வெளிவந்திருக்க வேண்டும். எனவே இவ்விதழானது 1862 முதல் 1934 வரை 72 ஆண்டுகள் வெளிவந்திருக்கும் என்று கருதலாம்.

## படைப்புகள்

ஆண்டவன் அருளால் திக்கற்றவர்களுக்கு ஆசி வழங்கலும் வேட்கையுள்ள மனிதர்களை வழிப்படுத்தலும் நம்பிக்கையுடைய வர்களை வளரச் செய்தலும் ஆகிய இவற்றை நோக்கமாகக் கொண்டு செயல்பட்ட இவ்விதழின் படைப்புக்கள் அனைத்தும் மதத்

தொடர்பானவைகளாகவே உள்ளன. 1840இல் வெளிவந்த சுவிசேஷ பிரபல விளக்கமும் 1862இல் வெளிவந்த சுவிசேஷ தூதிகையும் மதத் தொடர்புடைய படைப்புகளையே வெளியிட்டிருக்கின்றன. சில கட்டுரைத் தலைப்புகளால் இதழின் நோக்கமும் தன்மையும் விளங்கும்.

1909 The Obedience of faith
விசுவாசத்தின் கீழ்ப்படிதல்.

1912 A wife's Prayer Answord
ஒரு மனைவியின் ஜெபம் கேட்கப்பட்டது.

1915 Going About doing God
நன்மை செய்கிறவராகச் சுற்றித் திரிதல்.

இத்தகைய முறையிலேயே கட்டுரைத் தலைப்புகளும் கட்டுரைகளும் அமைந்திருக்கின்றன. இதழின் படைப்புகள் அனைத்துமே கட்டுரை வடிவிலேயே உள்ளன. கட்டுரை ஒன்றினை அதன் தன்மைக்காகச் சான்றாகக் காணலாம்:

> ..... சூம்பின கையனுக்கு ஓய்வு நாளில் சுகமளித்ததால் குற்றம் பிடிக்க நின்றோரைக் கோபத்துடன் பார்த்தவர் - தேவாலயத்தில் காணிக்கை படைத்தோரைக் கண்ணேற்றிட்டுப் பார்த்து ஏழை விதவையின் ஈவை வியந்து கூறின இயேசு - உள்ளான பக்தியை ஒழுக விட்டு வெளிவேஷ பக்தியைத் தழுவி உலகத்தை வஞ்சித்து நின்ற எருசலேமை உற்றுப் பார்த்துக் கண்ணீர் விட்ட இயேசு - தன் ஆண்டவரும் குருவுமானவரை மறுதலித்துச் சபிக்கவும் ஆணையிடவும் துணிந்த பேதுருவின் மனமுடையத் தக்கவாறு நோக்கிப் பார்த்த இயேசு - இப்போது ஆலயத்தில் எல்லாவற்றையும் சுற்றிப் பார்க்கிறார். ஆலயத்தைச் சுற்றிலும் நடந்த வியாபாரம் முதலியவற்றை வெறுப்புடன் பார்த்தார். குருடரான வழிகாட்டிகளாகிய வேதியரைப் பார்த்தார். விரியன் பாம்பின் விஷத்தையொத்த வேத பாரகரைப் பார்த்தார். அவிசுவாசிகளான சதுசேயரைப் பார்த்தார். வெளிபக்தி பூண்டு சாதாரண சனங்களை வஞ்சித்த பரிசேயரைப் பார்த்தார். அக்கிரமத்தோடே ஆசரித்த மாதப் பிறப்பையும் ஓய்வு நாளையும் சபைக்

கூட்டத்தையும் பார்த்தார். அருள்நாதருக்கு அருவருப்பான தூபங்காட்டுதலையும் பலி முதலியவற்றையும் பார்த்தார். இயேசு பெருமான் இக்காலத்தும் நம் ஆலயங்களில் சுற்றிப் பார்க்கிறார். . . . .

இவ்வாறு தொடரும் கட்டுரை, ". . . .இயேசு பெருமானின் ஆசிர்வாதம் பெற்றுக் கொள்ளத்தக்கதாக நாம் ஆலயந் தொழப் போவோமாக" என முடிகின்றது. 'இயேசு தேவாலயத்தில் பிரேவேசித்து எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தார்' என்பது இக்கட்டுரையின் தலைப்பாகும்.

## மாதர்போதினி (1895)

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெண்களுக்கெனத் தனி இதழ்கள் வெளிவந்திருக்கின்றன.

*1883* - சுகுண போதினி
*1887* - மாதர் மித்திரி, மகாராணி
*1899* - மாதர் மனோரஞ்சனி

இந்நான்கு இதழ்களும் சென்னையிலிருந்து வெளிவந்தவை. இதே கால கட்டத்தில் நாகர்கோவிலிலிருந்தும் 'மாதர்போதினி' என்ற மகளிர்க்கான இதழ் ஒன்று வெளியாகியுள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டு இதழ்கள் குறித்து, இதழாய்வாளர்கள் வெளியிட்டுள்ள பல நூல்களில் இவ்விதழ் பற்றிய குறிப்பு ஏதும் இல்லை. மயிலை. சீனி. வேங்கடசாமி, சோமலே, சு.அ. இராமசாமிப் புலவர் போன்ற அறிஞர்களின் நூல்களில் இவ்விதழ் பற்றித் தகவல் இல்லை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நாகர்கோவிலில் தோன்றி வளர்ந்த தமிழ் இதழ்களைத் தேடும் பணியில் ஈடுபட்டபோது எதிர் பாராமல் கிடைத்த இதழ் மாதர்போதினி.

## இதழின் அமைப்பு

மாத இதழ், நீளம் 21¼ செ.மீ. அகலம் 13½ செ.மீ. மேற்படி பத்திரிகை வாங்க மனசுள்ள எவர்களும் தங்கள் கையொப்பப் பணமும் ஒரு வருஷத்துக்குத் தபாற் கூலியும் நாகர்கோவிலில் இருக்கிற சங். பதி ஐயரவர்களிடம் அனுப்பி வைக்கவும். பத்திரிகை வருஷத்துக்கு 2 அணா வீதம் தாழ்ந்த கிரயத்துக்குப் பிரசுரஞ் செய்யப்பட்டு

வருவதால் கையொப்பப் பணம் முன் கொடுக்க வேண்டியுள்ளது. 5 பிரதிக்கு ½ அணாவும் 10 பிரதிக்கு 1 அணாவும் தபாற் கூலி.[24]

1912ஆம் ஆண்டு இதழ் ஒன்றில், மாதர்போதினியின் விலை வருஷம் பிரதி ஒன்றுக்குத் தபாற்கூலி இல்லாமல் கையொப்பம் அணா 6[25] என்று காணப்படுகிறது.

## வெளியீட்டாளர்

Printed for the Christian Literature Society for India, at the L.M. Press, Nagercoil. என்ற குறிப்பு 1899 ஜனவரி இதழின் கடைசிப் பக்கத்தில் காணப்படுகிறது. 1912ஆம் ஆண்டு மார்ச்சு இதழின் கடைசிப் பக்கத்தில் Printed at the C.L.S. Press, MADRAS என்று உள்ளது. 19ஆம் நூற்றாண்டின் பெரும்பகுதி காலத்தில் நாகர்கோவிலில் இருந்து இவ்விதழ் வெளிவந்திருக்கும் என நாம் கருதலாம். இதனை 1800ஆம் ஆண்டு இதழ்களைக் காண நேர்ந்தபோது அறிய முடிந்தது.

## ஆசிரியர்

பொதுவாக, சென்ற நூற்றாண்டில் வெளிவந்த மாதர் போதினி இதழ்களில் ஆசிரியர் பெயர் என்று தனியாக எதுவும் குறிக்கப் பெறவில்லை. ஆனால், 1911, 1912ஆம் ஆண்டுகளுக்கு உரிய இதழ்களில் Edited by Miss. Inglis, M.A. என்ற பெயர் காணப்படுகிறது.

## காலம்

19ஆம் நூற்றாண்டின் மாதர்போதினி இதழ் ஒன்று, அதாவது 1899ஆம் ஆண்டு ஜனவரி மாத இதழ் ஒன்று பார்வைக்குக் கிடைத்தது. இவ்விதழ் எண் 53 என்று குறிக்கப்பட்டுள்ளது. இதனைக் கொண்டு கணக்கிட்டால் மாதர்போதினியின் முதல் இதழ் 1895ஆம் ஆண்டு வெளிவந்திருக்கக்கூடும் என்று கருதலாம். 1934இல் தேசோபகாரியில் வெளியான அறிக்கைபடி (அறிக்கை, தேசோபகாரி இதழ் பற்றிய பகுதியில் குறிக்கப்பட்டுள்ளது). மாதர்போதினி இதழ் 1934இல் வெளிவருவது நின்றது. எனவே, 1895 முதல் 1934 வரை 39 ஆண்டுகள் மாதர்போதினி இதழ் வெளி வந்திருக்கக்கூடும் என்று கருதலாம்.

## பக்க எண்கள்

இருபது பக்கங்களைக் காணமுடிகின்றது. 1910ஆம் ஆண்டு ஏப்ரல் மாத இதழின் கடைசிப் பக்கம் 80 என்று முடிவதைக் கொண்டு

இதை உறுதி செய்ய முடிகின்றது. ஆனால் இப்பக்க அளவு நிரந்தரமாகப் பின்பற்றப் பட்டிருக்கின்றதா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஏனென்றால் 1912ஆம் ஆண்டில் மார்ச்சு மாத இதழில் கடைசிப் பக்கம் மொத்தம் 20 பக்கங்கள் என்ற கணக்கின்படி 60 என எண் குறிக்கப்பெற்றிருக்க வேண்டும். ஆனால் 464 எனக் குறிக்கப் பட்டுள்ளது. இது, பிற்கால இதழ்களில் பக்க அளவு கூட்டப்பட்டு இருக்கக் கூடும் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது.

### படைப்புகள்

மாதர்போதினி இதழ் தனது படைப்புகளை மக்களுக்கு அறிவு போதிக்கும் தரத்திலேயே படைத்திருக்கின்றது. மதத் தொடர்பான செய்திகளுக்கு இணையாகப் பொதுத் தலைப்புகளிலும் கட்டுரைகள் வெளியாகியுள்ளன. பெரும்பாலும் படைப்பின் வடிவம் கட்டுரையாகவே இருந்திருக்கின்றது. அவற்றின் தன்மையை அறியும் முன் சில கட்டுரைத் தலைப்புகளைக் காண்போம்.

| | |
|---|---|
| தையல் தொழிலின் சரித்திரம் | - The History of Sewing |
| தாயின் கடமை | - The Duty of the Mother |
| விதவை விவாகம் | - Widow Marriage |
| இந்திய பாலிய விதவைகள் | - Child widows in India. |
| பாட்டு | - Singing |
| தண்ணீர் | - Water |
| நேசம் | - Love |
| ஒட்டகம் | - Camel |
| யேசு நாமக் கும்மி | - The name of Jesus[26] |

### படைப்புகளின் தன்மை

மதத் தொடர்பாக வெளியான கட்டுரை ஒன்று படிப்பவரைச் சிந்திக்க வைக்கின்றது; இதன் அணுகுமுறை நம்மை வியக்க வைக்கின்றது.

> சில மாதங்களுக்கு முன்னமே ஐரோப்பிய போதகரொருவர் தமது சபையாருக்குப் பிரசங்கிக்கையில் ஒரு திருஷ்டாந்தம் சொன்னார். அது அவருடைய கண்கள் காண சில வருஷங்களுக்கு முன்னே நடந்ததான ஒரு சம்பவம். எப்படியெனில் அவர்

தங்கியிருந்த பட்டணத்துக் கடலோரமாய் மிக்க உயரமான ஒரு செங்குத்துப் பாறை இருந்தது. கவலை தாட்சியாய் அப்பாறை முகப்பில் ஏறி ஓடித் திரியும் குழந்தை குட்டிகள் கீழே சமுத்திரத்தில் மறிந்து வீழ்ந்திடாதபடி பலமான ஒரு தடுப்புச் சுவர் கட்டப்பட்டிருந்தது. சமுத்திர ஜலத்தின் ஏற்ற வள்ளம் சற்றுத் தாழ்ந்திருக்கையில் ஒரு தாயானவள் அந்தப் பாறைக்கும் சமுத்திர ஜலத்திற்கும் இடைப்பட்ட ஒடுங்கிய கரையோரமாய் நடந்து போய்க் கொண்டிருந்தாள். அப்படி அவள் போகவே, தன் தலைக்கு மேலே அந்தச் செங்குத்துப் பாறை உச்சியில் ஒரு சத்தங் கேட்டுத் திடீரென மேனோக்கிப் பார்த்தாள். பார்க்கவும் அங்கே தன் சின்ன மகள் அந்தத் தடுப்பு சுவருக்கு மேலாய்த் தலைகவிழ்ந்து கீழே எட்டிப்பார்த்த வண்ணமாய்த் தொங்கக் கண்டு அவள் கீழே விழுந்துவிடுவாளே என்ற பயங்கரத்தால் தட்டுக் குழம்பித் தடுமாறி, 'ஐயோ மகளே! அப்படித் தொங்கிப் பாராதே. வீழ்ந்திடுவாய்; அந்தப் பக்கம் சாடி தூர ஓடிப்போய்விடு' என்று கெஞ்சிக் கெஞ்சிக் கதறி சொன்னாள். ஆனால் அந்த சின்னப்பிள்ளை சற்றேனும் பயப்படாமல் புன்னைகையுடனே 'அப்பன் என்னைப் பிடித்திருக்கிறார்' என்று குசாலாய்க் கூப்பிட்டுச் சொன்னாள். அதனால் அந்தத் தாய் கிலேசம் தணிந்து அந்த மறுபக்கம் தன் மகளைச் சந்திக்க சந்தோஷமாய்ச் சுற்றியோடிப் போனாள்.

சிநேகிதரே! இதிலே நமது கவனத்திற்கேற்ற ஒரு அருமையான போதனை இருப்பதைக் காண்கிறீர்களா? கர்த்தருடைய பிள்ளைகளாக்கப்பட்டவர்கள் நாசமோசங்களில் வீழ்ந்து விடாதபடி அதரிசியமான தேவகரமானது யாருமறியாதபடி அவர்களைப் பிடித்துத் தாங்கிக் கொண்டிருக்கிறதல்லவா? 'என்னைப் பிடித்துத் தாங்கிக்கொள்ளும், அப்பொழுது நான் சுகமாயிருப்பேன் என்று சங்கீதக்காரன் மன்றாடினான். உனக்காகத் தம்முடைய தூதர்களுக்கே கட்டளையிடுவார்; உன் பாதம் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள்

> உன்னைத் தங்கள் கைகளில் ஏந்திக் கொண்டு போவார்கள்' என்று இருக்கிறதே. நமது ஜீவிய பிரயாணத்திலே எத்தனையோ தீய பாதைகளும் மோசமான பள்ளத்தாக்குகளும் குறுக்கிட்டு வந்து கொண்டிருக்கின்றன. தீவிய கரமானது நம்மைத் தாங்கிப் பிடித்திருப்பதினாலேயேதான் தீங்குக்கு விலக்கமாய்க் காக்கப்பட்டிருக்கிறோம் என்றறிக![27]

இக்கட்டுரையில் 'அப்பன் என்னைப் பிடித்திருக்கிறார்' என்று அக்குழந்தை தனது அப்பாவைக் குறிப்பிட்டுக் கூறியதைப் பரமபிதா எனக் கொண்டு போதித்தால் ஜெபிப்போர் மனதில் ஒரு பற்றுதலை உண்டாக்க முடியும் என்று பிரசங்கியார் கருதிச் செயல்பட்டிருப்பது உளவியல் அணுகுமுறை என்று நாம் சொல்லலாம்.

19ஆம் நூற்றாண்டில், மாதர்போதினி இதழ் வெளிவந்து கொண்டிருந்த காலத்தில் நிகழ்ந்த ஒரு சமூகக் கொடுமை கட்டுரையாக வடிக்கப்பட்டிருக்கின்றது.

'இந்தியாவில் பாலிய விதவைகள்' என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையை முழுமையாகக் கண்ணுறும்போது அக்கால கட்டத்தின் சமூகச் சூழலை உணர முடியும்.

> இந்து வேதங்கள் உண்டான காலத்தில் இளங்குழந்தைக்குக் கலியாணம் நடந்ததாக யாதொரு அத்தாட்சியும் இல்லை. ஆனால் பிராமணருக்கு அதிகாரம் அதிகப்படவே அவர்கள் தங்களுக்கு இலாபத்தைக் கருதி இவ்வித அநீத ஏற்பாடுகளை ஏற்படுத்திக் கொண்டார்கள். இதினால் இந்தியாவின் பெண்மக்கள் பெலன் குன்றி, ஆயுள் குன்றி அறிவு குன்றி நாளுக்கு நாள் கீழ் நோக்கிப் போகிறார்கள். கல்வியும் நாகரிகமும் விர்த்தியாகும் இந்தக் காலத்திலாவது பாலிய விவாகம் குறையாதா வென்று பார்த்தால் குறையக் காணவில்லை. போன குடி மதிப்பின் கணக்கைப்பார்க்கும்போது மனம் உருகுகிறது. எக்காலம் இந்துக்கள் தங்களது கொடிய விவாக வழக்கங்களைக் கைவிடுவார்களோ அக்காலத்தில்தான் இந்தியா ஜப்பானைப் போல ஜெயமடையும் இராஜ்யமாகும்.

*1907ஆம் ஆண்டு எடுத்த குடிமதிப்பின் கணக்கைப் பார்க்கும் பொழுது பெண் மக்களுடைய பெற்றோரின் மனமானது கரைந்துருகிவிடும் என்பதற்கு ஐயமில்லை. பங்காளத்தில் மட்டுமே ஒரு வயதுக்குக் கீழ்ப்பட்ட 539 விதவைகள் இருக்கிறார்கள். இவர்களில் இந்துக்கள் 433; மகமதியர் 100; இதர மதஸ்தர் 4; புத்த மதத்தார் 2. இதுபோக ஒரு வயதுக்கும் இரண்டு வயதுக்குமிடையிலுள்ள விதவைகள் 576; 2க்கும் 3க்கும் இடையிலுள்ளவர்கள் 651; 3க்கும் 4க்கும் இடையில் 175, 4க்கும் 5க்கும் இடையில் 3861; 5க்கும் 10க்கும் இடையில் 34,705; 10க்கும் 15க்கும் இடையில் 75,590. ஆக மொத்தம், பங்காளத்தில் மட்டும் 55 லட்சம் விதவைகள் இருக்கிறார்கள். கலியாணமான பாலியப் பெண்கள் 1 கோடியே 20 லட்சம்; கலியாணமாகாத சிறுமிகள் 72 லட்சம்; பங்காளத்தில் மட்டும் 4 பெண் குழந்தைகளில் ஒன்று விதவையாயிருக்கின்றது. அப்படியானால் இந்தியா முழுவதிலும் உள்ள விதவைக் குழந்தைகளின் தொகை பெரிதாயிருக்கும். இந்தத் தொகையைக் கண்டாவது புத்தியுள்ள இந்துக்கள் கவனிக்க மாட்டார்களா?*[28]

இந்தக் கட்டுரை தெரிவித்திருக்கும் தகவல்கள் வியப்பையும் வேதனையையும் ஒருங்கே தருகின்றன. கிறிஸ்துவர்கள் இந்துக்களைத் தாக்குகிறார்கள் என்ற நிலையில் இல்லாமல், அன்றைய சமூகக் கொடுமை என்று வன்மையாகச் சாடப்பட்டுள்ளது என நாம் கொண்டால், இக்கட்டுரை பாராட்டுப் பெறும். இக்கட்டுரையைப் படித்து முடித்த நிலையில், சில ஆண்டுகளுக்கு முன்னால் தர்மபுரி மாவட்டத்தில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று நினைவிற்கு வருகிறது.

'பத்து வயது திருமணங்கள் - வயதுக்கு வராத விதவைகள் - ஒரு விபரீத ரிப்போர்ட்' என்ற தலைப்பில் 1988இல் 'ஜூனியர் விகடன்' வார இதழில் ஒரு கட்டுரை வெளிவந்தது. அதில் ஒரு பகுதி :

.... இங்கு வயது என்பது திருமணத்துக்குத் தடையாக இல்லை. எப்போது நினைத்தாலும், என்ன வயதிலும் திருமணம் செய்துவிடுகிறார்கள்! இதில் வேதனையானது என்னவென்றால் நிறைய ஜோடிகளில் மணமகன் வயது

குறைவாகவும், மணப்பெண் அவனை விட அதிக வயது உடையவளாகவும் இருப்பதுதான். மலையூரைச் சேர்ந்த பெருமா என்ற வயதான பெண்மணி இது பற்றிக் கூறும்போது, "நம்ம ஊர்ல கல்யாணமெல்லாம் சின்ன வயசிலதாங்க பண்றது. அதுதாங்க நல்லது. பத்துப் பன்னிரண்டு வயசில கல்யாணம் பண்ணலேன்னா பின்னே எப்ப பண்றது. . . ?[29]

1907இல் பாலிய விதவைகள் பற்றிய கட்டுரை ஒன்று வெளிவருகின்றது. 81 வருடங்கள் கழித்து, பாலிய திருமணங்கள் - வயதுக்கு வராத விதவைகள் பற்றிய கட்டுரை ஒன்று வெளிவரும் அளவு ஒரு சமூகக் கொடுமை 80 வருடங்கள் கழித்தும் தொடர்கின்றது என்ற உண்மை வேதனை தருகிறது.

மாதர்போதினி இதழானது இவ்வாறு சமூகப் பொறுப்புடன் பல கட்டுரைகளை வெளியிட்டிருக்கின்றது. மதத் தொடர்பான கட்டுரைகள், பெண்களுக்குப் பயன்தரும் கட்டுரைகள், பிரச்சினைக் கட்டுரைகள் என்ற நிலையில் சிறந்த தொண்டாற்றியிருக்கின்றது இவ்விதழ்.

## தொகுப்புரை

இதழியல் ஆய்வாளர்கள் வெளியிட்டுள்ள பட்டியல்களின்படி பதினொரு இதழ்கள் 1840இல் இருந்து 1900ஆம் ஆண்டுக்குள் நாகர்கோவிலிலிருந்து வெளிவந்திருக்கின்றன. இப்பதினொரு இதழ்களுள் பட்டியலில் உள்ள இதழ்களில் மூன்றும் இல்லாத ஒன்றும் என முறையே சுவிசேஷ பிரபல விளக்கம், தேசோபகாரி, சுவிசேஷ தூதிகை, மாதர்போதினி ஆகிய நான்கு இதழ்களைப் பற்றிய செய்திகள் இங்குத் தரப்பட்டுள்ளன.

19ஆம் நூற்றாண்டில் நாகர்கோவிலிலிருந்து வந்துள்ள இவ்விதழ்கள் அனைத்துமே கிறித்தவ சமயத்தாரால் வெளியிடப்பட்டு, கிறித்தவ இதழ்களாகவே இருந்த காரணத்தினால், மற்ற மதத்தாரிடம் இவை எத்தகைய தாக்கத்தைப் பெற்றிருந்தன என்பதை அறிய முடியவில்லை.

1831ஆம் ஆண்டு தொடங்கி, 150 ஆண்டுகளைக் கடந்து இன்று செழித்து வளர்ந்திருக்கும் இதழியலின் நெடிய வரலாற்றில்

நாகர்கோவிலில் இருந்து வெளிவந்த 19ஆம் நூற்றாண்டு இதழ்களுக்கு ஒரு தனி இடமும் சிறப்பும் உண்டு என்பது காலம் உணர்த்தும் உண்மையாகும்.

## குறிப்புகள்

1. *மா.ரா. இளங்கோவன், இந்திய இதழ்கள், பக்.76-78*
2. *மேலது, ப.225*
3. John Murdoch, Classified Catalogue of Tamil Printed Books, p.223
4. *நாஞ்சில் சிந்தாமணி, கன்னியாகுமரி மாவட்ட மலர், பக்.100-101*
5. *தேசோபகாரி, நூற்றாண்டு மலர் (1861-1961), ப.99*
6. மேலது
7. *மாதர்போதினி, மார்ச்சு இதழ் (கடைசிப் பக்கம்), 1907*
8. *சுவிசேஷ பிரபல விளக்கம், பிப்ரவரி 1914, ப.12*
9. *தேசோபகாரி, 125ஆவது ஆண்டு சிறப்பு மலர் (1986), ப.6*
10. *மேலது, ப.5*
11. *மேலது, பக்.7-8*
12. *மேலது, பக்.8-9*
13. தேசோபகாரி இதழின் வெளியீட்டாளர் திரு. D. ஜெபராஜ் நேர்காணலின்போது கட்டுரையாளரிடம் தெரிவித்தது.
14. இதழ்களின் பட்டியல், திருமதி. ஜாய் ஞானதாசன் அவர்கள் தேசோபகாரி 125ஆவது சிறப்பு மலரில் எழுதிய, 'தேசோபகாரி ஒன்றேகால் நூற்றாண்டைத் தாண்டி' என்ற கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டது.
15. *தேசோபகாரி, மேற்படி மலர், ப.6*
16. *மேலது, பக்.6-7*
17. *மேலது, ஜூன் 1873, ப.103*
18. *மேலது, ஏப்ரல் 1877, ப.75*
19. *மேலது, ப.77*
20. *மேலது, பிப்ரவரி 1873, ப.30*
21. *மேலது, ப.32*

22. John Murdoch, Op.cit., p.223

23. சோமலெ, மேற்படி நூல், ப. lxxv

24. மாதர்போதினி - 1899

25. மேலது, மார்ச்சு 1912

26. 1899, 1907, 1908, 1909ஆம் ஆண்டுகளில் மேற்படி கட்டுரைகள் மாதர்போதினியில் வெளிவந்தன.

27. மாதர்போதினி, ஏப்ரல் 1910, பக்.75-76

28. மேலது, மார்ச்சு 1907, பக்.46-47

29. ஜூனியர் விகடன், 21-9-1988, ப.10

# தத்துவபோதினி

**1864** பெ.சு. மணி

## இதழியல் துறையில் பிரம்ம சமாஜம்

இதழியல் வரலாற்றில் பிரம்ம சமாஜத்தின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது. 'புதிய இந்தியாவின் விடிவெள்ளி'யாக வரலாற்றுப் புகழ்கொண்டவர் ராஜா ராம்மோகன் ராய் (1772 - 1833). 20.8.1828இல் கல்கத்தாவில் அவர் நிறுவிய 'பிரம்ம சமாஜம்' எனும் இயக்கம் இந்து சமயத்தில், சமூகத்தில் சீர்திருத்தம் காணப் பாடுபட்டது. அனைத்துத் துறைகளிலும் நவீனத்துவம் படர்ந்திட பிரம்ம சமாஜம் தொண்டாற்றப் பயன்படுத்திய சாதனங்களுள் ஒன்று, இதழியலாகும். ராஜா ராம்மோகன் ராய் இதழியல் துறையைச் செழுமை பெறச் செய்ய ஆங்கிலம், வங்க மொழி, பாரசீகம், இந்தி முதலான மொழிகளில் இதழ்களை நடத்தி ஆசிரியராகப் பணியாற்றினார்.

1821 டிசம்பரில் கல்கத்தாவில் பவானி சரண்பானர்ஜி தொடங்கிய 'சம்பத கௌமுதி' (அறிவுச் சந்திரன்) எனும் வங்க மொழி வார இதழை, 1822இல் ராஜா ராம்மோகன் ராய் தம் பொறுப்பில் எடுத்துக்கொண்டு ஆசிரியரானார். சீராம்பூர் மிஷனரிகள் சார்பில் வெளிவந்த வங்க மொழி இதழான சமாசார் தர்ப்பன் (செய்திக் கண்ணாடி) இந்து சமயத்தைத் தாக்கி எழுதி வந்தது. இதற்குப் பதிலளித்து வந்தது, 'சம்பத கௌமுதி'.

1822இல் 'மிர் அடுல் அக்பார்' (செய்திகள் கண்ணாடி) எனும் பாரசீக மொழி இதழின் ஆசிரியராகவும் உரிமையாளராகவும் திகழ்ந்தார், ராஜாராம் மோகன் ராய். வங்கத்தில் பத்திரிகைக் கட்டுப் பாட்டுச் சட்டம் கொண்டு வரப்பட்டபொழுது, அதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் 'மிர்அடுல் அக்பார்' இதழை நிறுத்தினார். 4.4.1823ஆம் இதழில் பத்திரிகையை நிறுத்தியதற்கான காரணங்களை விளக்கி எழுதினார்.

'பிராமணிகல் மேகசைன்' எனும் ஆங்கில இதழில் இந்து சமயத்தின் சிறப்புகளைப் பற்றி எழுதினார். இந்தியில் வெளிவந்த அவருடைய இதழின் பெயர் 'பங்க தூத்' (வங்க தூதன்).

1823 மார்ச்சு மாதம் நான்காம் நாள் வங்கத்தில் பத்திரிகைகளுக்கு லைசன்ஸ் பெற வேண்டும் எனும் பத்திரிகைக் கட்டுப்பாட்டுச் சட்டம் கொண்டு வரப்பட்டது. இதை எதிர்த்துப் 'பத்திரிகைச் சுதந்திரம்' என்னும் தலைப்பில் பிரசுரமொன்றை வெளியிட்டார், ராம்மோகன் ராய்; நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்தார்; பிரிட்டிஷ் பேரரசர் நான்காம் ஜார்ஜ் அவர்களிடம் விண்ணப்பம் தந்தார். இதழியல் உரிமைக்காக 'முதல் அரசியல் சாசனவழிப் போராட்டம்' ராஜா ராம்மோகன் ராயால் நடத்தப்பட்டது என்று வரலாறு பதிவு செய்துள்ளது.

சமய - சமூகப் பிரச்சினைகளில் பொதுமக்கள் அறிவுப் பயிற்சி பெற ராஜா ராம்மோகன் ராய் பிரம்ம சமாஜத்தில் தொடக்கி வைத்த இதழியல் பிரசாரக்கலையை அவருக்குப் பின் வந்த பிரம்ம சமாஜத் தலைவர்களான தேவேந்திரநாத் தாகூர் (1817 - 1905), கேசவ சந்திர சென் (1838 - 1884), பண்டித சிவநாத சாஸ்திரி (1847 - 1919) ஆகியோர் மேலும் பொலிவுறச் செய்தனர்.

## தத்துவபோதினியின் தோற்றம்

மேற்காணும் வரலாற்றுப் பின்னணியில் பிரம்ம சமாஜத்தின் முதல் தமிழ் இதழான 'தத்துவபோதினி'யின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் அறிதல் வேண்டும்.

தத்துவபோதினியின் முதல் இதழ் சென்னை மயிலாப்பூர் சாந்தோம் தத்துவபோதினி அச்சுக் கூடத்தில் கா. தெய்வசிகாமணி முதலியாரால் பதிப்பிக்கப்பெற்று, 7.5.1864இல் வெளிவந்தது. இதன் முதல் ஆசிரியர் ராஜகோபாலாச்சாருலு என்ற வி. ராஜகோபாலாச்சாரியார் எனும் உயர்நீதிமன்ற வழக்கறிஞர்.

தத்துவபோதினி தோற்றத்திற்கான தூண்டுதலைத் தந்தது, 1864 பிப்பிரவரி 14இல் சென்னை வந்த பிரம்ம சமாஜத் தலைவர் கேசவ சந்திர சென்னின் வருகை. முதல் வருகையின்பொழுது 14.2.1864 முதல் 26.2.1864 வரையிலும், இரண்டாவது வருகையின்பொழுது 6.4.1864 முதல் 10.4.1864 வரையிலும் சென்னையில் தங்கினார் கேசவ சந்திரசென். தம்முடன் கொண்டுவந்த பிரம்ம சமாஜ வெளியீடுகளைத் தம்மைச் சந்தித்த பிரமுகர்களிடம் கொடுத்தார்.

தேசவசந்திர சென் ஆங்கிலத்தில் மிகச் சிறந்த நாவலராகப் புகழ் பூத்தவர். அவர் பிரம்ம சமாஜக் கொள்கைகளை விளக்கிப் பேசினார். 1864 பிப்பிரவரி 22 திங்கட்கிழமையன்று பச்சையப்பன் பள்ளியில் மாலை 6 மணிக்குத் தொடங்கி தேசவசந்திர சென் பேருரையாற்றினார். கூட்டத்தின் சிறப்பைப் பற்றி அவர் தமது நாட்குறிப்பில் பின்வருமாறு எழுதியுள்ளார்.

"At half past five we start and reach Patchappah's School at the appointed time. Near seven hundred persons are assaulted in the spacious hall! What a glorifying sight! Announcement was only made in the Madras Times and other leading papers of the Presidency, and besides 300 cards were circulated. Such a large audience consisting of almost all the educated and influential natives of Madras, it has seldom fallen to my lot to address. Some European and East Indian gentlemen were also present the vacation and a christian lady too. I enters the hall and unique my way to the platform which is sufficiently raised to enable me to command a full view of the audience. My lecture occupie full two hours and is heard throughout with unflagging attention. I really feel proud of the honour Madras has done me by accepting my humble discourse, and I only wish it would bear fruit."

சென்னையில் பிரம்ம சமாஜக் கிளையொன்றைத் தொடங்கும்படி தம்மைச் சந்தித்த சில பிரமுகர்களிடம் கேட்டுக் கொண்டார். ஆனால் அவர் தங்கிய காலத்தில் எவரும் முன்வரவில்லை. பொதுவாக அவர் பேருரையைப் பாராட்டினர்., அப்பாசாமி செட்டி, காஜுலுலட்சுமி நரசு செட்டி, வி. ஜெயராம செட்டி, முத்துசாமி செட்டி, சோமசுந்தரம் செட்டி, பி. ராமாலுஜுலு நாயுடு, ராமச்சந்திர ராவ், பி. சோமசுந்தரம் முதலியார், பி. குழந்தைவேலு முதலியார் முதலானோரைக் கேசவ சந்திரசென் சந்தித்து உரையாடியுள்ளார். ஆனால், அவர் எதிர்பார்ப்பு நிகழவில்லை. ஆனாலும் மூன்று மாதங்களுக்குப் பிறகு நிகழ்ந்தது.

அவருடைய எழுச்சிமிக்க பேருரைகளால் ஈர்க்கப் பெற்ற சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞர்களான வி. ராஜகோபாலாச்சாருலுவும், சேலம் பி. சுப்பராயலு செட்டியும் சென்னையில் பிரம்ம சமாஜக் கிளையாக, 'வேத சமாஜம்' எனும் பெயரில் ஓர் அமைப்பினை 7.4.1864இல் நிறுவினர்.

'சந்தேகி' எனும் புனைபெயரில் தத்துவபோதினி வாசகர் ஒருவர் எழுதிய கடிதத்தில் வேத சமாஜம் எனும் பெயரிடப்பட்டதின் காரணமும் அப்பெயரைப் பிரம்ம சமாஜம் என்று மாற்ற வேண்டியதின் தேவையும் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

> வேதஸமாஜத்தால் துவக்கத்தில் வேதங்களில் மறைவாய்க் கிடந்த பொருள்களைப் பிரவாகம் செய்யும் பொருட்டும் வேதக்கொள்கைக்கு மாறாய் அதன் மேற்படர்ந்து அதன் சொரூபத்தை முற்றிலும் வேறுபடுத்தியும் அதை வேருடனழிக்க ஆயத்தப்பட்டு மிகுந்த புல்லுருவிகளாகிய விக்கிரகாரதனம் முதலிய ஆசாரங்களைக் களைந்து பரிசுத்தமான பிரமோ பாசனையைப் பூர்வத்தில் நம் முன்னோர்களுக் குள்ளிருந்தபடி நிலை நிறுத்தவும் மற்றும் நம்முடைய சில வழக்கங்களையும் சீர்படுத்தவும் முயற்சி செய்யவென்று சேர்ந்தபோது அச்சபைக்கு வேத சமாஜமெனும் பெயர் வகித்தபோதிலும், பிற்பட்டு அச்சபையாரில் பலர் கூடிச் செய்துவரும் பஜனை சபைக்கு என்ன பெயரிட்டிருக்கிறார்களோ தெரியவில்லை. அது தெரிந்தால் வெளிப்பிரதேசத்தில் இரண்டோரிடங்களில் உண்டாயிருக்கிற பிரமசபை களும் அப்பெயராலேயே வழங்கப்படலாம். வங்காளம், வடமேற்கு மாகாணங்கள், பஞ்சாப்பு முதலிய பிரதேசங்களிலேற்பட்டிருக்கும் பிரமபஜனை சபைகள் சுமார் நாற்பதுக்கு மேற்பட்டிருக்கின்றன. அவைகளொவ் வொன்றும் பிரமோபாசகர்களுடைய சபையெனும் பொருள் தரும் பிரம்ம ஸமாஜம் எனும் பெயரால் அழைக்கப்படுகின்றது. இந்தப் பிரதேசங்களிலுண்டாகும் ஸமாஜங்களும் அதே பெயரால் வியவகரிக்கப்பட்டால் இந்து தேசத்திலே பல பாகங்களிலுள்ள ஜனங்களுள் பரஸ்பரநேசமும் ஜகமத்தயமு முண்டாவதற்கு மிகவுமுபயுக்தமாயிருக்கு மென்று விஷயமாய சூசனை செய்யும்.

வாசகரின் இந்தக் கருத்தைக் குறிப்பிட்டுத் தத்துவபோதினி எழுதியதாவது: "பிரம சமாஜமென்று பெயரிட்டுக்கொள்ள யாதொரு

ஆசேஷபமில்லை. ஆயினும் இஃது வேத சமாஜமென்று வழங்கிவிட்டபடியால் மாற்றி வழங்குவது கடின சாத்தியமாகும். மற்றபடி ஆங்காங்குண்டாகும் சபைகளுக்குப் பிரம சபை என்று பெயரிடுவதில் எங்களுக்குச் சம்மதமே." 1871இல் ஸ்ரீதரலு நாயுடு, வேத சமாஜம் எனும் பெயரை மாற்றி, பிரம்ம சமாஜம் என்று பெயரிட்டார்.

தத்துவபோதினியின் தோற்றத்தைப் பற்றிய ஒரு செய்தி. ஜூன் 7, 1864இல் பின்வருமாறு வெளிவந்துள்ளது.

> நம்முடைய தேசத்தாரின் விஞ்ஞான விருத்தியின் பொருட்டு சேலத்திலிருக்கும் ஸ்ரீகோவிந்தசாமி செட்டியார் 1863 வருஷம் நவம்பர் மாதம் 16ந் தேதியுள்ள விளம்பரத்தால் சேலம் கல்விக் களஞ்சியம் எனும் பெயருடைய ஒரு பத்திரிகையை மாதந்தோறும் தமிழில் பிரசித்தப்படுத்த நிச்சயித்திருக்கிறதாய்ப் பிரேரபித்தது பலருக்குத் தெரிந்திருக்குமல்லவா?
>
> அந்தப் பத்திரிகையை 8 அங்குல நீளமும், 5 அங்குல அகலமுள்ளதாயும், அதில் நம்முடையவும் யூரோப்பியர்களுடையவும் நூல்களின் சாரங்களும், ஆசார, வியவஹார கோட்பாடுகளையும் குறித்த சுருக்கமான பிரசாரங்கள் அடங்கியும் இருக்க வேண்டுமென்று அவர் உத்தேசித்திருந்தார்.
>
> இப்பால் சென்னைப் பட்டணத்தின் வேத சமாஜம் ஏற்பட்ட உடனே அவர் எடுத்த இந்த யத்தனத்தை முடிப்பதை அந்த சமாஜத்தார் வசத்தில் விட்டு விட்டார். ஆதியில் அந்தப் பத்திரிகைக்கு அவர் உத்தேசித்த பெயரை மாற்றி, தாங்கள் தத்துவபோதினி என்ற பெயரை அதற்கிட்டு அவர் பிரேரபித்த விஷயங்களோடு நம்முடையவர்கள் விரும்பத்தக்க கொஞ்ச வர்த்தமான சங்கிரகத்தைச் சேர்க்க நிச்சயித்தோம்.

'சேலம் கல்விக் களஞ்சியம்' என்னும் பெயரில் ஓர் இதழ் தோன்றவிருந்ததும் அது தத்துவபோதினி மலர வாய்ப்பளித்தது என்பதும் குறிப்பிடத்தக்கது. பெயர் மாற்றம் ஏற்பட என்ன காரணம் என்பதும் அறியத்தக்கது.

## தத்துவபோதினி – பெயர்க்காரணம்

கல்கத்தாவில் இருந்து 1843 முதல் வெளிவந்த 'தத்துவபோதினி பத்ரிகா' எனும் வங்கமொழி இதழின் தாக்கத்தால், தத்துவபோதினி என்னும் பெயர் சூட்டப்பட்டிருக்கலாம். பெயர்க்காரணம் பற்றி இந்த இதழில் அறியமுடியவில்லை யென்றாலும், பிரம்ம சமாஜத் தலைவரான பண்டித சிவநாத சாஸ்திரி, சென்னை தத்துவபோதினியை, "அதேபெயரில் உள்ள கல்கத்தா சமாஜ தத்துவப் பத்திரிகையின் பிரதிபலிப்பு" என்று குறிப்பிட்டுள்ளது இங்கு நினைவிற்குரியது.

கல்கத்தா 'தத்துவபோதினி பத்ரிகா', பிரம்ம சமாஜத் தலைவர் தேவேந்திரநாத் தாகூர் 1839இல் நிறுவிய 'தத்துவபோதினி சபா' எனும் அமைப்பின் வெளியீடாக வந்துகொண்டிருந்தது. இதன் ஆசிரியர் குழுவில் வங்கத்தின் தலைசிறந்த அறிஞர்கள் இருந்தனர். ஈசுவர சந்திரவித்யாசாகர், தேவேந்திரநாத் தாகூர், அக்சயகுமார் தத்தர், ராஜ்நாராயண் போஸ், ராஜேந்திரலால் மித்ரா முதலானோர் ஆசிரியர் குழுவில் இருந்தனர். வேதம், உபநிடதங்கள், நீதி சாஸ்திரியங்களில் இருந்து வங்கமொழி ஆக்கங்களை வெளியிட்டதுடன், சமூக, பொருளாதார, விஞ்ஞானக் கல்விக் கட்டுரைகளையும் வெளியிட்டு வங்கமொழிச் சிந்தனை வளத்திற்குப் புதிய வலிமையும் பொலிவும் சேர்ந்திட தத்துவபோதினியைப் பயன்படுத்தினர். "ஒரு கால்நூற்றாண்டு காலம் வங்கமொழி அறிவுலகத்தை வழிநடத்தி வந்தது" என்று ஆய்வாளர் ஒருவர் கல்கத்தா தத்துவபோதினியைப் பாராட்டியுள்ளார். கல்கத்தா தத்துவபோதினி பிரம்ம சமாஜக் கொள்கைகளைப் பரப்பிவந்தது என்பதும் நினைவிற்குரியது.

சென்னை தத்துவபோதினிக்கும், கல்கத்தா தத்துவபோதினிக்கும் இடையே பத்திரிகையுறவு இருந்ததற்கான சான்றுகள் உள்ளன. சென்னை வேத சமாஜத்தைப் பாராட்டிக் கல்கத்தா தத்துவபோதினியில் வெளிவந்த கட்டுரை, சென்னை, தத்துவபோதினியில் 1865 ஆகஸ்டு 7இல் தமிழாக்கம் செய்யப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. தமிழ் தத்துவபோதினியில் வெளிவந்த பிரம்ம சமாஜ இசைப்பாடல் வங்கமொழியில் மொழிபெயர்க்கப்

பெற்று, கல்கத்தா தத்துவபோதினியில் வெளியிடப்பட்டதைத் தமிழ் தத்துவபோதினியின் 1865 ஆகஸ்டு 7ஆம் தேதி இதழில் அறிகின்றோம்.

கல்கத்தா தத்துவபோதினியின் ஆசிரியர் குழுவில் அக்கால வங்கத்தின் பேரறிஞர்கள், சிந்தனையாளர்கள் இருந்ததுபோல், தமிழ் தத்துவபோதினிக்கு ஆசிரியர் குழு அமையவில்லையென்றாலும், பிரம்ம சமாஜம் பற்றிய புதிய வெளிச்சத்தைத் தமிழ் வாசகர்கள் பெற்றமை குறிப்பிடத்தக்கதாகும்.

தத்துவபோதினியில் உள்ள தத்துவம் என்ற சொல் அமைந்தது சரிதானா? என்று ஒரு வாசகர் 'சந்தேகி' என்னும் புனைபெயரில் எழுதிய கடிதத்தை இரண்டாம் இதழிலேயே வெளியிட்டு அதற்குப் பின்வரும் விளக்கமும் எழுதப்பட்டது.

"தத்துவபோதினி யென்கிற பெயர் சரியானதல்லதென்று இரண்டொருவர் ஆக்ஷேபித்தார்களென்று கேட்ட நாங்கள் மதத்தைப் பற்றிய விஷயங்களில் மாத்திரம்தான் தத்வமென்கிற பதத்தை உபயோகிக்கலாமென்று அவர்கள் கொண்டிருக்க வேண்டுமென்று நினைக்கிறோம். தத்துவமென்பதற்குப் பதார்த்தங்களின் சுபாவம், குணம், உண்மை முதலிய பல பொருள்களுண்டாகையால் தத்துவபோதினியென்கிற இந்தப் பத்திரிகையில் பிரகிருதி சாஸ்திரம், பதார்த்த விஞ்ஞான சாஸ்திரம் முதலியவற்றைக் குறித்து விசாரிப்பதில் எவ்வித ஆக்ஷேபமும் இல்லையென்று எங்கட்குத் தோன்றியது". இந்த விளக்கத்திற்கு ஏற்ப விஞ்ஞான, பொருளாதாரக் கட்டுரைகளைத் தத்துவபோதினி வெளியிட்டு வந்தது.

கல்கத்தா தத்துவபோதினி, 'ஆத்ம வித்யை', 'தர்மநீதி', 'பிரம்மோ தர்மேர்மத் ஓ பிஸ்வாஸ்' எனும் கட்டுரைத் தொடர்களை வெளியிட்டு ஆன்மிகச் சார்பை வெளிப்படுத்தியதுடன், சமூக, பொருளாதார, கல்வி போதனைக் கட்டுரைகளையும் வெளியிட்டு வந்தது. இவ்வழியைச் சென்னை தத்துவபோதினியும் பின்பற்றியது.

தத்துவம் என்னும் சொல் ஆன்மிக, சமயச் சார்புடன்தான் அமைவதில்லை. 1880களில் சென்னையில் இருந்து வெளிவந்த 'தத்துவ விவேசினி' எனும் இதழ் நாத்திக வாதத்தைப் பரப்பிவந்தது என்பது கவனத்திற்குரியது. இங்கு, தத்துவம் எனும் சொல் ஆன்மிக - சமய மறுப்புச் சொல்லாக அமைந்தது.

## தத்துவபோதினியின் தெலுங்கு மொழிப் பதிப்பு

தத்துவபோதினி, தெலுங்கு மொழியிலும் வெளிவந்துள்ளது. தெலுங்கு மொழிப் பதிப்பு கிடைக்கவில்லையென்றாலும், தெலுங்கு தத்துவபோதினி வெளிவந்துள்ளதை அறிய சில சான்றுகள் உள்ளன. சமூகச் சீர்திருத்தத் தலைவரும், பிரம்ம சமாஜியுமான கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு தமது சுயசரிதையில் (கவிதை நடையில் அமைந்தது) தத்துவபோதினி தெலுங்கு மொழியிலும் வெளிவந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளார்.

1866இல் தத்துவபோதினியின் ஆசிரியராக வேத சமாஜத்தின் செயலாளரான சுப்பராயலு செட்டி இருந்தபொழுது, நவம்பர் மாத முதல் தெலுங்கு தத்துவபோதினி வெளிவந்துள்ளது, தமிழ்த் தத்துவபோதினியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மூன்றாவது வருடத்திற்கு இடையிலிருந்து புதிதாய் ஆரம்பிக்கப்பட்டு ஆறாவது வருட இடைவரையில் தனித்துப் பிரசுரமான இதே பெயர் கொண்ட தெலுங்கு பத்திரிகை வெளிவந்த செய்தியும் தமிழ்த் தத்துவபோதினியில் அறியக் கிடக்கின்றது.

தெலுங்கு பத்திரிகை 1970 இடையில் நின்றது. 1872இல் தமிழ் இதழுடன் இணைந்து வெளிவந்தது. இதன் கடைசி இதழ் எப்பொழுது வெளிவந்தது என்பதை அறிய வாய்ப்பில்லை.

## தத்துவபோதினியின் முதல் தலையங்கம்

இதழாசிரியர் வி. இராஜகோபாலாச்சாருலு, 'கனவான்களே' என விளித்து எழுதிய தலையங்கத்தின் பின்வரும் பகுதிகள், இதழின் கொள்கையை விளக்கவல்லன.

> முதலில் நாங்கள் யாரெனில் உங்கள் பிருமத்தையே எங்கள் தெய்வமாகவும், உங்கள் வேதத்தையே எங்கள் சுருதியாகவும் உங்கள் தேசத்தையே எங்கள் தாயாகவும், உங்கள் வேஷ பாஷாதிகளையே எங்கள் சுவரூப சின்னங்களாகவும் பெற்று அவைகளின் கவுரவத்தைக் காக்க வேண்டியதை எங்கள் கடமையாக நம்பி அதற்குத் தக்கபடி நடக்கவும், நடப்பிக்கவும், பிரதிக்னையைச் செய்து கொண்டவர்களே நாங்கள் . . . .

தைத்தரீய உபநிஷத்தில் உபதேசக் கிரமத்தில் நியாயம், சத்தியம், தியானம், பொறுமை, சாந்தம், அதிதி, பூஜை, நமது கடமைகள் முதலிய சகல தர்மங்களையும் நாமும் அனுஷ்டித்து, பிறருக்குத் தெரியச் செய்யவேண்டு மென்று சாமானியமாய் எல்லார் விஷயத்திலும் விதித்திருக்கின்றமையால், இப்படி விதியாய் வந்த கடமைகளைச் செலுத்தும் பொருட்டும் நமது தேசத்தால் க்ஷேமத்திலும் கீர்த்தியிலும், ஞானத்திலும் சன்மார்க்கத்திலும் விருத்தியடைய வேண்டுமென்கிற கருத்துக் கொண்டும் இந்தப் பிரசித்திப் பத்திரிகையை ஏற்படுத்தினோம். . . .

இந்தப் பத்திரிகையில் சகல சமயத்தாருக்கும் பொதுவான விதமாக நம்முடைய வேதங்களின் தாத்பரியங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக வெளியிட நாங்கள் நிச்சயித்தோம். வேதத்தைப் பிராமணாள் தவிர மற்றவர்கள் உச்சரிக்கக்கூடாதென்பதற்கு வேதத்தில் பிரமாணமுண்டோ இல்லையோ வென்பதை இப்பொழுது விசாரிக்க வேண்டிய அவசியமில்லை. அப்படி நிஷேதமிருப்பதாய்ச் சாதாரணமாய்க் கொள்ளப்பட்டிருக்கின்றமையால், அப்படியே வைத்துக் கொண்ட போதிலும் வேதார்த்தங்களைக் கூட இதராள் அறியக் கூடாதென்கிற விதியுமில்லை; அறியலா மென்பதற்குப் பிரமாணமும் உண்டு.

நம்முடைய மதத்தில் ஓரெழுத்துத் தெரியாது, தெளிவாய் அச்சிடப்பட்ட கிறிஸ்துமத புஸ்தகங்களைக் கண்டும், பாதிரிகளுடைய ஆதாரமற்ற தூஷணைகளைக் கேட்டுமல்லவோ நம்முடைய சிறியோர்கள் மதி மயங்கிப் போகிறார்கள். இச்சமயத்தில் நாம் அசிரத்தையாய் இருப்பது நியாயமா, தர்மமா, கடவுளுக்குத்தான் இஷ்டமா? வேதார்த்தங்களை வெளிப்படுத்துவதற்கு இன்னும் பல ஹேதுக்களுன வாயினும் இது ஒன்றே போதுமானதாயிருக்கிறது. . . .

இதுதவிர நமது தேசத்தாருக்குப் பிரயோஜனமாகும் பொருட்டு, பிரகிருதி சாஸ்திரம், பதார்த்த விக்கியான சாஸ்திரம், ராஜிய தந்திர சாஸ்திரம் முதலிய விஷயங்களில் இங்கிலீஷ் நூல்களின் பொருள்களைக் கூடிய வரையில் சங்கிரகித்து இந்தப் பத்திரிகை மூலமாய் நம்முடைய ஜனங்களுக்குத் தெரிவிக்க நிச்சயித்திருக்கிறோம் . . .

கடைசியாக நம்முடைய ஏற்பாடுகளிலும் ஆசாரங்களிலும், சாஸ்திரங்களிலும் யுக்திக்கும் முற்றும் விரோதமாயும், நம்முடைய க்ஷேமத்திற்கும் விருத்திக்கும் ஹானியாயும் உள்ளவைகளைக் குறித்தும் பிரசங்கிக்கப்படும். . .

நம்முடைய பாஷையில் வசன காவியமில்லாத குறையையும் கூடிய வரையில் பரிபூர்த்தி செய்ய நாங்கள் நிச்சயித்திருக்கிறோம்.

தலையங்கத்தின் இறுதியில் "தத்துவபோதினிக்கு ஆதரவு பெருகினால் மாதமிருமுறை அல்லது மாதம் மும்முறையாகவும் வெளிக்கொண்டுவர எண்ணமுள்ளது" என்றும் கூறப்பட்டுள்ளது.

வேத சமாஜத்தின் வெளியீடான தத்துவபோதினி, வேத சமயக் கருத்துகளைப் பிரம்ம சமாஜக் கண்ணோட்டத்தில் விளக்குவதில் முனைப்பாக இருந்தது. கிறித்துவப் பாதிரிகளின் 'தூஷணைகளை' மறுத்திட தத்துவபோதினியைப் பயன்படுத்தவும் முன்நின்று, வேத சமாஜம், தேவேந்திரநாத் தாகூர் தலைமையில் இயங்கிய பிரம்ம சமாஜம், வேத - உபநிடதக் கருத்துகளைப் பிரசாரம் செய்தது. தத்துவபோதினியின் தோற்றமும் தேவேந்திரநாத் தாகூர் தலைமை ஏற்றம் பெற்றிருந்த காலத்தில்தான் என்பதும் நினைவிற்குரியது.

முதல் இதழ் வெளிவந்த பொழுது 300 பிரதிகள் அச்சிடப்பட்டுள்ளன. "பிறகு இரண்டொரு மாதத்தில் நம்மவரில் பலர் எங்கள் முயற்சியின் நோக்கத்தை யுண்மையாக அறிந்துகொண்டு மனமுகந்து ஆதரித்தமையால் பிறகு 500 பிரதிகள் வீதம் அச்சிடத் தொடங்கினோம்'' என்று தத்துவபோதினியின் விளம்பரச் செய்தியொன்று அறிவித்தது.

விக்கிரக ஆராதனையை - உருவ வழிபாட்டை - கடுமையாக எதிர்க்கத் தோன்றிய பிரம்ம சமாஜ ஆதரவு ஏடான தத்துவபோதினி, சென்னை மாநில தமிழறிந்த இந்து வாசகர்களிடையே செல்வாக்கு பெறுவதென்பது எளிதன்று. வங்கம்போல், சென்னையில் இந்து சமய சீர்திருத்த முயற்சி அக்காலத்தில் வேர்பிடிக்கவில்லை.

### உருவமும் உள்ளடக்கமும்

1865ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஏழாம் தேதியில் வெளியான தத்துவபோதினியைக்கொண்டு அதன் உருவம் - உள்ளடக்கம் பற்றிய ஆய்வை அறிவோம்.

இதழின் அகலம் 14 செ.மீ.; நீளம் 21 செ.மீ.; பக்கங்கள் 24. சென்னப்பட்டணத்திலுள்ளவர்களுக்கு ஆண்டுக் கையொப்பம் ரூ.1-8-0. வெளியூரில் உள்ளவர்களுக்கு ரூ.2-0-0.

ஆண்டுகள், பக்க எண்கள் முதலானவை அக்கால வழக்கப்படி தமிழ் எண்களிலேயே குறிப்பிடப்பட்டு வந்தன. பக்கங்களின் எண்ணிக்கை ஒரே சீராக அமையாமல் மாறுதலடைந்து வெளிவந்துள்ளன.

இதழின் பெயர் தமிழில் மட்டுமே அச்சிடப் பெற்றிருந்தது. இதழின் மகுட வாக்கியங்கள் உபநிடதங்கள் சிலவற்றில் இருந்து தொகுக்கப்பெற்றுக் கிரந்த வரிவடிவத்தில் அச்சிடப்பெற்றுள்ளன. அவற்றின் தமிழ் வரிவடிவம் பின்வருமாறு அமைந்துள்ளது.

ஏகமேவா த்விதீயம் ஸத்யம் ஞானமனந்தம் ப்ரும்ம
சாந்திஸ்ஸ மிருத்தி மம்ருதம் ததோ யதுடத்தரதரம்
ததரூபம் நாமயம் யசெத்விதுர ம்ருதாஸ் தேபவந்தி
அதேதரே துக்கமேவா பியந்தி ஸத்யமேவ ஜெயதே நாந்ருதம்

இதன் தமிழாக்கம் இதழின் கடைசிப் பக்கத்தில் பின்வருமாறு தரப்பட்டுள்ளது.

"தனியான, ஒப்பற்ற, மெய்யறிவநந்த பிரும்மம், சாந்தி பூர்ணம் அமிருதம், அது உருவும் குற்றமுமற்றது. இதையறிந்தவர் அமிருதராவார்; மற்றவர் துக்கமேயடைவர். மெய்யே வெல்லும், பொய்யல்ல"

அத்வைத வேதாந்தத் தத்துவத்தைப் பிரகடனப்படுத்துவது, மேற்படி வாக்கியங்கள். அட்டவணை என்னும் தலைப்பில் இதழின் விஷயங்கள் பின்வருமாறு வெளிவந்தன.

1. கடவுள் துதி, 2. விளம்பரங்கள், 3. தத்துவபோதினி, 4. விவாகம், 5. விண்ணப்பம், 6. ருக்குவேத சம்ஹிதை, 7. பகவத் கீதை, 8. உபநிஷத்து, 9. அர்த்த சாஸ்திரம், 10. நிருபங்கள், 11. மநுநூல், 12. விவேக விளக்கம், 13. புஸ்தக விளம்பரம், 14. சந்தாதாரர் அட்டவணை.

இதழின் உள்ளடக்கம் பற்றி அறிய மேற்காண்பன உதவுகின்றன.

## பிரம்ம சமாஜத் துதிப்பாடல்கள்

தத்துவபோதினியின் முக்கியமான பங்களிப்புகளில் ஒன்று, பிரம்ம சமாஜத் துதிப்பாடல்களை வெளியிட்டு வந்ததாகும். பிரம்ம சமாஜம் உருவ வழிபாட்டை எதிர்த்தாலும், பரப்பிரம்மத்தைத் துதி செய்து போற்றி வணங்கியது. அது 'நிராகார பிரம்மத்தை' ஏற்றுக் கொண்டு, 'நிர்க்குணப் பிரம்மத்தை' ஏற்கவில்லை. இறைவனின் அருளாற்றல் குணநலன்களைப் பாடிப் பரவியது, பிரம்ம சமாஜம். பிரம்ம சமாஜப் பிரார்த்தனைக் கூட்டங்களில் துதிப்பாடல்களை இணைப்பது முக்கிய நிகழ்ச்சியாகும். தமிழில் இத்தகைய பாடல்களைப் பிரம்ம சமாஜம் தத்துவபோதினியின் வாயிலாகத் தமிழிற்கு முதன்முறையாக அளித்தது ஒரு வரலாற்றுச் சிறப்பாகும்.

மழை வறட்சியால் விலைவாசி ஏற்றம் பற்றிய ஒரு வித்தியாசமான பாடலும் தத்துவபோதினி 1866 ஆகஸ்டு இதழில் பின்வருமாறு வெளிவந்துள்ளது.

**அட்சய வருடத்தின் அகவிலை**

"எங்கும் நிறைந்தருளும் ஓங்கார பிரும்மமே
ஈரும் அட்சய ஆண்டிலே
எழிலிமழை பொழியாத குறைவினால் போகத்தில்
எளியவர் முதலோர்கள் நொந்து
அங்குமிங்கும் ஓடி அலையினும் ரூபாய்க்கு
ஆறுபடி அரிசி தானும்
ஆன கேழ்வரகு பத்துப்படி தானுமே
அகப்படுவ தருமை யாகிப்

பொங்கும் மனந்தளர்ந்து உன்புக ழேதோத்திரம்
புரிகின்றோம் நாங்கள் முன்னம்
புன்மையான புத்தியால் செய்ததும்
பொறுப்பதுன் பார மையா
கங்கு பகலின்றியே மழைபொழிந்து ஏரிகுளம்
கரைபுரண்டு உலக மெங்கும்
கனமான தானியம் விளைந்தோங்கச் செய்தருள்
கருணாகரக் கடவுளே"

இதை இயற்றியவர் பெங்களூர் பிரம்ம சமாஜ இயக்கத்தைச் சார்ந்த சூ. ஐயாசாமி என்பவர். இதனைப் 'பாடல்' என்று கொள்ளச் சற்று தயக்கம் ஏற்பட்டாலும், பாடலுக்குரிய பொருளைத் தேர்ந்தெடுத்தது பாராட்டத்தக்கது.

ஒவ்வொரு இதழிலும் முதல் பக்கத்தில் 'சத்தியமே சக்தி - தத்துவமே சித்தி' என்னும் தலைப்பில் ராக - தாளக் குறிப்புகளுடன் பிரம்ம சமாஜத் துதிப்பாடல்களை வெளியிட்டுவந்தது, தத்துவபோதினி. சிற்சில இதழ்களில் தெலுங்கிலும் கிரந்த எழுத்துகளிலும் பாடல்கள் வெளியிடப்பட்டுள்ளன. கடைசி பக்கங்களிலும் பாடல்கள் வெளிவந்துள்ளன.

பாடல்கள் பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் என்னும் கீர்த்தனை வடிவத்தில் இயற்றப்பட்டுள்ளன. சில பாடல்களில் இயற்றியவர்கள் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. ஒரு பாடலில் தைத்தரீய உபநிடதம், முண்டகோபநிடதம், சுவேதாசுவதர உபநிடதங்களில் இருந்து சில வாக்கியங்கள் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. தாயுமானவர் பாடல்களும் எடுத்தாளப்பட்டுள்ளன.

காம்போதி இராகத்தில் - ஆதி தாளத்தில் அமைந்த ஒரு பாடல், பின்வருமாறு:

பல்லவி

எல்லாம் வல்ல பரப்பிரம்மம் ஒன்றே தெய்வம்

அனுபல்லவி

சொல்லா லடங்காத வெளிமுதலிய தோற்றம்
எல்லாம் படைத்தளித்த ழிக்குந் தொழின்முதல் (எல்லாம்)

***சரணங்கள்***

க. கடந்த ஞானிகளுள்ளக் கருத்தினிற் கண்டது
காணாத மானிடராராய விண்டது
படர்ந்த தாமரைத் தண்ணீர்போல் மனப்
பற்றற்றவர் தொழப் பிரத்தியக்ஷங் கொண்டது (எல்லாம்)

உ. ஆதி மறைக்குள்ளே யோதிப் பதித்தது
அணுவுக் கணுவாகி யங்கங்கே கதித்தது
ஜோதிமணி போலத் தூய தன்மைத்தது
தொண்டர்க ளெல்லாருந் தொழுது துதித்தது (எல்லாம்)

ந. காரண காரிய மிரண்டு மேயது
கற்பனை யுளத்திற்குக் காணாமற் போயது
பூரணமா யெங்கும் ஓங்கிப் போபோயது
பூதலந் தோருள்ளம் புகுந்து மெய்யாயது (எல்லாம்)

## மொழிபெயர்ப்புகள்

ஆன்மிகத் தத்துவங்களைச் சம்ஸ்கிருத மொழிகளில் இருந்து தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டது, தத்துவபோதினி பிரம்ம சமாஜத் தலைவர் ராஜா ராம்மோகன் ராய் வங்க மொழியில் கேன, கதா, முண்டக, மாண்டூக்ய உபநிடதங்களை மொழிபெயர்த்து, பிரம்ம சமாஜ மொழிபெயர்ப்புப் பணிக்கு வித்திட்டது. சமய தருக்க வாதங்களில் சம்சுகிருதம் அறியாதவர்கள் பங்கேற்கவும், ஆன்மிகத்தத்துவ அறிமுகம் பெறவும் இந்த மொழிபெயர்ப்புகள் ஊக்கமளித்தன. ஆன்மிகத் தத்துவங்களின் மொழிபெயர்ப்புகள் தத்துவபோதினியின் பக்கங்கள் பலவற்றை எடுத்துக் கொண்டன.

தத்துவபோதினி வேத சம்ஹிதைகளை மொழிபெயர்த்ததில் சிக்கல்களைச் சந்திக்க வேண்டியதாயிற்று. வேதத்திற்கு மூன்று விதங்களாக உரைகள் எழுந்து, அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் என மூன்று தத்துவங்கள் தோன்றின. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு தத்துவபோதினி, தான் மேற்கொண்ட அணுகுமுறையைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

ஒரு மதத்தாருடைய பாஷியத்தையே அனுசரித்து வேதத்திற்குப் பொருள் செய்வோமாகில் மற்ற

மதஸ்தர்களுக்கு இசையாதாகையாலும் நமது தேசத்தார் அனைவருக்கும் பொதுவான இந்தப் பத்திரிகையில் ஒரு மதத்தையே அவலம்பித்துப் பேசுவது உசிதமல்லவாகை யாலும் பல மதத்தாருடைய பாஷியங்களையும் அனுசரித்து இந்தச் சிறிய பத்திரிகையில் உரைசெய்து விளக்குவது அசாத்தியமாகையாலும் முற்றும் வேதத்தின் பொருளே தெரியாமையைக் காட்டிலும், அதின் பொருளெல்லாம் ஒருவாறு ஸ்தூலமாய்த் தெரிந்திருப்பது வெகுநலமாகையாலும் நாங்கள் இவ்வாறு எழுத நிச்சயித்தோம். ஸ்தூல ஞானந் தெரிந்து பிறகு, எவ்விடத்திலாவது சந்தேகந் தோன்றும் போது, அவரவர்க்கு இஷ்டமுள்ள பாஷியத்தின் சகாயத்தால் சந்தேக நிவர்த்தி செய்து கொள்ளலாம். சிலருக்குச் சந்தேகமே தோன்றாமலிருப்பதும் சாத்திய மாகையால், அவர்கள் பாஷியங்களின் சகாயமேயன்றி, தாமாய் சமனுவயம் செய்து சரியான பொருளையறிந்து கொள்ளக் கூடும்.

'சம்ஸ்கிருதத்திலுள்ள வாக்கியங்களின்று பதத்துக்குப் பதம் சரியாய் மொழிபெயர்த்து' எழுதப்பட்டுள்ளதாகவும் கூறப்பட்டுள்ளது. இந்த மொழிபெயர்ப்புகளில் தேவையான அடிக்குறிப்புகள் விளக்கங்களுடன் தரப்பட்டுள்ளன.

ஆங்கில மொழிக் கட்டுரை இலக்கியப் படைப்பில் பெரும் புகழ்பெற்ற பேகன் கட்டுரைகள் தத்துவபோதினியில் தமிழாக்கம் பெற்றுள்ளன.

### சமூகச் சீர்திருத்தப் பிரச்சாரத் துறையில்

புதிய இந்தியாவின் புத்தெழுச்சிக்கு ராஜா ராம் மோகன் ராய் தொடங்கிவைத்த முதன்மையான பல தொடக்கங்களில் சமூக சீர்திருத்தப் பிரச்சாரமும் ஒன்றாகும். அவர் உருவாக்கிய சமூக சீர்திருத்தப் பிரச்சாரம் அவருக்குப் பின்வந்த பிரம்ம சமாஜத் தலைவர்களால் மேன்மேலும் வளர்த்தெடுக்கப்பட்டு வந்தது.

இதில், தத்துவபோதினியும் தன் பங்களிப்பை வழங்கியுள்ளது. பெண் கல்வி, சதிராட்டத்திற்கு எதிர்ப்பு, சாதி பேதம் பாராட்டுதலுக்கு எதிர்ப்பு, குழந்தை மண எதிர்ப்பு, மூடப்பழக்க வழக்கங்களுக்கு

எதிர்ப்பு, விதவை மறு மணத்திற்கு ஆதரவு முதலான சமூகச் சீர்திருத்தப் பிரச்சாரங்களுக்குத் தத்துவபோதினி இடமளித்தது.

'பெண்கல்வி' முன்னேற்றத்திற்காகவே வேத சாமாஜம் 'இரண்டாவது விண்ணப்பம்' எனும் துண்டுப்பிரசுரத்தை வெளியிட்டிருந்தது. வேத சமாஜத்தின் தத்துவபோதினி 'பெண்கல்வி' தொடர்பான கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வந்தது. பெண் கல்வியைப் புறக்கணித்து, பெண்களைத் தாழ்வு படுத்தியதினால்தான் நாடு அடிமைப்பட்டது எனும் சீரிய சிந்தனையைத் தத்துவபோதினி பின்வருமாறு எடுத்துக் காட்டியது.

> நாம் தைரிய சூன்னியர்களாகி பராதீனப்பட்டுப் போனதற்கு முக்கியமான காரணம் நமது பெண்களுடைய மடமையும், அடிமைத்தன்மையுமே என்பதற்குச் சந்தேகமேயில்லை. மடமையும், அடிமைத்தன்மையுமே பெண்களுக்கு அத்தியுசிதமான சத்குணங்களென்றும் அநேக நூல்கள் போதிக்கின்றன. இது சத்தியமென்று பெண்களும் வெகுகாலமாக நம்பிவிட்டார்கள். இவ்வித மூடாத்துமாக்களல்லவோ நம்மைப் பெற்று ஊட்டி வளர்க்குந் தாய்மார்கள். இவர்களுடைய அடிமைத் தன்மையன்றோ நமது இளையமனதிற் படிந்து நம்மோடு வளர்ந்து நம்மை அந்நிய தேசத்தாருடைய ஆளுகைக்குட்படுத்தியது. மெலியாரை வலியாரடித்தால் வலியாரைத் தெய்வமடிக்கும் என்கிற பழமொழியின்படி நாம், பேதையராகிய நமது பெண்களை வருத்தி அகௌரவப்படுத்தினதால், கடவுள் நமது தேச கௌரவத்தை அழித்து நம்மைப் பல நூற்றாண்டும் அந்நியருடைய ஆதீனமாக்கிப் பல துன்பங்களை அனுபவிக்கும்படி செய்தார்.

1866இல் சென்னையில் இந்து மதப் பெண்களுக்காக, இந்து மதப் பெண்களே எழுதி வந்த 'அமிர்த வசனி' என்ற பத்திரிகையில் இருந்து பெண்ணியம் தொடர்பான கட்டுரைகளைத் தத்துவபோதினி மறுவெளியீடுகளாக வெளியிட்டது. குழந்தை மண எதிர்ப்பு, பெண் கல்வி, பெண் ஒழுக்கம், முதலான அமிர்தவசனிக் கட்டுரைகள் தத்துவபோதினியில் மறுவெளியீடுகளாக வந்துள்ளன. 1860களிலேயே தத்துவபோதினி பெண் கல்விக்கு உரத்த குரலில் பேசியது, பிரம்ம சமாஜ பாரம்பர்யத்தின் வழிப்பட்டதாகும்.

## சதிராட்டத்திற்கு எதிர்ப்பு

திருமணங்களில் தேவதாசிகளைக் கொண்டு சதிராட்ட நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்வது அக்காலத்தில் செல்வந்தர்களிடையே பெருவழக்காக இருந்தது. சதிராட்டத்திற்கு எதிர்ப்பு தெரிவிப்பது, அக்காலச் சமூகச் சீர்திருத்தப் பிரசாரத்தில் ஒன்றாகத் திகழ்ந்தது. 'நோய் நாடி, நோய் முதல் நாடி' செய்ய வேண்டிய இந்தச் சமூகச் சீர்திருத்தப் பிரச்சாரம் தேவதாசி தொழில்முறையை மட்டும் எதிர்த்தது. தேவதாசி முறையையே ஒழிக்க முற்படுவதுதான் அடிப்படை சமூகச் சீர்திருத்தமாகும். ஆனால், அக்காலத்தில் சதிராட்டத்திற்கு எதிர்ப்பு என்பது முக்கிய சமூகச் சீர்திருத்தமாகக் கருதப்பட்டது.

வேத சமாஜம் தோன்றுவதற்கு முன்பு சென்னையில் 'சென்னை சுதோபிவிருத்தி சங்கம்' எனும் ஓர் அமைப்பு இருந்ததாகவும் அது சதிராட்ட எதிர்ப்பில் ஆர்வம் காட்டியதாகவும் தத்துவபோதினி வழியே அறியப்படுகின்றது. இந்தச் சங்கத்தின் தலைவராக இருந்த ச. ஜெயராம செட்டியார் என்பவர் தமது மகள் திருமணத்தில் சதிராட்டத்தை ஏற்பாடு செய்யாமல், ஏழை எளிய மக்களுக்கு உணவளித்ததைப் பாராட்டித் தத்துவபோதினி பின்வருமாறு எழுதியது.

> எக்காலத்திலும், எந்நாட்டிலும் அதிநீசத்துவமுடைய விபசாரிகளைச் சபாயோக்கியராகக் கருதி, சம்மானித்து, சுசீலமும் பரிசுத்தமும் சத்தியமும் கற்பும் விளைவிப்பதற்கு ஹேதுவாய் செய்யப்படும் சுபகாரியங்களையும், அவர்களைக் கொண்டு நடத்தும் விபரீதம் இந்நாட்டிலொழிய வேறெங்கும் காண்கிலோம். . . இவர் ஏனையோரைப் போல, தமது திரவியத்தைச் சதிரிலும், பாண முதலிய வேடிக்கைகளிலும் செலவு செய்யாமலும், முற்றும் சோம்பலுற்றுப் பிறரை ஏமாற்றி வயிறு வளர்க்கும் பிராமணர்களுக்கே சமயஞ் செய்யாமலும், அக்கலியாண காலத்தில், மிகவும் ஏழைகளும், உதவியற்றவர்களுக்குமாய்க் கஞ்சி தொட்டியிலிருப் போர்க்குத் திட்டமாய் விருந்து செய்வித்து அவர்கள் போஷணைகள் பொருட்டு சகாயம் செய்தாரென்று கேள்விப்படுகிறோம். இஃது மிகக் கொண்டாடத்தக்கக்

காரியமென்பதை யாங்கள் சொல்ல வேண்டிய தில்லை. இதை மற்ற பிரபுக்களாகிய இந்நகரவாசிகளும், ஏனையோர்களும் கவனிப்பார்களெனக் கோருகிறோம்.

தத்துவபோதினியின் சதிராட்ட எதிர்ப்புப் பிரசாரத்தில், திருமணச் செலவுகளில் காணவேண்டிய சீர்திருத்தக் கருத்துகளும் இணைந்துள்ளது பாராட்டத்தக்கது.

## பிராமணர் மீதான விமர்சனம்

பிரம்ம சமாஜத்தில் பிராமணர் ஆதிக்கத்தை எதிர்த்து முதன் முதலில் குரல் எழுப்பியவர் கேசவசந்திர சென். பிரம்ம சமாஜ ஆசார்யப் பீடத்தில் அமர்ந்து வழிபாடு நிகழ்த்த வருவோர் அந்தச் சமயத்தில் பூணூல் அணிந்திருக்க வேண்டும் என்பது தேவேந்திரநாத் தாகூர் தலைமையேற்ற காலத்திலும் தொடர்ந்தது. "ஆசார்ய பீடத்தில் அமர்வோர் எவ்வித சாதி சின்னத்தையும் அணியக்கூடாது" என்று தேவேந்திரநாத் தாகூருக்கு ஜூன் 19, 1864இல் எழுதிய கடிதத்தில் கேசவசந்திர சென் குறிப்பிட்டுள்ளார். இதற்கு முன்னுதாரணமாகக் கேசவசந்திர சென் தாம் அணிந்திருந்த பூணூலைத் துறந்தார். இதன் காரணமாகவும் கேசவசந்திர சென் வெளியேறி அமைத்த பிரம்ம சமாஜம், 'இந்தியப் பிரம்ம சமாஜம்' எனப் பெயர் பெற்றது'. சென்னை பிரம்ம சமாஜத்தைச் சார்ந்த க. துரைசாமி ஐயங்கார், "சென்னையில் 'பூணூலைத் துறந்த முதல் பிரம்ம சமாஜி' யாவார். இவர் ஸ்ரீதரலு நாயுடு காலத்தில் தத்துவபோதினியின் ஆசிரியருமானார். முற்கூறிய சதிராட்ட எதிர்ப்புக் கட்டுரையில், திருமணச் செலவுகளில் எதிர்ப்பும் சோம்பலுற்றுப் பிறரை ஏமாற்றி வயிறு வளர்க்கும் பிரமாணர்களுக்கே சமயஞ் செய்யாமல்" பிராமணர் எதிர்ப்புக் கருத்து வெளியிடப்பட்டதைக் கண்டோம்.

விக்கிரக ஆராதனையிலும் அதற்குரிய செலவுகளிலும் பிராமணர்களைக் குறைகூறி, தத்துவபோதினியில் வெளிவந்த விமர்சனத்தின் ஒரு பகுதி வருமாறு:

> சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன்னிருந்த இத்தேசத்துக் கல்வியில்லாத அரசர்களைப் பிராமணர்கள் அடுத்துத் தாங்கள் மாத்திரம் எப்போதும் பெருமையாயிருக்கும் பொருட்டு, கல்வியைத் தங்களுக்கு உபயோகஞ் செய்துகொண்டும், அதற்கு வேண்டிய பூஸ்திதி

> மானியங்களைப் பெற்றுக்கொண்டும், மற்றவர்கள் கல்வியறிவில்லாமல் எப்போதுந் தங்களுக்குத் தாழ்ந்த ஸ்திதியிலிருக்கவும் மோசவெண்ணங்கொண்டு, கல்விக்கு உபயோகப்பட்டுக் கடவுளறியச் செய்யத்தக்க, கனமாகிய பொருளை ஒவ்வொரு கல் முதலானவை களுக்கும் பிரயோஜனப்படும்படி செய்து விட்டார்கள்.

'உத்தம பிராமணர்களுக்கு' உரிய சிறப்பைச் சுட்டிக்காட்ட தத்துவபோதினி தவறவில்லை. "பிராமணர்களுடைய பெருமை குறையுமென்று நினைக்கிறேன்" என்று தத்துவபோதினியில் கேட்கப்பெற்ற ஒரு வினாவின் பகுதிக்கு, பின்வருமாறு விடையளிக்கப்பட்டது.

> பிரம்ம சுரூபமாகிய பூமியில் வடகண்டமாகிய முகமென்ற ஸ்தானத்தில் பிராமணர் தோன்றினவர்களானபடியால் அவர்கள் எப்போதும் சூட்சும புத்தியுள்ளவர்களாகவும், பிரம்மானந்தத்தை அறிபவர்களாகவும் மற்ற மூன்று வருணத்தார்களுக்கும் சிரேஷ்டமாகவேயிருப்பார்க ளென்பதில் சந்தேகமேயில்லை. இப்பேற்பட்ட சிறப்பு குறைவதற்குப் பழைய மோசவெண்ணங் கொள்பவர்க்கு நேரிடுமேயன்றி உண்மையைப் பகிரங்கப்படுத்தும் உத்தம பிராமணர்களுக்கு இன்னும் நாளுக்கு நாள் சிறப்புண்டாகுமென்பதில் சந்தேகமில்லை.

மேற்காணும் விடையில் வர்ணாசிரமப் பாகுபாட்டை எதிர்க்கும் நோக்கு தத்துவபோதினிக்கு இல்லையென்பது தெரிகிறது. பின்வரும் 'வினா-விடை'யில், 'பிரம்ம தியான முள்ளவர்களெவர்களோ, அவர்களே பிராமணரென்று' எனும் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

"வினா: பஞ்சமர் முதல் பிராமணர் வரையில் பிரம்ம தியானமே உண்டானால் அது நியாயமாயிருக்குமா?

விடை: பஞ்சமர் முதல் பிராமணர் வரைக்கும் கொலை முதலிய குற்றஞ் செய்தவர்களுக்கு நியாய ஸ்தலத்தில் ஒரே சட்டத்தின்படி தீர்ப்பு செய்துகொண்டு வருவது நமது புத்தியுத்தி அனுபவத்துக்குச் சரியாயிருக்கும்போது, பிரம்ம தியானத்தில் வேற்றுமையாக நடந்து கொள்ள வேண்டியதென்று நினைப்பது நியாயமல்லவே. ஆனதால் பழமொழி, பிரம்ம தியான

முள்ளவரெவர்களோ, அவர்களே பிராமணரென்று உலகப்பிர சித்தியாகவிருக்கிறதே. அதை மறைக்க யாரால் முடியும்."

'தஞ்சை தரும சாலை' எனும் அமைப்பு, வர்ணாசிரம அமைப்பை வலியுறுத்தி வந்தது. இதை விமர்சனம் செய்து கிருஷ்ணமாச்சாரி என்பவர் தத்துவபோதினியில் விரிவாகப் பதிலளித்தார். இறுதியுரையில் அவர் எழுதியதாவது.

> இப்போதிருக்கும் மற்ற பிராமணர்கள் துர்ரபிமானம் விட்டு தமக்கதிக கீழ்ஜாதியாரென்றெண்ணி வரும் மற்ற மூன்று வர்ணத்தாருக்கும் கல்வி கேள்வி ஞானத்தைக் கற்பித்துத் தமக்குச் சமமாகக்கொண்டு கொண்டாடினால் இத்தேசத்தின் க்ஷேமம் விரித்தியாகுமென்பது திண்ணம், திண்ணம்.

## மாற்றுக் கருத்துகளுக்கும் இடமளித்தமை

மாற்றுக் கருத்துகளையுடைய வாசகர் கடிதங்களை வரவேற்பதிலும் அவற்றிற்குரிய பதில்களை விவாத வழியில் பதில் அளிப்பதிலும் பத்திரிகை தருமத்தைத் தத்துவபோதினி கடைப்பிடித்தது. குறிப்பாக, தஞ்சாவூர் தர்ம சபை, வேத சமாஜக் கண்டனம் எனும் நூலை 1865இல் வெளியிட்டு, வேத சமாஜத்தின் பிரசாரம் வேதநெறிக்கு எதிரானது என்று குற்றம் சாட்டித் தத்துவபோதினிக்குக் கடிதங்கள் பலவற்றை அனுப்பியது. அவற்றை வெளியிட்டு, தக்கவாறு பதிலளித்தது தத்துவபோதினி.

'பெண் கல்வி'யை மறுத்தது, 'வேத சமாஜக் கண்டனம்! இதை எதிர்த்து 'விவேக விளக்கம்' எனும் இதழ் எழுதியதைத் தத்துவபோதினி தன் இதழில் மறுவெளியீடு செய்தது. "வேதசமாஜக் கண்டன'த்தில் வீண்கதைகளும், எதிரிகளைத் திட்டுவதும் முக்கால் பங்கை விழுங்கி விட்டிருக்கின்றன" என்றும் விவேக விளக்கம் எழுதியது.

அவரவர் சமய முறையைப் பின்பற்றி அந்தந்தச் சமய தெய்வங்களை வழிபட்டால்தான் மோட்சம் கிடைக்கும் எனும் கருத்தை வேத சமாஜம் ஏற்கவில்லை. வேத சமாஜத்தின் இக் கொள்கையை 'வேத சமாஜக் கண்டனம்' எதிர்த்தது.

விவேக விளக்கம் இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள்

சிலவற்றைத் தத்துவபோதினி மறுவெளியீடுகளாக வெளியிட்டு வந்தது. அதை நாமனைவரும் படித்து ஆனந்திக்கும் பொருட்டு இத்தத்துவபோதினியில் அதை யெடுத்துப் பதிப்பித்திருக்கின்றோம்" எனும் குறிப்பையும் தத்துவபோதினி எழுதியுள்ளது.

விவேக விளக்கம், தத்துவபோதினி அச்சுக்கூடத்தில் இருந்து 1865இல் மாத இதழாக வெளிவந்தது. இதனுடைய ஓர் இதழ்கூடக் கிடைக்கவில்லை. இந்த இதழைப் பற்றிய செய்திகளைத் தத்துவபோதினி மூலம் அறிகின்றோம்.

## தத்துவபோதினியின் தமிழ் நடை

தத்துவபோதினி, தனது தமிழ்நடையைப் பற்றி எழுதியதாவது.

> இந்தப் பத்திரிகையின் முக்கிய உத்தேசியம் ஞான விருத்தியே யல்லாமல் சமாசாரப் பிரவசனமல்ல. நமது தேசபாஷைகளிலுள்ள நூற்களெல்லாம் முக்கியமாய் செய்யுளாயிருப்பதால் சீரான வசன நடை இனிமேல் ஏற்பட வேண்டியதாயிருக்கிறது. சுத்தத் தமிழா யெழுதினால் பலருக்கு அர்த்தமாகாது. சம்ஸ்கிருதத்தை விசேஷமாய்க் கலந்தால் பலருக்கு நன்றாய்த் தெரியாது. அல்லாமலும் இந்தப் பத்திரிகையினால் வெளிப்படுத்த நிச்சயித்திருக்கும் விஷயங்களின் கவுரவத்தை யோசிக்கையில் முற்றும் கடைத்தெருத் தமிழாயெழுதுவதும் சரியாயிராது. சூரியனுடைய ஒளியினால் சந்திரன் பிரகாசிப்பது போல தாய்பாஷையாகிய சம்ஸ்கிருதத்தின் உதவியின்றித் தேசபாஷைகள் பரிமளிக்க மாட்டா தென்பதை எல்லோரும் ஒத்துக் கொள்வார்கள்.
>
> அன்றியும் இதைப் படிக்கும் பலரும் பலவித நடைகளை விரும்பலாமாகையால் அவரவருக்கு வேண்டிய பலவித நடைகளில் இதையெழுதி முடிப்பது அசாத்திய மென்று நினைத்து அந்தந்த விஷயங்களுக்கியைந்த நடையை அனுசரித்து எழுத நாங்கள் நிச்சயித்தோம்.

மேற்காணும் விளக்கத்தில் இரு கருத்துகள், மறுக்கத்தக்கன. சம்ஸ்கிருதத்தை, தேசபாஷைகளுக்குத் தாய் பாஷை என்று குறிப்பிடப்பட்ட ஒரு கருத்து மறுக்கத்தக்கது. 1856இல் வெளிவந்த

பிஷப் கால்டுவெல் அவர்களின் 'திராவிட மொழி ஒப்பிலக்கணம்', தமிழிற்குச் சமஸ்கிருதம் 'தாய் பாஷை' அன்று என்பதைத் திட்டவட்டமாக மறுத்துள்ளது. இவ்வுண்மையைத் தத்துவபோதினி அறியவில்லை. தமிழ் என்றாலே 'இனிமை' என்பது பொருளாகும் என்பதை அறிந்துவைக்காத நிலையில், 'காதுக்கு உண்டாகும் ஆனந்தத்தை யோசிப்போமாகில் தமிழைக் காட்டிலும் தெலுங்கு மேலானதாயிருக்கிறதல்லவா?' என்று தத்துவபோதினி தெலுங்கு மோகத்தை வெளிப்படுத்தியுள்ளது.

தத்துவபோதினி தமிழ்நடையில் தெலுங்குச் சொற்களை அவற்றினுடைய எழுத்துவடிவங்களிலேயே சிற்சிலவிடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. சிலவிடங்களில் சொற்றொடர்கள் சிலவும் தெலுங்கிலேயே அமைந்துள்ளன. தமிழ் நடையில் கிரந்த எழுத்து முறையும் கலந்துள்ளது. வேத - உபநிடதத் தத்துவங்கள் தமிழாக்கம் செய்யப்பெற்றுள்ள விடங்களில் கிரந்த எழுத்துகளின் ஊடுருவல்கள் மிகுந்துள்ளன.

1864இல் பத்திரிகைத் தமிழ்நடை 'இப்படித்தான்' இருந்திருக்க முடியும் என்று கூறிவிடமுடியாது. 1855இல் தமிழின் முதல் வார இதழாக வெளிவந்த 'தினவர்த்தமானி'யின் கட்டுரைகள் பல 'விநோதரசமஞ்சரி' எனும் நூலாக்கம் பெற்றுள்ளன. இதில் காணப்படும் தமிழ் நடை தத்துவபோதினியின் தமிழ் நடையை விட எளிமையாகவும் பிறமொழிக் கலப்பு கட்டுக்குள் அடங்கியும் உள்ளது.

இலங்கை யாழ்ப்பாணத்தில் இருந்து, 1841 முதல் வெளிவந்த 'உதயதாரகை' எனும் இருமொழி இதழில் (Morning Star) தமிழ்ப்பகுதியின் பத்திரிகைத் தமிழ்நடையைக் காலத்திற்கேற்ற வளர்ச்சியாகக் கொள்ளலாம். யாழ்ப்பாணம் அமெரிக்க மிஷன் (கிறித்துவ சமய அமைப்பு) சார்பில் மாதமிரு முறையாக வெளிவந்த 'உதயதாரகை - Morning Starஇல், 18-3-1841இல் 'நீதிமொழிகள்' என்னும் தலைப்பில் உள்ள பின்வரும் தமிழ்நடை, தத்துவபோதினியின் தமிழ்நடைக்கு 23 ஆண்டுகள் மூத்தது என்பதும் நினைவிற்குரியது.

> ஒரு நாட் பிறப்பதை நீ அறியாதிருக்கிறபடியால் நாளை யிற்றினத்தைக் குறித்து மேன்மை பாராட்டா திருப்பாயாக - உன் வாயுமல்ல, உன் உதடுமல்ல பிறனும் அன்னியனுமே உன்னைப் புகழட்டும் - வஞ்சனையான

> சினேகத்திலும் வெளியரங்கமான கண்டிப்பு நலம் - சினேகிதன் கொடுக்கிற அடிகள் உண்மையுள்ளவைகள். பகைஞன் இடுகிற முத்தங்கள் வஞ்சனையானவைகள்.

உதயதாரகையில் யாழ்ப்பாணத் தமிழறிஞர்கள் பலர் தமிழ் நூல்களைப் பற்றிப் பல கட்டுரைகள் எழுதியுள்ளனர். 1841லேயே உதயதாரகைக்கு வாய்த்த தமிழறிஞர் கூட்டுறவு தத்துவபோதினிக்கு வாய்த்திருந்தால் அதன் தமிழ்க்குரல் வளம் பெற்றிருக்கும்.

'தமிழ்ப்பாஷையின் சரித்திரம்' என்னும் கட்டுரை தத்துவபோதினியில் வெளிவந்துள்ளது. இதில் தொல்காப்பியம், சங்க இலக்கியம் பற்றிய குறிப்புகள் இல்லை; எதிர்ப்பார்ப்பதற்கும் வாய்ப்பில்லை. கால்டுவெல் கூடத் தமது திராவிட மொழி ஒப்பிலக்கண ஆய்வை, தொல்காப்பியம், சங்க இலக்கியம் பற்றி அறிய முடியாத நிலையிலேயே செய்துள்ளார் தமிழின் பழமையை முற்குறிப்பிட்ட கட்டுரையில் தத்துவபோதினி பின்வருமாறு கூறியுள்ளது.

> தமிழிற்கு முதனூலாசிரியராகிய அகஸ்தியர், ஸம்ஸ்கிருதத்தில் 'ஆதி காவியம்' என்று பெயர்பெற்ற இராமாயணம் எழுதின காலத்தில் இருந்தவராகத் தெரியவருகிறது. மற்ற பாஷைகளுக்கு அவ்வளவு பூர்வீகரான நூலாசிரியரைக் காணோம்.

## தத்துவபோதினியின் இரண்டாவது கட்டம்

1866இல் வேத சமாஜ காரியதரிசி சேலம் சுப்பராயலு செட்டி பி.ஏ.பி.எல். தத்துவபோதினியின் ஆசிரியரானார். தத்துவபோதினி இவர் தலைமையில் ஓராண்டு வெளிவந்தது. 1867இல் ஸ்ரீதரலு நாயுடுவின் மேற்பார்வையில் அவருடைய அணுக்க நண்பர் க. துரைசாமி ஐயங்கார் ஆசிரியராக விருக்கத் தத்துவபோதினி வெளிவந்தது.

## தத்துவபோதினியின் மூன்றாவது காலகட்டம்

தத்துவபோதினியின் மூன்றாவது வளர்ச்சிக்கட்டம் ஸ்ரீதரலு நாயுடு (1840-1874)வின் தலைமையில் வளர்ச்சியடைந்தது. 1865இல் கல்கத்தா சென்று பிரம்ம சமாஜக் கொள்கைகளை வங்க மொழி மூலத்திலேயே கற்றவர் ஸ்ரீதரலு நாயுடு. 1850இல் தேவேந்திரநாத்

தாகூர் வங்க மொழியில் எழுதி வெளியிட்ட 'பிரம்ம தர்மா' எனும் பிரம்ம சமாஜக் கொள்கை விளக்க நூலைத் தமிழில் மொழிபெயர்த்து 1870இல் வெளியிட்டார் ஸ்ரீதரலு நாயுடு.

கல்கத்தா 'தத்துவபோதினி'யில் வங்க மொழியில் வெளிவந்த ஒரு கட்டுரையைத் தமிழாக்கம் செய்து அதைச் சென்னை தத்துவபோதினிக்கு அனுப்பிவைத்தார், ஸ்ரீதரலு நாயுடு. இது, சென்னை தத்துவபோதினியில் 1865 ஆகஸ்டு 7ஆம் தேதி இதழில் பின்வரும் குறிப்புடன் வெளியிடப்பட்டது.

> அவர் பங்காளத்துத் தத்துவபோதினியில் பங்காளி பாஷையில் பிரசுரமான ஒரு சஞ்சிகையைத் தமிழில் மொழிபெயர்த்து எங்கட்கனுப்பியதை இன்றைய பத்திரிகையில் பிரசுரப்படுத்தி யிருக்கிறோம்.

இந்தச் செய்தியும் கல்கத்தா தத்துவபோதினிக்கும் சென்னை தத்துவபோதினிக்கும் இடையே இருந்த உறவிற்கு மேலும் ஒரு சான்றாகும். இவர் காலத்தில் தத்துவபோதினி வேத சமாஜ இதழாக அறிவிக்கப்படாமல் தக்ஷிண ஹிந்து தேச பிரம ஸமாஜத்தின் வெளியீடாக வரத்தொடங்கியது.

1868இல் வி. ராஜகோபாலாச்சாருலுவும் ப. சுப்பராயலு செட்டியும் காலமான பிறகு சற்று இழுபறி நிலையில் வெளிவந்த தத்துவபோதினி 1870இல் வெளிவராமல் நின்றுவிட்டது.

ஸ்ரீதரலு நாயுடுவின் காலத்தில் தத்துவபோதினியின் பிரதிகள் ஆயிரமாக அச்சிடப்பெற்றன. இதழின் முதல் பக்கத்தில் மகுட வாக்கியமாக, 'ஸத்ய மேவ ஜெயதே நாந்ருதம்' என்று கிரந்தம், தெலுங்கு, ஆங்கில எழுத்துகளில் அச்சிடப்பட்டது.

"தக்ஷிண ஹிந்து தேச பிரம்ம ஸமாஜத்தின் சார்பில் இனி இப்பத்திரிகை எப்போதும் போலக் காலக்ரமப்படி பிரசுரமாகு மென்று நினைக்கிறோம்" என்னும் நம்பிக்கை வெளியிடப்பட்டிருந் தாலும், தத்துவபோதினி மேற்கொண்டு எவ்வளவு காலம் வெளிவந்தது என்பதைத் திட்டவட்டமாக அறிய முடியவில்லை. 1872 ஆகஸ்டு 14 வரை வெளிவந்த தத்துவபோதினியைத்தான் பார்க்க முடிந்தது.

## க. துரைசாமி ஐயங்கார்

ஸ்ரீதரலு நாயுடுவின் சீடராக விளங்கிய க. துரைசாமி ஐயங்கார், தத்துவபோதினி ஆசிரியராக இருந்த காலத்தில் பத்திரிகையின் தமிழ்நடை செப்பமடைந்தது. இவர் மிகச் சிறந்த தமிழறிஞர்; பேச்சாற்றல் மிக்கவர்; கட்டுரைகள், கவிதைகள், துதிப் பாடல்கள் பலவற்றைப் படைத்துள்ளார் என்று பிரம்ம சமாஜ வரலாற்றில் அதன் ஆசிரியர் 'சாதாரண பிரம்ம சமாஜம்' எனும் பிரம்ம சமாஜத்தின் மூன்றாவது கட்டத்தின் தலைவரான பண்டித சிவநாத சாஸ்திரி குறிப்பிட்டுப் பாராட்டியுள்ளார். "சென்னையில் பூணூலைத் துறந்த முதல் மனிதர் இவர்தான்" என்று துரைசாமி ஐயங்காரை, பிரம்ம சமாஜத் தலைவர் சிவநாத சாஸ்திரி தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். பூணூலைத் துறந்த இவர் கடுமையான துன்பங்களை அனுபவித்தார். ஸ்ரீதரலு நாயுடுவின் மறைவிற்குப் பிறகு, பிரம்ம சமாஜத் தலைவர் தேவேந்திரநாத் தாகூர், துரைசாமி ஐயங்காருக்குப் பண உதவி செய்து வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. சென்னை புரசைவாக்கத்தில் வாழ்ந்த இவர் 1887இல் தமது அறுபதாவது வயதில் காலமானார்.

உருவ வழிபாட்டைக் கண்டனம் செய்து கும்பகோணத்தில் இருந்து இவர் எழுதிய கடிதம் தத்துவபோதினியில் 1866ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் வெளிவந்தது. அவருடைய தமிழ்நடைக்கு ஒரு சான்றை அறிய அக்கடிதத்தின் பின்வரும் பகுதி உதவுகின்றது.

> அப்பதுமைகளுக்குக் குமாஸ்தாவாகத் தாங்களிருந்து செய்வித்து ஆனந்தத்தையடைந்து அவைகளையே தெய்வமாகக் கொண்டு அச்சடங்குகளையே தெய்வ ஸ்தௌபத்தியங்களாகச் சொல்லிப் பாடி எப்போதும் பிரார்த்திக்கின்ற இத்தேசத்து ஸம்ஸ்கிருத, திராவிட வித்வான்களும் தேசாபிமானம் சீர்திருத்த விருப்பமுள்ள வர்களும், இவை கடந்த நடுநிலைமையுள்ளவர்களுமாகிய அநேகரிடத்தில் பிரம்ம சமாஜ ஏற்பாட்டைச் சொன்னேன். அவர்கள் எல்லோரும் அவ்வேறுபாடெல்லா வற்றையும் சத்தியமாகத் தவறென்று ஒப்புக்கொண்டிருக் கிறார்கள். அப்படி அவர்கள் ஒப்புக்கொண்டதை நாலுபேர் முன்பாகச் சொல்ல அஞ்சுகிறார்கள்.

### தத்துவபோதினியின் வரலாற்றைப் பற்றிய ஒரு தலையங்கம்

1872 மே 11இல் 'இந்தப் பத்திரிகை' என்னும் தலைப்பில் முதல் பக்கத்தில் தலையங்கமாக வெளிவந்த கட்டுரையில் தத்துவபோதினியின் தோற்றம், வளர்ச்சி, தேக்கம், தொடர்ச்சி பற்றிய பல முக்கிய குறிப்புகள் கூறப்பட்டுள்ளன. அவற்றின் தொகுப்பு, பின்வருவது.

> இப்பத்திரிகை தமிழில் ஆரம்பித்து எட்டாண்டாயிற்று. நடப்பது ஒன்பதாம் ஆண்டு. ஐந்தாண்டு வரையில் இடையறாது இது நடந்துவந்தது. ஆறாவது வருடத்தில் தமிழிலும் தெலுங்கிலுமாகச் சில சஞ்சிகைகள் பதிப்பிக்கப்பட்டன. முன்னொருகால் கூறியபடி பல அசந்தர்ப்பங்களில் அவ்வருடம் பத்திரிகைகள் முற்றும் நிறைவேறவில்லை. ஏழாவது வருட முழுவதும் எந்தப் பத்திரிகையும் துவக்கப்படவில்லை. மூன்றாவது வருடத்திற்கு இடையிலிருந்து புதிதாய் ஆரம்பிக்கப்பட்டு ஆறாவது வருட இடைவரையில் தனித்துப் பிரசுரமான இதே பெயர்கொண்ட தெலுங்குப் பத்திரிகையை அப்படியே அதுவரையில் நிறுத்தி ஆறாவது வருடச் சித்திரை மாதத்தில் பிரசுரமான தமிழ்ச் சஞ்சிகைக்குத் தொடர்ச்சியாக எட்டாவது வருட வைகாசி மாசத்தில் மறுபடியும் ஆரம்பித்து, தமிழ் தெலுங்குப் பத்திரிகைகளை ஒன்றாகச் சேர்த்து ஒரே சஞ்சிகையாக இப்பத்திரிகையைப் பிரசுரஞ் செய்துவரத் தலைப்பட்டோம். ஒன்பதாவதாகிய இவ்வருடத்தில் சென்ற வருடத்தைப் போலவே முக்கியமாய்த் தமிழ் தெலுங்கு பாஷைகளிலும் அவசியமானபோது அந்தந்தக் காலத்தில் ஆங்கிலேய பாஷையிலும் முன்போல விஷயங்களடங்கியதாய் சஞ்சிகையாகக் காலக்ரமப்படி தவறாமல் பிரசுரஞ் செய்துவரத் தீர்மானித்துக்கொள்ளுகிறோம்.

தமிழ் - தெலுங்கு - ஆங்கிலம் மொழிகள் அடங்கிய மும்மொழி இதழாகத் தத்துவபோதினி, "காலக்கிரமப்படி தவறாமல் பிரசுரஞ்செய்துவரத் தீர்மானித்துக்கொள்ளுகிறோம்'' எனும்

அறிவிப்பிற்கு ஏற்ப தொடர்ந்து வெளிவந்ததா? என்பதை முடிவு செய்ய சான்று கிடைக்கவில்லை.

## காசி விசுவநாத முதலியார் (1806 – 1871)

அக்காலத்தில் பிரபல நாடகாசிரியராகப் புகழ் பெற்ற காசி விசுவநாத முதலியார் பிரம்ம சமாஜ இயக்கத்தில் இணைந்திருந்தார். பிரம்ம சமாஜ இயக்கப் பிரச்சாரத்திற்காகவே 1870 இல் 'பிரம்ஹ சமாஜ நாடகம்' எனும் இசை நாடகத்தைப் படைத்தவர், இவர். உடுமலைப் பேட்டை வேத சமாஜத்தில் இவர் பேசிய பேச்சு, தத்துவபோதினியில் 1866 மார்ச்சு 18இல் வெளிவந்துள்ளது.

பிரம்ஹ சமாஜ நாடகத்தில் கட்டியங்காரன் பாடலொன்றில், "நேர் வாய்ந்த தத்துவபோதினிப் பத்திரிகை, நிலைமை பெறவே நடாத்த" கதாநாயகன் பாடுபட்டதாக இசைக்கப்பட்டுள்ளது. இந்நாடகத்தில் தத்துவபோதினியை முதலிலேயே அறிமுகப்படுத்தியுள்ளார், காசி விசுவநாத முதலியார். அவர் பிரம்ம சமாஜம் பாடலொன்றில் தத்துவபோதினி இதழில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

> "தத்துவபோதினி யெனும் பத்திரிகையொன்று தாபித்து
> உலகிலது
> சகல தேசமுஞ் சென்று சங்கதிகள் தெரிவிக்கச் செய்வித்து"

## சே.ப. நரசிம்மலு நாயுடு (1854 – 1922)

தமிழ்நாட்டின் பிரம்ம சமாஜத் தலைவர்களுள் ஒருவராகப் புகழ்பெற்றவரும், பிரபல பத்திரிகையாளரும், பன்னூல் ஆசிரியருமான சேலம் பகடால நரசிம்மலு நாயுடு, சேலம் வேத சமாஜத்தில் தத்துவபோதினியைப் படித்துப் பிரம்ம சமாஜத்தில் பற்றுகொண்டார்.

தமிழகத்தில் பிரம்ம சமாஜத்தை அறிமுகம்செய்வித்து ஒன்பதாண்டு காலம் தத்துவபோதினி வெளிவந்தது, தமிழ் இதழியல் வரலாற்றில் குறிப்பிடத்தக்க பங்களிப்பாகும். தமிழகத்தில் பிரம்ம சமாஜம் செல்வாக்கு பெறத் தவறியதால், தத்துவபோதினியும் தொடர்ந்து வெளிவராமல் போனது.

கேசவசந்திர சென் 1864 பிப்ரவரியில் தமது சென்னை வருகையப் பற்றித் தமது நாட் குறிப்பில் எழுதியதாவது:

Societies and meeting for intellectual improvement are rare. In the matter of social return, Madras is lamertably backward. The people shudder at any change; they can not reconcile innovation with their chorished ideas and convictions. The fact that even the rece exted of service several absurd usages and customs is fair proof of this. Caste rules over them with iron sceptre, and few are daruing through to defy its authority.... In fact Madras is non rital enough for those grand movements. Which the Brahmo Samaj is developing in Bugal

பிரம்ம சமாஜமும் தத்துவபோதினியும் தமிழகத்தில் செல்வாக்குப் பெறாமல் போனதற்கான காரணத்தை மேற்காணும் நாட்குறிப்புச் செய்தியால் அறிகின்றோம்.

# ஜநவிநோதிநி

**1870** இரா. ஞானபுஷ்பம்

இன்று மனித வாழ்வில் சிறப்பிடம் பெறுவன இதழ்கள். நாட்டு நடப்புகளை உணர்த்துகின்ற நாளிதழ்கள், அறிவு வளர்ச்சிக்கு உதவுகின்ற பருவ இதழ்கள் என இரு வகைகளில் இதழ்கள் பெருகி வளர்ந்துள்ளன. நூல்களைப் படிப்பவர்களை விட இதழ்களைப் படிப்பவர் தொகை மிகப்பலவாய் இருத்தலே இதன் காரணமாதல் கூடும். இவ்விதழ்கள் மொழி, இலக்கியம் என்ற இரு நிலைகளில் தமிழுக்கு ஆக்கம் தந்து வருகின்றன.

> நூற்கல்வியின் பொருள்நுட்பங்களை வாழ்க்கை முறையிலேயே ஊட்டிக் கல்விப் பயனை நுகர்விக்கும் அருந்துணை பத்திரிகையே. சிறிது கல்வியுடையாரையும் பத்திரிகை நாளடைவில் பல்பொருள் அறிஞராக்கும்[1]

என்னும் கருத்திற்கேற்ப பத்திரிகை மொழிக்கு ஆக்கம் சேர்ப்பதுடன் மக்கள் வாழ்க்கையையும் திருத்தி உயர்த்துகிறது.

இந்நிலையில், தமிழ் இதழ்கள் பற்றிய ஆய்வு இந்த நூற்றாண்டிற்கு இன்றியமையாத தேவையாகின்றது. நூறு ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் இலக்கிய வளர்ச்சியில் தன்னை ஈடுபடுத்திக்கொண்ட 'ஜநவிநோதிநி' இதழ் இங்கே ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

## ஜநவிநோதிநி

> அறிவும் ஆராய்ச்சியும் வளர்ந்துவரும் இக்காலத்தும் வெளிவராத பல அரிய செய்திகள் ... ஜநவிநோதிநியில் வெளிவந்துள்ளன[2]

என இதன் அருமையை கா. நமச்சிவாய முதலியார் குறிப்பிடுகிறார். நூறாண்டுகளின் முன்னரே வெளிவந்த இந்த மூத்த இதழின் இலக்கியத் தொண்டு இந்தக் கட்டுரை வழி அறிமுகப்படுத்தப்பட்டு விளக்கப்படுகிறது.

## இதழ் வெளியீடு

சென்னை அரசாங்கத்தின் தூண்டுதலால், சென்னை அரசாங்கம் நியமித்த துரைத்தனக் கல்விச் சங்கத்தாரால் 1870ஆம் ஆண்டில் மாத இதழாகத் தொடங்கப்பட்டது ஜநவிநோதிநி இதழ். இருபது ஆண்டுக்காலம் எந்தத் தடங்கலும் இன்றித் தொடர்ந்து, ஒரே நேரத்தில் தமிழ், தெலுங்கு ஆகிய இருமொழிகளிலும் வெளிவந்தது இது.

> இலக்கியம் படைப்பது தனிமனித முயற்சி. இதழ்கள் நடத்துவதென்பது கூட்டு முயற்சி. பலரது சிந்தனையில் தோன்றிய படைப்புகளை ஒருசேரத் தொகுத்துத் தரும் திருப்பணி[3]

என்பர். துரைத்தனக் கல்விச் சங்கம் என்ற அமைப்பின் முயற்சியால் உருவாக்கப்பட்ட இந்த இதழின் எந்தப் படைப்புக்கும் ஆசிரியர் பெயர் குறிப்பிடப்படவில்லை. 1881ஆம் ஆண்டில் வெளிவந்த அனைத்து இதழ்களிலும் 'கையொப்பதாரர்களுக்கு அறிக்கை' என்ற தலைப்பில் காணப்படும்.

> ஜநவிநோதிநி பத்திரிகைக்குச் சென்ற டிசெம்பர் மாதம் 31ஆம் தியதி வரையில் செலுத்த வேண்டிய கையொப்பத் தொகையை இன்னும் செலுத்தாமல் நாளது 1881 வருஷம் அக்டோபர் மாதத்துக்குப் பின்னும் பாக்கி வைத்துக் கொண்டிருப்பவர்களை, இனிக் கையொப்பக்காரராக வைத்திருப்பதில்லை; அவர்களுடைய பெயர் சந்தா புத்தகத்தினின்றும் நீக்கிவிடப்படும்
>
> (சங்கத்தாருடைய உத்தரவின்படி)
>
> ஜி. டங்கன், காரியதரிசி

என்னும் இந்தக் குறிப்பில் மட்டும் ஜி. டங்கன் என்ற பெயர் காணப்படுகிறது. வேறு எங்கும் யாருடைய பெயரும் குறிப்பிடப் படவில்லை.

**விலை**

ஆண்டு முழுவதற்குமான சந்தா உள்நாட்டவருக்கு ஒரு ரூபாய் எட்டணாக்களாகவும் வெளிநாட்டவருக்கு ஒரு ரூபாய் பதினான்கணாக்களாகவும் நிர்ணயம் செய்யப்பட்டிருந்தது.

## ஆய்வு

பார்வைக்குக் கிடைத்த 1884, 1885ஆம் ஆண்டுகளில் வெளிவந்த ஜநவிநோதிநியின் இதழ்களைக் கொண்டே அதன் இதழமைப்பும் பொருளமைப்பும் நடைநலமும் கணிக்கப்படுகின்றன.

1884ஆம் ஆண்டில் இரண்டு மாதங்களுக்கு ஓர் இதழாக ஆறு இதழ்கள் வெளிவந்துள்ளன. 1885ஆம் ஆண்டில் ஜனவரி பிப்ரவரி, மார்ச்சு, ஏப்ரல், மே, ஜூன், நவம்பர், டிசம்பர் மாதங்களில் இரண்டு மாதங்களுக்கு ஓர் இதழும், ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் தனித்தனியே மாதமொன்றிற்கு ஓர் இதழுமாக மொத்தம் எட்டு இதழ்கள் வெளிவந்துள்ளன.

## இதழ்ப்பெயரும் நோக்கமும்

ஜநவிநோதிநி என்பது 'ஜனங்களுக்கு வினோதமான செய்திகளை வழங்குதல்' என்னும் பொருளில் பெயர் தரப்பட்டுள்ளது.

ஆண்டின் தொடக்கத்தில் வெளிவந்த இதழில், "மகிழ்ச்சியூட்டக் கூடியதும் அறிவுறுத்தக் கூடியதுமான தகவல்களைத் தரும் இதழ்" என்ற குறிப்பு காணப்படுகிறது. இதழ்தோறும் முதல் பக்கத்தில், "Amusing and Instructive information in Tamil" என்ற குறிப்பும் உள்ளது. காலத்தை இன்பமாகக் கழிக்கச் செய்தலும், மக்களைத் திருத்தி உயர்த்துதலும் ஜநவிநோதிநியின் நோக்கம் என்பது தெளிவாகிறது. இந்த நோக்கங்களுக்கு ஏற்பவே இதழ் அமைப்பும் பொருளமைப்பும் நடைநலமும் விளங்குகின்றன.

## இதழமைப்பு

இதழின் அளவு, பக்க அமைப்பு, பத்தி அமைப்பு என்பன புறவடிவமாகவும், மேலட்டை முதல் பின்புற அட்டைவரை இதழில் இடம்பெறும் அனைத்துப் பொருள் வகைகளும் இதழின் அக வடிவமாகவும் நின்று இதழமைப்பை உருவாக்குகின்றன.

மேலே குறிப்பிட்டபடி இதழின் அளவும் பக்க அமைப்பும் பத்தி அமைப்பும் இதழின் புறவடிவை உருவாக்கித்தருகின்றன. ஒவ்வொரு இதழும் ஒரு குறிப்பிட்ட வடிவ அளவைப் பெற்றே இருக்கும். ஜநவிநோதிநி நீண்ட சதுர வடிவினது. இது 20.5 செ.மீ. நீளமும் 13.5 செ.மீ. அகலமும் கொண்ட இதழ்.

ஒவ்வோர் இதழின் பக்க அமைப்பும் அவ்விதழ் தோன்றிய நோக்கத்துக்கும் அதில் இடம்பெறும் பொருள் வகைகளுக்கும் ஏற்ப மாறுபடும். அதாவது ஓர் இதழில் வெளியிட வேண்டிய பொருள்களைச் சேகரித்துக் கொண்டு, இவற்றில் எந்தப் பொருளை எந்தப் பக்கத்தில் வெளியிட வேண்டும் என்பதைத் திட்டமிட்டு வரிசைப்படுத்தி அமைத்தலாகும். இதே போன்று பத்தி அமைப்பும் நோக்கத்தை முன்னிறுத்தியே அமைக்கப்படும்.

## பக்க அமைப்பு

இரண்டு மாதங்களுக்குரிய செய்திகளை இணைத்து வெளியிடப்பட்ட இதழ்கள் 42 பக்கம் முதல் 50 பக்கம் வரையிலான அளவில் அமைந்துள்ளன. மாதம் ஒருமுறை வெளியிடப்பட்ட இதழ்கள் 26 பக்கம் முதல் 28 பக்கம் வரையிலான அளவில் உள்ளன. ஒவ்வொரு பக்கத்தின் மேல்பகுதியில் வரிசையாக ஓராண்டு முழுவதற்கும் தொடர்ச்சியாகப் பக்க எண்கள் தரப்பட்டுள்ளன. அட்டவணை, பத்திரிகை படிப்பவர்க்கு அறிக்கை, படங்கள் ஆகியவற்றிற்குப் பக்க எண்கள் தரப்படவில்லை. பொருள் தொடங்கும் இடத்தில்தான் பக்க எண் தொடங்குகிறது. ஏதேனும் ஒரு முக்கியமான கட்டுரை இதழின் முதல் பக்கத்திலும் அடுத்த பக்கங்களில் கதைகளும் கட்டுரைகளும் மாறிமாறியும், அதைத் தொடர்ந்து சிறுவர்க்கான கதையும், இறுதியில் சமாசாரமும் என்ற வகையில் பக்கங்கள் அமைந்துள்ளன. ஒரு பொருள் முடியும் பக்கத்திலேயே அடிக்கோடிட்டு விட்டு, அடுத்தபொருள் தொடங்கப் பட்டுவிடுகிறது. இந்த ஒரே சீரான அமைப்பு முறையில் எந்த மாற்றமுமில்லை. இதழின் திட்டமிட்ட தெளிவான போக்கை இது உணர்த்துகிறது.

## பத்தி அமைப்பு

பத்தி அமைப்பு என்பது சேகரிக்கப்பட்ட பொருள்களைப் பல களங்களாக அமைத்தும் கருத்து விளக்கங்களுக்கேற்பப் பகுத்தும் ஒரு கருத்து முடிவடைந்து மற்றொரு கருத்து தொடங்கும் இடத்தில் மற்றொரு பத்தியாக அமைத்தும் தருவதாகும். தோற்றப் பொலிவும் படிப்பு வசதியும் பொருள் தெளிவும் இதன் பயன்களாகும்.

இதழியலின் பொதுவான இலக்கணப்படி இதழ்கள் செங்குத்தான பத்திகள் இரண்டு களங்களில் அமைக்கப்படும். ஜனவிநோதினியில் களங்களாகப் பிரிக்கும் முறை காணப்படவில்லை.

கருத்துகளுக்கேற்ற பத்தி அமைப்பைக் கட்டுரைகளிலும் கதைகளிலும் காணமுடிகிறது.

> ஒவ்வொரு கருத்தையும் ஒரு தனிப்பாகியில் அமைத்து வரைதல் வேண்டும். ஒரு பெருங்கருத்தில் பல உட்கூறுகள் இருக்குமாயின், அவ்வுட்கருத்துக்களையும் வெவ்வேறு பாகியிலமைத்தல் வேண்டும்[4]

என்ற தெளிவுடன் ஜநவிநோதிநியின் பத்தி அமைப்பு உருவாக்கப் பட்டுள்ளது.

## அக வடிவம்

ஓர் இதழின் உள்ளடக்கம் அதில் காணப்படும் பொருள்களின் உட்கூறுகளோடு அதன் வைப்பு முறையாலும் சிறக்கும். இதழின் மேலட்டை முதல் பின்புற அட்டை வரையுள்ள அனைத்துக் கூறுகளையும் எவ்விதம் எங்கெங்கே இடம்பெறச் செய்கிறார்களோ அதற்கேற்பவே அகவடிவம் அமையும்.

## அட்டைப் பக்கம்

பருவ இதழ்களில் அட்டைப் பக்கம் செம்மையுற அமைதல் வேண்டும். ஜநவிநோதிநியின் அட்டைப் பக்கம் எதுவும் பார்வைக்குக் கிடைக்கவில்லை. 1874ஆம் ஆண்டின் ஏப்ரல் மாத இதழில் அட்டவணைப் பக்கத்தின் பின்புறம்,

> சென்னை இராஜதானிப் புத்தக சங்கத்தார் இப்பத்திரிகையைத் தமிழ் நாட்டாருக்கு முன்னிருந்ததைக் காட்டிலும் இனிப்பாயும் அங்கீகாரமாயும் இருக்கும்படிச் சற்று வேறுமாதிரிப்படுத்திச் சில மாதங்களாகப் பிரசுரம் செய்து வருகிறார்கள். இப்பத்திரிகை, வர்ணத்தால் சித்திரவேலை செய்து அழகாயிருக்கத்தக்க மேற்போர்வையால் அலங்கரிக்கப் பட்டதாயும், ஏதாவது ஒரு மேன்மைப்பட்டவர்களுடைய படமாவது அல்லது பேர்பெற்ற இடம், சரித்திரம் இவைகளின் சித்திரமாவது, அவற்றின் வரலாற்றுச் சுருக்கத்தோடு கூட ஒவ்வொரு சஞ்சிகையிலும் சேர்க்கப்பட்டதாயும், தகுந்த விஷயங்கள் பதித்த இருபத்தாறு பக்கங்களுக்குக் குறையாததாயும் பிரசுரஞ் செய்யப்படுகின்றது[5]

என்ற குறிப்பு காணப்படுகிறது. அந்தக் குறிப்பு, இதழ் தொடங்கிய இரண்டு மூன்று ஆண்டுகளின் பின்னர் மேலட்டை எவ்விதம் அமைந்திருந்தது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. வண்ண மேலட்டையில் புகழ்பெற்றவரின் படம், அல்லது புகழ்பெற்ற இடத்தின் சித்திரம், அவைகளின் வரலாற்றுச் சுருக்கம் என்பவை இடம்பெற்றிருந்தமை புலனாகின்றது. அட்டை அமைப்பில் செலுத்தப்பட்ட கவனத்தையும் இது காட்டுகிறது.

### அடுத்த பக்கம்

முன்புற அட்டைக்கு அடுத்த பக்கத்தில் (காண்க: பின்னிணைப்பு - 1) 'ஜநவிநோதிநி' என்னும் இதழ்ப்பெயர் தமிழில் தரப்பட்டுள்ளது. அதன் கீழே ஆங்கிலத்தில் 'JANAVINODINI A POPULAR MAGAZINE OF AMUSING AND INSTRUCTIVE INFORMATION IN TAMIL (ILLUSTRATED)' என்பதும் இதழ் வெளிவந்த ஆண்டும் தொகுதி எண்ணும் வெளியீடும் வெளியீட்டு இடமும் காணப்படுகின்றன. அனைத்து இதழ்களும் இதே முறையில்தான் அமைந்துள்ளன.

### அட்டவணைப் பக்கம்

அடுத்து அட்டவணைப் பக்கம் வைக்கப்பட்டுள்ளது (காண்க: பின்னிணைப்பு - 2). அட்டவணைப் பக்கத்தில் மேலே இதழ்த் தலைப்பு ஆங்கிலத்திலும் அடுத்துத் தமிழிலும் தரப்பட்டுள்ளது. அடுத்து, இதழில் இலக்கம் (ஓராண்டிற்கு இதழ்களுக்கு இலக்கம் தொடர்ந்து தரப்பட்டுள்ளது) வெளிவரும் மாதம் / மாதங்கள், வெளிவரும் ஆண்டு, புத்தகத் தொகுதி, எண் என்பன இடம் பெறுகின்றன. இதன்கீழே பக்கம் நேர்க்கோடிட்டு இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு இடப்புறம் ஆங்கிலத்திலும் வலப்புறம், தமிழிலும் அட்டவணை, தலைப்பு, பக்க எண் விவரங்களோடு தரப்பட்டுள்ளன. இந்த விளக்க விவரம் அவரவர் விருப்பிற்கேற்ற பொருள்களை எடுத்துப் படிக்க வாய்ப்பாகிறது.

### அட்டவணைக்கு அடுத்த பக்கம்

அட்டவணைப் பக்கத்துக்கு அடுத்த பக்கம் 'TO OUR READERS' என்றும் அதன் பின்பக்கம் 'இப்பத்திரிகையைப் படிப்பவர்க்கு அறிக்கை' என்றும் அமைகிறது. இரண்டு பக்கங்களிலும் இடம்பெறும் செய்தி ஒன்றே (காண்க: அட்டவணை 3 & 4). இதில்,

> நம்மால் கூடியவரையில் பாடுபட்டுச் சிறியோர் பெரியோர் ஆகிய அனைவர்க்கும் இனிப்புண்டாக்கு கின்றவையான மலர்களையே ஆய்ந்தெடுத்து இதனுள் சேர்த்திருக்கிறோம்

என்ற குறிப்பும்,

> இதுவரையில் இப்பத்திரிகைக்கு ஆதாரமாக நின்று இதை மேலோங்கச் செய்யும்படி நமக்கு உற்சாக முண்டாக்கின பலபேரிடத்திலும் நாம் நன்றி பாராட்டிக் கேட்டுக் கொள்வதொன்றுண்டு. அதாவது இதுவரையில் ஜநவிநோதிநியை வாங்காத தம்தம் பந்துமித்திரர்களைத் தூண்டி வாங்கிக் கொள்ளும்படி செய்து, அதனால் இப்பத்திரிகையைப் பின்னும் சிறப்பித்து மிகுதியாகப் பரவச் செய்யும்படி இதைப் பிரசுரம் செய்கிற சங்கத்தார்க்கு மனவெழுச்சி யுண்டாக்கக் கடவர்கள் என்பதேயாம்

என்ற குறிப்பும் காணப்படுகின்றன. இதழ்த் தயாரிப்பிலும் அதைப் பரவச் செய்வதிலும் துரைத்தனக் கல்விச் சங்கத்தார் காட்டிய அக்கறையை இவை தெளிவுபடுத்துகின்றன.

## ஆண்டுத் தொகுப்புகளில்

ஆண்டுத் தொகுப்புகளில் மேலே குறிப்பிட்ட பக்கத்திற்கு அடுத்த பக்கத்தில் ஓராண்டுக்கும் உரிய பொருளடக்கம் தரப்பட்டுள்ளது (காண்க: பின்னிணைப்பு 5, 6). தலைப்புகள் அகரவரிசைப்படுத்தப் பட்டும் பக்க எண்களோடும் அமைக்கப்பட்டுள்ளன. இதே முறையில் ஆங்கிலத்திலும் அட்டவணை காணப்படுகிறது.

## பொருட்பகுதி

பொருளடக்கத்தைத் தொடர்ந்து ஜநவிநோதிநியின் பொருட்கூறுகள் முறைப்படுத்தித் தரப்பட்டுள்ளன. ஜநவிநோதிநி - கட்டுரைகள், கதைகள், உரையாடல், சமாசாரம் என்ற நான்கு பொருட்கூறுகளைக் கொண்டுள்ளது. கட்டுரை யொன்றைத் தொடக்கமாகவும் சமாசாரத்தை இறுதியாகவும் கொண்டே அனைத்து இதழ்களும் காணப்படுகின்றன.

### பின்அட்டை

பின் அட்டை பற்றி எதுவும் அறிந்துகொள்ள முடியவில்லை. இதழ், நீண்ட சதுர வடிவும், வண்ண அட்டையும் வெளியிடுவோர் குறிப்பும், பொருளடக்கமும், ஒரே மாதிரியான பொருள் வைப்பு முறையும் கொண்டதாய் அமைக்கப்பட்டிருந்தது தெளிவாகிறது.

### பொருளமைப்பு

ஜநவிநோதிநியின் இதழ்களை ஒருங்கு வைத்துப் பார்க்குமிடத்து அதன் மையநோக்கு இன்பமூட்டுதல், அறிவூட்டுதல், அறிவுறுத்தல் என்பவற்றையே சுற்றி இயங்குகின்றது

### கட்டுரைகள்

ஜநவிநோதிநியில் 1884ஆம் ஆண்டில் 41 கட்டுரைகளும் 1885 ஆம் ஆண்டில் 37 கட்டுரைகளும் வெளியிடப்பட்டுள்ளன. இவை வரலாற்றுக் கட்டுரைகளாகவும் விளக்கக் கட்டுரைகளாகவும் உள்ளன.

ஒவ்வொரு கட்டுரையும் ஒரு பக்கம் முதல் பதின்மூன்று பக்கங்கள் வரையிலான அளவின. ‘ஸால்ஸெத்து என்னும் தீவு’ என்னும் தலைப்பில் உள்ள கட்டுரையே ஒருபக்க அளவுச் சிறிய கட்டுரை. ‘பச்சயைப்ப முதலியார் என்னும் தர்மிஷ்டருடைய சரித்திரம்’ பதின்மூன்று பக்க அளவில் உள்ள நீண்ட கட்டுரை. பிற கட்டுரைகள் யாவும் இரண்டு பக்கங்கள் முதல் ஒன்பது பக்கங்களுக் குள்ளாக அளவெல்லை யுடையன.

### வரலாற்றுக் கட்டுரைகள்

ஒரு பொருளின், ஒரு நாட்டின், ஒரு மனிதரின் வரலாற்றை விளக்கிக் கூறுவதே வரலாற்றுக் கட்டுரை. ஜநவிநோதிநிக் கட்டுரைகள் நாடுகளையும் மனிதர்களையும் பற்றிய வரலாற்றுக் கட்டுரைகளாக உள்ளன.

### நாட்டு வரலாறுகள்

நாட்டு வரலாறுகளாக - பர்மா சீயம் தேசங்கள் (1884 - பக். 127-129), ஆப்கானிஸ்தானத்தின் அரண் எது? (1885 : பக். 87-92), பர்மா தேசத்தைப் பற்றிய சில விஷயங்கள் (1885 : பக். 221-224), ஜப்பான் தேசத்தைப் பற்றி (1885 : பக். 279-285) என்னும் கட்டுரைகள் உள்ளன.

வரலாறு, அமைவிடம், நிலப்பரப்பு, விலங்குகள், விளைபொருள்கள் பற்றிய தகவல்களின் விளக்க விரிவாகக் காணப்படுகின்றன. இந்த நாடுகளைப் பற்றிக் கட்டுரை வெளியிடுவதற்கான காரணமும் காட்டப்படுகிறது.

> இப்போது நமது தேசத்தில் எவ்விடத்திலும் பர்மா தேசம், பர்மா தேசம் என்ற் கூச்சலே அதிகமாகி அனைவரும் அத்தேசத்து வரலாற்றைக் கேட்க விருப்பம் கொண்டிருக்கிறார்கள்; ஆதலின் அதைப்பற்றி நாம் இங்கே சிறிது எடுத்து உரைப்போம்[8]

என மக்கள் விருப்பத்தைக் காரணமாய்க் குறிப்பிடுவர்.

> அத்தேசத்து வீடுகளெல்லாம் மூங்கில்களாலேயே கட்டப்பட்டு மேலே ஓலைகளால் மூடப்பட்டிருக்கின்றன. வெள்ளம் வந்து வாரிக்கொண்டு போகுமேயெனப் பயந்து அம்மூங்கில் வீடுகள் தரைக்குமேல் கொஞ்சம் உயர்த்தியே கட்டப்படுகின்றன. அரசனுடைய அனுமதியின்றி அங்கே ஒருவரும் கற்சுவரெடுத்து வீடுகட்டிக் கொள்ளக்கூடாது[9]

என்பது போன்ற விநோதமான செய்திகளோடு அமைகிறது கட்டுரை.

### வாழ்க்கை வரலாறுகள்

> தக்கான் ஒருவனின் வாழ்க்கையானது நடுநிலை நோக்குடைய எழுத்துக்கலைஞன் ஒருவனின் கவனத்திற்கு உள்ளாகும்போது வாழ்க்கை வரலாறு என்னும் இலக்கியப் படைப்பு உருவாகின்றது[10]

ஜநவிநோதிநியில் சாதனையாளர்களான மன்னர்கள், மந்திரிகள், பிரபுக்கள், கல்வியாளர், மருத்துவத் தாதி ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகள் இடம்பெற்றுள்ளன.

### கல்வியாளர் வரலாறுகள்

பச்சையப்ப முதலியார் என்னும் தர்மிஷ்டருடைய சரித்திரம் (1885:51), மலையாள நாட்டுக் கவியாகிய துஞ்சத்தெழுத்தச்சன் சரித்திரச் சுருக்கம் (1884:209), கவிரத்நம் (1885:103) என்ற தலைப்பில் காளிதாசன் வரலாறு ஆகியவற்றோடு ஸம்ஸ்கிருத கவிகள் சரித்திரம்

(1885:165,181) என்ற பொதுத்தலைப்பில் இரண்டு இதழ்களில் பவபூதி, தனஞ்சயர், பாணன், மயூரன், தண்டி, சோமதேவர், பட்டநாராயணன், ஸ்ரீஹர்ஷர் ஆகியோர் வரலாறுகள் இடம்பெற்றுள்ளன.

### விளக்கக் கட்டுரைகள்

இடங்களையும் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் விளக்கி யுரைப்பன விளக்கக் கட்டுரைகள். ஜநவிநோதிநியில் இட விளக்கக் கட்டுரைகளும் பொருள் விளக்கக் கட்டுரைகளும் நிகழ்ச்சி விளக்கக் கட்டுரைகளும் உறுப்புக்களின் செயல்விளக்கக் கட்டுரைகளும் சொல்விளக்கக் கட்டுரைகளும் பண்பு விளக்கக் கட்டுரைகளும் வாழ்வியல் விளக்கக் கட்டுரைகளும் செறிவான செய்திகளோடு வெளிவந்துள்ளன.

கடலின் சிறந்த காட்சிகள் (1884:89), கடற்கரைக் காட்சி (1885:97), உறைபனி அடர்ந்த நாடுகள் (1884:135), ஸால்ஸெத்துத் தீவு (1884:154) என்பன கடலும், கடற்கரையும், உறைபனி அடர்ந்த நாடும், ஒரு தீவும் வழங்கும் காட்சிகளை விளக்கியுரைக்கின்றன.

பொருள் விளக்கக் கட்டுரைகள் உயிர்ப் பொருள்களையும் உயிரில்லாப் பொருள்களையும் விளக்கும் கட்டுரைகளாகக் காணப்படுகின்றன. பூனையைப் பற்றி (1884:167), கடற்பாசி (1884:171), தேனீக்களைப் பற்றிய சிறுகுறிப்பு (1884:214), வெவ்வேறு ஜாதி ஜந்துக்கள் பேதமில்லாமல் நேசிக்கும் விசித்திரங்கள் (1885:208), தொட்டாற் சுருங்கி என்பன உயிர்ப்பொருள்கள் பற்றியன. ஜாதிக்காய், மூங்கில் (1884: 194), ரோஜா அத்தர் (1884:207), டில்லி-மயூர சிங்காதனம் (1885:110) என்பன உயிரில்லாப் பொருள்களைப் பற்றிய கட்டுரைகள்.

தோட்டக்காரன் மகள் (1884:28), ஒரு மாடப்புறா (1884:66), ஒரு விசித்திரமான சாட்சி (1885:151) என்பன நிகழ்ச்சிகளை விளக்கி யுரைக்கின்றன.

மனித உறுப்புகளில் செவியும் நாக்கும் பற்றிய கட்டுரைகளை ஜநவிநோதிநி வெளியிட்டுள்ளது. ஒலி கேட்பதெப்படி? (1884:191) நாக்கும் சுவையுணர்ச்சியும் (1884:119) என்பன உறுப்புகளும் செயல்களும் குறித்த கட்டுரைகள்.

சில சொற்களைக் கொடுத்து, அவற்றுக்குரிய சரியான பொருளை விளக்கும் சொல்விளக்கக் கட்டுரை ஒன்றனை ஜநவிநோதிநி

வெளியிட்டுள்ளது. 'சில சொற்களில் அடங்கிய பல விஷயங்கள்' (1885 : 170) என்னும் கட்டுரை, செட்டு, பரிசுத்தம், உடுப்பு, அவசரம், கடிதம் எழுதுதல், சரியாய் உச்சரித்தல், எழுத்து, நடை போன்ற பல சொற்களை விளக்கி உரைக்கிறது.

> தெரியாத மூடனும் நற்பயிற்சி யற்றவனுமே எடுத்த காரியத்திற்கெல்லாம் படபடவென்று நகைப்பார்கள். இப்படி நகைத்தல் பாமர ஜனங்களின் ஸ்வபாவமே யன்றிக் கற்றறிந்தவர்களுடைய குணமல்ல. வாய்விட்டுச் சிரித்தல் சிலரிடம் பெரும் பயித்தியக்காரத்தனம், உண்மையான ஹாஸ்யம் வாய்விட்டுச் சிரிக்கும்படி ஒருநாளும் செய்யாது; மனதிற்கு ஒருவித சந்தோஷத்தை மாத்திரம் கொடுக்கும் (1885:172)

சிரிப்பு என்பதை விளக்கும் இதே போக்கில் பிற சொற்களுக்கும் விளக்கம் தருகிறது இந்தக் கட்டுரை.

முயற்சி, ஈகை, சொல் தவறாமை, இரக்கம் என்னும் பண்புகளை விளக்கும் கட்டுரைகளை ஜநவிநோதிநி வெளியிட்டுள்ளது. எதற்கு உதவுவான் (1884:68), முயற்சியுடையார் இகழ்ச்சியடையார் என்னும் கட்டுரைகள் முயற்சியினால் எதனையும் சாதிக்கலாம் என்பதை விளக்குகின்றன. பணமில்லாமலே பரோபகாரம் (1885:27) ஈகைப் பண்பை விளக்குவது. ஜீவனத்துக்காகத் தொழில் தேடிப்போன சிறுவன் (1885:126), சொல் தவறாப் பண்பை விளக்குவது. தயாள குணமுள்ள திரள் (1885:195) இரக்கப் பண்பை விளக்குவது.

மனிதர் வாழ்வாங்கு வாழ்வதற்குரிய நெறிமுறைகளை விளக்குவன வாழ்வியல் கட்டுரைகள். கலகத்தை அடக்கும் ஔஷதி (1884 : 18), கடவுளை வழிபடுவதே கலகத்தை அடக்கும் வழி என முடிவுரைக்கிறது. பெரியோர்களைப் பெருமைப்படுத்துதல் (1884 : 19), பீமசேனன் கதை நிகழ்ச்சியைக் கொண்டு பெரியோரைப் பெருமைப் படுத்துவோர் அடையும் உயர்வைக் கூறுகிறது. கடன்படுவதனால் வரும் கெடுதி (1884:25), நீதி வாக்கியங்கள், பழமொழிகள் மூலம் கடன்படுவதால் வரும் கேடுகளையும் கடனின்றி வாழ வேண்டுவதன் தேவையையும் வலியுறுத்துகிறது.

கையிலாகாத வீண்ஜம்பக்காரன் (1884 : 59), விராடதேசத்து உத்தரன் கதை மூலம் வீண்ஜம்பத்தின் கேடுகளை விளக்குகிறது.

நிதானித்து யோசித்தல் (1884 : 74) என்னும் கட்டுரை - கொலம்பஸ், புல்தன், வாஷிங்டன், நெப்போலியன் ஆகியோர் வெற்றிக்கு நிதான யோசனையே அடித்தளம் என விளக்குகிறது. மக்கள் அனைவருக்கும் இது தேவை என அறிவுறுத்துகிறது.

தாய்மார் தம் மக்களைப் பயிற்றுமுறை (1885:14), மக்கட் செல்வத்தின் மாண்பையும் மக்களின் உடலையும் உள்ளத்தையும் பேணும் முறைகளையும் விளக்குகிறது.

ஊக்கமது கைவிடேல் (1885:64) என்னும் கட்டுரை, "நமது தேசத்திலும் இதர தேசங்களிலும் கைப்பாடுபட்டு வருந்தும் ஏழைகளாய்ப் பிறந்து, விடாமுயற்சியினாலும் ஊக்கத்தினாலும் லோகோபயோகமும் செல்வாக்குமுள்ள உயர்பதம் பெற்றவர்கள் இப்பொழுது நாலு பேர் பத்துப் பேரல்ல, பல பெயர் உண்டு" என்பதைச் சுட்டி விடாமுயற்சியை விளக்குகிறது.

அடக்கம் (1885:122), அடக்கம் என்றால் என்ன என்பதை விளக்குவதோடு அடக்கமும் கூச்சமும் வேறுவேறானவை எனத் தெளிவுபடுத்தி,

> தன்னிடத்திலே தைரியமில்லாமல் பயந்து கூச்சமுள்ள
> மனிதன் என்னதான் வித்வானாயிருந்த போதிலும்
> முன்னுக்கே வரமாட்டான் (ப. 122)

எனக் கூச்சத்தின் விளைவையும் தெளிவுபடுத்துகிறது. அடக்கம் என்பதை, "ஜனங்கள் ஒருவருக்கொருவர் செய்துகொள்ளும் மரியாதை, நடையுடை பாவனை, பேசிக்கொள்ளும் இனிய வார்த்தை இவைகளையெல்லாம் நாம் உற்றுப் பார்த்து" வளர்த்துக் கொள்ள வேண்டும் எனவும் அறிவிக்கிறது (ப. 125).

ஸம்பாசனை விதிகள் (1885:143) ஒரு சங்கத்தில் பேசவேண்டிய முறைகளை விளக்குகிறது. "சங்கத்தின் இயல்பறிந்தும், வேறு விஷயங்களுக்குத் தாவாமலும், தற்புகழ்ச்சி இன்றியும், சொந்தக் காரியங்களைத் தவிர்த்தும், சுருக்கமாகவும் . . ." எனப் பல விதிமுறைகளை விளக்கியுரைக்கிறது. நன்னடக்கை அல்லது மரியாதை (1885:160) என்ற கட்டுரையில்

> நன்னடக்கை யென்பது நற்புத்தி, நற்குணம், தன் சுகத்தைத் துறந்தாயினும் பிறர்க்காகப் பாடுபடுதல் இவைகளடங்கிய ஓர் குணமாகும்

என இலக்கண வரையறை செய்வதோடு, "ஒரு மனிதன் முன்னுக்கு வர நன்னடக்கை தேவை" (162) எனவும் அறிவுரை கூறி முடிக்கிறது. சிநேகம் (1885:163) என்னும் கட்டுரை,

> அறிமுகம் நேரம் இரண்டையும் நாம் நன்றாய்ப் பகுத்தறிய வேண்டும். சிலர் நமக்கு அறிமுகமாய் இருக்கலாம். அவர்களை அவ்வளவுடனே வைத்துக்கொள்ள வேண்டுமே யல்லாது, நமது சிநேகிதர்களென்று ஜனங்கள் சொல்ல இடங்கொடுத்து விடக்கூடாது

என்ற எச்சரிக்கையோடு சிநேகம் கொள்ள வேண்டிய வழிமுறை களையும் விளக்குகிறது.

நிதானித்து யோசிக்க வேண்டும் (1885:192) என்னும் கட்டுரை, ஆழ்ந்து யோசிக்கிறவனே முன்னுக்கு வருவான் என்பதைப் பிரமசர்மா என்பவரின் மாணவன் மூலம் விளக்குகிறது.

உலகக்கியானம் (1885:230) என்னும் கட்டுரை யாருடனும் மல்லுக்கு நிற்கக்கூடாது; இகழக்கூடாது; மற்றவரையும் தன்னைப் போல நினைக்கவேண்டும்; வேஷம் போடுகிறவர்களை நம்பக்கூடாது என உலக அறிவுக்குத் தேவையான அறிவுரைகளைப் பட்டியலிடுகிறது. நோயாளிக்கு இதம்பண்ணுதல் (1885:271) என்னும் கட்டுரை,

> அருகேயுள்ளவர்கள் நோயாளிகளை எவ்வளவுக் கெவ்வளவு உபசரித்துத் தேற்றுவார்களோ அவ்வளவுக் கவ்வளவு நோயின் வருத்தம் தீர்ந்துவிடும்

என நோயாளிகளைப் பேண வேண்டிய முறைகளை விளக்குகிறது.

இதழின் கட்டுரைகள், பலதுறைச் செய்திகளை அளாவி நிற்கின்றன. தகவல்களைத் தந்து அறிவூட்டுவதோடு, வாழ்வியல் நெறிகளையும் அறிவித்து நிற்கின்றன. மூல நோக்கத்தில் ஒரு முழுமையை இவை தருகின்றன.

ஜநவிநோதிநியின் கட்டுரைகளின் பெருமைகளைப் பின்வந்தோரும் போற்றுதல் காணலாம். பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் அவர்கள், இதிலுள்ள கட்டுரைகள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து நான்கு தொகுதிகளாக்கி இதே தலைப்பில் வெளியிட்டுள்ளார்.

> நான்காம் தொகுதி முதல்பாகம் 1948ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழக இன்டர்மீடியட் தேர்வுக்குப் பாடமாக வைக்கப்பட்டது"

1902ஆம் ஆண்டு முதல் இலக்கிய மாத இதழாக வெளிவந்த 'செந்தமிழ்' ஜநவிநோதிநிக் கட்டுரைகளை எடுத்து வெளியிட்டமையும் குறிப்பிடத்தக்கது. செந்தமிழ் இதழின் ஆறாந்தொகுதியில் மட்டுமே 'அபிப்பிராய பேதம் ' (ப. 294), 'கோபமும் அதனாலாய தீமைகளும்' (ப. 455), 'நம்பிக்யையும் விசித்திரங்களும்' (ப. 361), 'நன்மை செய்வதற்குரிய நுட்பங்கள்' (ப. 533), 'நித்திரை' (ப. 592); 'வாய்மை' (ப. 327) என ஆறு கட்டுரைகளை வெளியிட்டுள்ளனர். இவை யாவும் ஜநவிநோதிநி கட்டுரைகளின் உயர்வுக்குச் சான்றாவன.

**கதைகள்**

கட்டுரைக்கு அடுத்த நிலையில் கதைகள் அதிகமாக வெளிவந்துள்ளன. பெரியவர்களுக்காகவும் சிறுவர்களுக்காகவும் தனித்தனியே கதைகளை வெளியிட்டுள்ளனர்.

1884ஆம் ஆண்டின் ஜநவிநோதிநியில் தூக்குத் தூக்கி, விச்வந்தராஜன் கதை, ஒரு உத்தம ஸ்திரீயின் கதை, செய்ந்நன்றி கொன்ற கொலைபாதகன், உண்மை தவறாத உத்தமராஜன் கதை எனப் பெரியவர்களுக்காக ஐந்து கதைகள் வெளிவந்துள்ளன. தூக்குத் தூக்கி மூன்று இதழ்களிலும் விச்வந்தராஜன் கதை இரண்டு இதழ்களிலும் செய்ந்நன்றி கொன்ற கொலைபாதகன் இரண்டு இதழ்களிலும் தொடர்ந்து வந்துள்ளன. மற்றவை ஒரே இதழில் முடிந்துள்ளன.

1885ஆம் ஆண்டில், உண்மை தவறாத உத்தமராஜன் கதை, வாஸவதத்தை யென்னும் பெண்மணி, ஜெயசேன ராஜன் கதை, திரௌபதி சபதம் முடித்தல், தன்னுயிரைப் போல மன்னுயிரை நினை என்னும் ஐந்து கதைகள் பெரியவர்களுக்காக வெளியிடப்பட்டவை.

உண்மை தவறாத உத்தமராஜன் கதை வாஸவதத்தை யென்னும் பெண்மணி, தன்னுயிரைப் போல மன்னுயிரை நினை இரண்டு இரண்டு இதழ்களிலும், திரௌபதி சபதம் முடித்தல் மூன்று இதழ்களிலும் தொடர்ந்து வந்துள்ளன. ஜெயசேனராஜன் கதை ஒரே இதழில் முடிந்துள்ளது.

'சிறுவர்க்கான கதை' என்ற தலைப்பின்கீழ், பொன்மயில், கூடுவிட்டுக் கூடு பாய்தல், விலைக்கு விற்ற விசித்திரம், அதிர்ஷ்டசாலியான மகன் என்னும் நான்கு கதைகள் 1884ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளன. 1885ஆம் ஆண்டில் கழுதையாக மாற்றும் ஒரு வகைக் கீரை, மூன்று சகோதரர்கள் என்னும் இரு கதைகள் வெளிவந்துள்ளன.

கூடுவிட்டுக் கூடு பாய்தல் இரண்டு இதழ்களிலும் மூன்று சகோதரர்கள் மூன்று இதழ்களிலும் தொடர்ந்து வந்துள்ளன. மற்றவை ஒவ்வோர் இதழிலேயே முடிந்துள்ளன.

> சிறுகதையினை நிகழ்ச்சியின் சிறப்பால் அமையும் சிறுகதை, ஒருவரின் பண்பின் சிறப்பால் அமையும் சிறுகதை, உள்ளத்தில் பதியும் உணர்வின் சிறப்பால் அமையும் சிறுகதை எனப் பாகுபாடு செய்யலாம்[12]

என்பர். ஜநவிநோதிநியில் பெரியவர்களுக்காக வெளிவந்த கதைகள் யாவும் பண்புவிளக்கக் கதைகள்தாம்.

விச்வந்தராஜன் கதை கொடைப்பண்பையும், ஒரு உத்தம ஸ்திரீயின் கதை வாஸவதத்தை யென்னும் பெண்மணி ஆகிய கதைகள் கற்பொழுக்கத்தையும், செய்ந்நன்றி கொன்ற கொலைபாதகன் நன்றியுணர்வையும், உண்மை தவறாத உத்தமராஜன் கதை வாய்மையையும், ஜெயசேனராஜன் கதை தன்னுயிரைப் போல் மன்னுயிரை நினை என்பன பிறர்க்கு உதவுதலையும் கருவாகக் கொண்ட கதைகள்.

சிறுவர்க்கான கதைகள், மாயாஜாலம், நகைச்சுவை என்னும் வகைகளாக உள்ளன.

பொன்மயில், கூடுவிட்டுக் கூடு பாய்தல், கழுதையாக மாற்றும் ஒருவகைக்கீரை ஆகியன மாயாஜாலக் கதைகள்.

தன் பசியைப் போக்கியவனுக்கு வனதேவதை பொன்மயில் வழங்குதல், பொன்மயிலைத் தொட்டவர்களெல்லாம் விடுபட முடியாமல் தொடர்ந்து ஓடுதல் என்ற மாயாஜால நிகழ்ச்சிகளால் புனையப்பட்டுள்ளது 'பொன்மயில்' கதை.

கூடுவிட்டுக் கூடு பாய்தல் கதை தேவதையின் வரத்தால் நந்தன், மான், ஹம்சம், எலி, யானை, திமிங்கலம், நாய், மானுட வடிவம் எனப் பலப்பல வடிவங்களை எடுப்பதாக நடைமுறைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளால் புனையப்பட்டுள்ளது.

விலைக்கு விற்ற விசித்திரம் என்னும் கதை தவளையிடம் கைப்பணத்தை எண்ணித்தரும்படி குட்டையில் போட்டு விட்டும், பணியாரங்களை நாய்களிடம் கொடுத்துவிட்டுக் காசு தரும்படியும் காத்திருந்த குமாரசாமியின் பேதமை நகைச்சுவையை உருவாக்குகிறது. அதிர்ஷ்டசாலியான மகன் என்ற கதை, வேலைக்குக் கூலியாகப் பெற்ற பொன்கட்டியைக் கொடுத்துக் குதிரையையும், குதிரையைக் கொடுத்துப் பசுவையும், பசுவைக் கொடுத்து ஆட்டையும், ஆட்டைக் கொடுத்து வாத்தையும், வாத்தைக் கொடுத்து சாணைக்கல்லையும், சாணைக்கல் மடுவில் விழச் சுமையின்றி மகிழ்ந்து சென்ற முத்துசாமியின் பேதமைச் செயல்களால் நகைச்சுவை யூட்டுகிறது. இந்தக் கதைகள் சிறுவர்களுக்கு இன்பத்தை ஏற்படுத்துகின்றன.

அறிவுக்கூர்மையாலும் சமத்காரப் பேச்சினாலும் எளிய நிலையில் இருந்த அஜீப் என்னும் சிறுவன் உயர்ந்த மந்திரி பதவியை அடைந்ததைக் கருவாகக் கொண்டது மூன்று சகோதரர்கள் கதை.

பெரியவர்களுக்கான கதைகள் பண்பு விளக்கங்களாகவும் சிறியவர்களுக்கான கதைகள் மாயாஜாலம், நகைச்சுவை, பண்பு விளக்கம் என்பனவாகவும் அமைந்திருப்பன நோக்கத்தக்கது.

> நாடும் மக்களும் வளர, வாழ நல்ல கதைகள் வேண்டும். கதைகள் மூலமாகவே சிறந்த கருத்துக்களைச் செப்பனிட்டுத் தரலாம், வாழ்வை வளப்படுத்தலாம்; பண்பாட்டைப் பசுமையாக்கலாம்[13]

என்னும் போக்கிலே ஜநவிநோதிநி கதைகள் விளங்குவதைக் காண முடிகிறது.

**உரையாடல்கள்**

ஜநவிநோதிநியின் 1884ஆம் ஆண்டு இதழ்களில் மொத்தம் நான்கு உரையாடல்கள் காணப்படுகின்றன. காற்றுக்கும் மழைக்கும் நடந்த ஒரு சம்பாஷணை (ப. 4), பரிசுத்தமான காற்றைப் பற்றி ஒரு சம்பாஷணை (ப. 109), உனக்கு வைசூரி குத்தியதெப்போ? (ப. 137), அதிகாரம் செலுத்துவதும் அடங்கி நடப்பதும் (ப. 237) என்பன அவை.

ஒவ்வொரு உரையாடலும், ஐந்து பக்கம் முதல் பதினோரு பக்கங்கள் வரையிலான அளவில் அமைந்துள்ளன. காற்றுக்கும் மழைக்கும் நடந்த சம்பாஷணை ஐந்து பக்க அளவினது. பரிசுத்தமான காற்றைப் பற்றி ஒரு சம்பாஷணை பதினோரு பக்க அளவினது. உனக்கு வைசூரி குத்தினதெப்போ? ஒன்பது பக்க அளவிலும், அதிகாரம் செலுத்துவதும் அடங்கி நடப்பதும் பத்துப்பக்க அளவிலும் அமைந்துள்ளன.

காற்றுக்கும் மழைக்கும் நடந்த உரையாடல்,

> நாம் எல்லோரும் அவரவர் போகிற வழியில் உலகத்திற்கு உதவி செய்ய வேண்டுமென்றே கடவுள் நம்மைப் படைத்திருக்கிறார். ஆதலின் நம்மைப் படைத்த பரமபுருஷருடைய சங்கற்பத்தை வீண்போக்காதபடி நாம் ஒருவர்க்கொருவர் கலகப்படாமல் எல்லோரும் ஒன்றுகூடி அவரவர் செய்ய வேண்டிய காரியத்தைச் சரியாகச் செய்து வருவோம் (ப.8)

என அறிவுறுத்துகிறது.

பரிசுத்தமான காற்றைப் பற்றி ஒரு சம்பாஷணை, தாயாரம்மாள் - லட்சுமி என இரு பெண்களின் உரையாடலாக அமைக்கப்பட்டுள்ளது. ஆரோக்கியமான வாழ்வுக்குத் தூய காற்று தேவை என்பதை இந்த உரையாடல் அறிவுறுத்துகிறது.

உனக்கு வைசூரி குத்தியதெப்போ? வைசூரியின் கொடுமைகளையும், ஜென்னர் தடுப்பு மருந்து கண்டறிந்ததையும், வடு மறைந்ததும் மீண்டும் தடுப்பு ஊசி குத்திக்கொள்ள வேண்டும் என்பதையும் விவரித்து அறிவுரை கூறுகிறது.

அதிகாரம் செலுத்துவதும் அடங்கி நடப்பதும் என்பது அக்கா, தம்பி, தோட்டக்காரன் மூவருக்கும் நடந்த உரையாடல் ஒரு பகுதியாகவும், சிறிய பெரிய தேனிக்களுக்கிடையே நடந்த உரையாடல் மறுபகுதியாகவும் அமைந்தது. உரையாடல்கள் மக்களுக்கு உடல், மன ஆரோக்கியத்திற்கான செய்திகளை அறிவுரையாகத் தருகின்றன.

### சமாசாரம்

செய்திகள் என்று நாம் குறிப்பிடுவதையே ஜநவிநோதிநி சமாசாரம் என்ற சொல்லால் குறிப்பிடுகிறது.

> நாட்டுநடப்புச் செய்திகளையும் அவை பற்றிய கருத்துரை களையும் உள்ளடக்கி, குறிப்பிட்ட காலங்களில் அச்சடித்து வெளிவருவனவே செய்தியாகும் என்று இந்திய இதழ்கள் பதிவுச் சட்டத்தில்[14]

வரையறுக்கப்பட்டுள்ள செய்தி என்பதற்கான இலக்கணம் ஜநவிநோதிநி வெளியிட்டுள்ள 'சமாசாரம்' பகுதிக்கு முழுமையாகப் பொருந்தி வருகிறது.

1884ஆம் ஆண்டின் ஜநவிநோதிநி இதழ்களில் 22 செய்திகளும் 1885ஆம் ஆண்டின் இதழ்களில் 11 செய்திகளும் உள்ளன. ஒவ்வோர் இதழிலும் இறுதிப் பக்கத்தில் 'சமாசாரம்' என்ற தலைப்பின் கீழ் இவை வெளியிடப்பட்டுள்ளன. சமாசாரம் இல்லாத இதழ்களே இல்லை. 1884ஆம் ஆண்டின் நவம்பர் டிசம்பர் மாதங்களுக்குரிய இதழிலும் 1885ஆம் ஆண்டின் மார்ச்சு ஏப்ரல் மாதங்களுக்குரிய இதழிலும் ஒற்றைச் செய்திகளே உள்ளன. 1884ஆம் ஆண்டின் செப்டம்பர் நவம்பர் மாதங்களின் இதழ்களில் அதிகபட்சமாக ஏழு செய்திகள் உள்ளன. அவை தமிழக, இந்திய, உலகச் செய்திகளாகக் காணப்படுகின்றன.

### தமிழகச் செய்திகள்

திருச்சிராப்பள்ளியில் பயிர்த்தொழில் பாடசாலை நிறுவியமை, திருப்பத்தூரில் பயிர்களை அழித்த யானைகள் கொல்லப்பட்டமை, புதுக்கோட்டை ராஜாவுக்குச் சக்கரவர்த்தினி மேன்மை தங்கிய எனப் பொருள்படும் His Highness எனப் பட்டம்

கொடுத்தமை, நாமக்கல்லில் பசுவொன்று மூன்று கண்கள் கொண்ட கன்றினை ஈன்றமை என்பன தமிழகத்துச் செய்திகளாக வந்தவை.

## இந்தியச் செய்திகள்

பல்லாரியில் பயிர்த்தொழில் பாடசாலை நிறுவியமை, பம்பாயில் ஸமஸ்கிருத வித்யாசாலை நிறுவியமை, கல்கத்தாவில் பெருந்தொகையினர் பொருட்காட்சியைக் காணவந்தமை, காஷ்மீரில் வைசூரி பரவியமை, சிந்து கராச்சியில் இந்து முஸ்லிம் கலகம் உருவானமை, டில்லியில் குருட்டுப் பிள்ளை வக்கீல் பரீட்சை எழுதியமை, கல்கத்தாவில் லார்டு ரிப்பன் பெயரில் சிங்காரத் தோட்டம் உருவானமை, மைசூரில் பெண் கல்விச்சாலை அமைத்தமை, கோதாவரி ஜில்லாவில் கந்தக பூமி கண்டுபிடிக்கப் பட்டமை, காச்மீர மக்கள் பூகம்பங்களாலும் திறமையற்ற அரசனாலும் துன்பம் அடைந்தமை என்பன இந்தியச் செய்திகளாய் வெளிவந்துள்ளன.

## உலகச் செய்திகள்

அமெரிக்காவில் செவிட்டு ஊமையர் சபை கூடியமை, மகாராணியின் கடைசி மகள் லியபோல்ட் மரணமடைந்தமை, ரங்கூன் அரசன் வீணே 400 பேரைக் கொன்றமை, இங்கிலாந்தின் மான்செஸ்டரில் குழந்தைகள் காட்சி சபை கூடியமை, ஏடனில் வலுவான கோட்டை கட்டும் செலவை இந்தியாவும் இங்கிலாந்தும் ஏற்றமை, ருஷ்யர்கள் நம் நாட்டை ஆளும் ஆங்கிலேயர்மீது படையெடுத்து வந்தமை, எகிப்தில் கலகம் உருவானமை, லண்டனில் இந்தியப் பொருள்களால் காட்சிசாலை அமைத்தமை, அமெரிக்காவில் மூர் என்பவர் விமானமேறி நீண்டநேரம் ஆகாயத்தில் சஞ்சரித்தமை, பர்மாவில் கோழிகள் ஒரு நாளைக்கு ஆறு தரம் கூவிப் பொழுதை அறிவித்தமை என்பன உலகச் செய்திகளாக வெளிவந்துள்ளன.

## கட்டம் கட்டிய செய்திகள்

முக்கியச் செய்திகளைக் கட்டம் கட்டிப் பெட்டிச் செய்திகளாகத் தந்துள்ளனர். மகாராணியாரின் கடைசி மகன் லியபோல்ட் விபத்தில் மரணமடைந்த செய்தி மட்டுமே பெட்டிச் செய்தியாகத் தரப்பட்டுள்ளது.

## தலைப்புகளோடு தருதல்

> செய்திகளின் உயிரோட்டம் தலைப்புகளில் அடங்கியிருக்கிறது. உடலுக்குத் தலை போன்று செய்திக்குத் தலைப்பு அமைந்திருக்கிறது. செய்திகளைத் தொடர்ந்து படிக்கும் எண்ணத்திற்கு வாசகர்களை இழுத்துவந்து நிறுத்தும் கவர்ச்சியணிகளாய்த் தலைப்புகள் காட்சியளிக்கின்றன[15]

எனத் தலைப்புகளின் தேவை சுட்டப்படுகிறது. ஜநவிநோதிநி அனைத்துச் செய்திகளையுமே தலைப்பிட்டுத்தான் தந்துள்ளது. 'யானைகளால் பயிரழிவு', 'ராஜாக்களுக்குக் கொடுத்த பட்டம்' எனத் துடிப்பான சொற்களால் தலைப்புகள் தரப்பட்டுள்ளன.

## படிக்கத் தூண்டும் தலைப்புகள்

விநோதமான நிகழ்வுகளைக் கருத்துரைகளோடு தந்துள்ளமை நோக்கத்தக்கது. 'பர்மா தேசத்திலுள்ள ஒரு அதிசயமான சமாசாரம்' என்ற தலைப்பிலுள்ள செய்தி.

> பர்மா தேசத்தில் கோழிகள் இராப்பகலை ஆறு பகுதிகளாகப் பிரித்து அத்தேசத்தவர்களுக்குப் பொழுதைத் தெரிவிப்பவை போல, தினந்தோறும் ஆறுதரம் கூவிக் கொண்டிருக்கின்றன. இவ்வாறு கூவுவதற்குக் காரணம் யாதென்று அத்தேசத்தவர்களைக் கேட்டால், அவர்கள் பவுத்த மதத்தை ஸ்தாபித்தவரான கவுதம முனிவர் ஜனங்கள் சுலபமாய்ப் பொழுது தெரிந்து கொள்ளும்படி ஒரு கிரந்தமியற்றி அதைக் கைசோர்ந்துவிட்டதாயும், அதை எடுத்து ஒரு கோழி விழுங்கிவிட்டதாயும், அது தெரிந்து அம்முனிவர் பிரஜைகளுக்குப் பொழுது தெரிவிக்கும்படி கோழிகள் இரவும் பகலும் கூவிக்கொண்டிருக்க வேண்டுமெனச் சபித்ததாகவும் ஒரு விசித்திரமான கதை சொல்லுகிறார்கள் (1885 : 246)

என்று விளக்கம் தந்து அமைக்கப்பட்டுள்ளது. அமெரிக்காவில் மூர் என்பவர் விமானத்தில் ஏறி ஆகாயத்தில் சஞ்சரித்தமையை,

> அமெரிக்காவில் மூர் என்பவர் கும்மட்டத்தில் 35 நிமிஷ நேரத்தில் 46 மைல் தூரம் ஆகாயத்தில் சஞ்சரித்தார்... நீராவிக் கப்பல், இருப்புப்பாதை வண்டி முதலியன சாதாரணமாகிவிட்டது போல விமானத்திலேறிச் செல்வதற்கேற்ற இவ்விமானமும் நாளடைவில் யாவரும் கையாளத்தக்க நிலைமைக்கு வந்துவிடுமென நாம் உறுதியாக நம்புகிறோம் (1885:220)

என்னும் கருத்துரையோடு வந்துள்ளது.

விநோதமானவற்றைச் செய்திகளாக்கி, துடிப்பான தலைப்பு களிட்டு, அவற்றைக் குறித்த விளக்க விவரங்களையும், கருத்துரை களையும் இணைத்துச் சமாசாரம் பகுதியை விறுவிறுப்புடையதாக்கித் தந்துள்ளது ஜநவிநோதிநி.

## மொழிநடை

மொழிநடை என்பது இதழ் கையாண்டுள்ள நடையமைப்பைக் குறிக்கும். ஜநவிநோதிநி இதழில் உள்ள 'சில சொற்களில் உள்ள பல விஷயங்கள்' (1885 : 169-175) என்னும் கட்டுரை பல சொற்களுக்கு விளக்கம் கூறிவரும்போது எழுத்து நடை என்பதற்கு,

> நடையென்பது நமது அபிப்பிராயங்களுக்கு உடையாகும். நமது சரீரம் எவ்வளவு அழகாய் இருப்பினும் நாம் நல்ல உடையில்லாமல் கந்தல் கிழிசல்களுடன் வெளிப்படு வோமானால் எவ்விதமாய் ஜனங்களின் மனதைக் கவர மாட்டோமோ அதுபோலவே நாம் எழுதும் விஷயங்கள் எவ்வளவு நியாயமாயும் உண்மையாயு மிருந்த போதிலும் நல்ல நடையில் எழுதப்பட்டிராவிடின் படிப்பவர்கள் மனதைக் கவரவே மாட்டா (ப. 174)

என விளக்கம் தருகிறது. மொழிநடைக்கு,

> காலநடையின் நோக்கமாவது ஒருவன் ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்குச் சென்று சேருதல். தூனடையின் நோக்கமாவது ஒருவன் மனத்திலிருந்து மற்றொருவன் மனத்திற்குச் சென்று சேர்வது

என்றாற்போல் மொழிநடைக்குப் பல அறிஞர்கள் பலப்பல விளக்கங்களைத் தந்திருந்த போதிலும் ஜநவிநோதிநி தரும் விளக்கம்

கூர்ந்து நோக்கத்தக்கதாய் உள்ளது. நடை என்பதையும் அதன் மிகுதேவையையும் குறித்து ஓர் ஆழமான கோட்பாட்டை முன்வைக்கும் இந்த இதழ் மொழிநடையில் மிகுந்த கருத்தைச் செலுத்தியே இருந்திருக்கும்.

நடை காலத்தோடு நெருங்கிய தொடர்புடையது. ஜநவிநோதிநியின் மொழிநடை நூறாண்டுகளுக்கு முந்தியது. தனித்தமிழ் இயக்கத்தாலும் திராவிட இயக்கத்தாலும் அரசியல் அறிவியல், சமூகவியல் மாற்றங்களாலும் உருவாகியுள்ள இன்றைய தமிழ்நடையை அளவு கருவியாகக் கொண்டு ஜநவிநோதிநியை அளக்கக் கூடாது. இதழ்களுக்கு உரியதான எளிமையும் செறிவும் கொண்ட ஒரு வளமான நடையை ஜநவிநோதிநியில் காணமுடிகிறது.

## எளிமை

"ஒரு மொழியை அல்லது மொழிவழக்கினை அம்மொழியைப் பேசுகின்ற பெரும்பான்மையான மக்கள் எளிமையாகப் புரிந்துகொள்ளுவதற்கேற்பவும் கருத்துப் பரிமாற்றத்திற் கேற்பவும் மாற்றியமைக்க மேற்கொள்ளப்படும் புதுமையாக்க முறைகளில் ஒன்று எளிமையாக்கமாகும்"[17] ஜநவிநோதிநியின் நடை புரிந்துகொள்வதற் கேற்ற எளிய நடையே. சொற்கள் அவற்றுக்குரிய சரியான பொருளோடு புரிந்து கொள்ளப்படவேண்டும் என்பதற்காகவே 'சில சொற்களில் அடங்கிய பல விஷயங்கள்' (1885 : 169) என்ற கட்டுரையை வெளியிட்ட இதழ் எளிமையைப் போற்றியுள்ளது என்பதில் ஐயமில்லை. இதழின் எந்தப் பகுதியை எடுத்துக் கொண்டாலும் தெளிவும் எளிமையும் ஊடாடிக் கிடப்பதைக் காணமுடிகிறது.

## செறிவு

எளிமையாக இருக்கும் அதே நேரத்தில் செறிவுடையதாகவும் இருந்தால்தான் கற்பவர்க்குப் பயன் ஏற்படும். அணிகளும் மேற்கோள்களும் மொழிநடைக்குச் செறிவைச் சேர்ப்பனவற்றில் குறிப்பிடத்தக்கன. அணிகளையும் மேற்கோள்களையும் கையாளும் போது நடைக்கு நேர்த்தியும் செறிவும் சேர்கின்றன.

## மேற்கோள்கள்

கருத்துகளுக்கு வலுவூட்டுவதற்காகப் பயன்படுத்தப்படும் மேற்கோள்களாலும் மொழிநடை செறிவு பெறுகிறது. ஜநவிநோதிநியின்

கதைகளிலும் கட்டுரைகளிலும் உரையாடல்களிலும் எண்ணற்ற தமிழ், வடமொழி இலக்கிய மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன.

கருத்து விளக்கம் செய்யும்போது, அறிவுரையோடு முடிக்கும்போது மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. மேற்கோள்களில் குறட்பாக்களே பெருமளவில் இடம்பெறுகின்றன. உத்தமமான கணவன் (1884:258-265) என்னும் கட்டுரையில் குறள், புறநானூறு மற்றும் பல இலக்கியங்களிலிருந்து எட்டுப் பாடல்கள் மேற்கோள் பாடல்களாகத் தரப்பட்டுள்ளன.

## கலப்பு மொழி

கருத்துகளுக்கு ஏற்ற சொற்களைத் தேர்ந்து ஆளும்போது அவற்றில் காலத்தின் கைவண்ணமும் கலந்துவிடுதல் இயல்பே. ஜநவிநோதிநியில் தமிழ்ச் சொற்களோடு பெருமளவில் வட சொற்களும் ஆங்கிலச் சொற்களும் கலந்த நடையே காணப்படுகிறது.

சீக்கிய அரசாட்சியை ஸ்தாபித்தவரான ரணஜித்சிங்கு, ஒரு உத்தம ஸ்திரியின் கதை, பரோபகாரம் செய்யப் பின்வாங்காப் பெருமாட்டி, உண்மை தவறாத உத்தமராஜன் கதை, பச்யைப்ப முதலியார் என்னும் தர்மிஷ்டருடைய சரித்திரம், ஸம்பாஷணை விதிகள் என்பன போன்று, தலைப்புகளிலேயே ஸ்தாபித்த, ஸ்திரீ, பரோபகாரம், ராஜன், தர்மிஷ்டர் என வடசொற்கள் மிகச் சரளமாகக் கலந்துள்ளன.

லார்டு ரிப்பன் துரையவர்களுடைய நல்வரவு, மாட்சிமை தங்கிய பிரின்ஸ் அவ்உவேல்ஸ் என்னும் இளவரசர், கனம் பொருந்திய மெஸ்தர் கிளாட்ஸ்டன் என்பன போன்று தலைப்புகளிலேயே லார்டு, பிரின்ஸ், மெஸ்தர் என ஆங்கிலச்சொற் கலப்பு இடம் பெறுகிறது. இதே போக்கு இதழின் உட்பகுதிகளில் நெடுகிலும் பரவிக் கிடப்பதைக் காணலாம்.

## பிழையான தமிழ்

இயல்பான நடை, வளமான நடை என்றெல்லாம் சொல்லும்போது அதில் எழுத்துப் பிழை, சொற்பிழை, புணர்ச்சிப் பிழை, வாக்கியப் பிழை, பொருட்பிழை, மரபுப் பிழை என்னும் அறுவகைப் பிழைகளும் இல்லாமல் இருத்தல் வேண்டும்.

ஜநவிநோதிநியின் கட்டுரைகளில் சொற்பிழைகளும் வாக்கியப் பிழைகளும் பற்பல இடங்களில் காண்கின்றன.

> அவற்றை யெல்லாம் இருந்தவாறே பதிப்பித்துள்ளேன். அவை, ஒரு காலத்தே உரைநடையின் ஆராய்ச்சி நிகழும் பொழுதில் அவ்வாராய்ச்சியாளருக்குப் பயன்படும் என்பது என் கருத்து[16]

என ஜநவிநோதிநியின் கட்டுரைகளில் சிலவற்றை எடுத்துத் தொகுத்து வெளியிட்ட கா. நமச்சிவாயர் குறிப்பிடுகிறார். இதனால் ஜநவிநோதிநியில் சொல், வாக்கியப் பிழைகள் உள்ளன என்பது தெளிவாகிறது. இதன் நடைத்திறத்தில் இந்தப் பிழைகள் உறுத்தலை ஏற்படுத்தவே செய்கின்றன.

என்றாலும் நூறாண்டுக்கு முந்திய இதழ் என்ற பார்வையோடு நோக்கும்போது இந்தப் பிழைகள் பெரிதாகத் தெரியவில்லை. மேலும், இதழ் வழங்கும் பெரிய செய்திகளில் இந்தச் சிறிய விஷயம் அடிபட்டுப் போய்விடுகிறது.

## முடிவுரை

ஜநவிநோதிநியின் இதழமைப்பு, வண்ண அட்டைப் படத்துடனும் சீராக அமைக்கப்பட்ட பக்க ஒருங்கமைப்புடனும் கூடியதாய் இருந்துள்ளது. பொருளமைப்பு பண்பும் அறிவும் அறிவுரையும் தருவன.

கட்டுரைகள் பலப்பல அறிவுச் செய்திகளையும் அறிவுரை களையும் வழங்குகின்றன. பெரியவர்களுக்கான கதைகள் பண்பு விளக்கங்களாக உள்ளன. சிறுவர்க்கான கதைகள் சிறுவர் மனம் விரும்பி ஏற்கும் வகையில் மாயாஜாலம், நகைச்சுவை உடையனவாய் உள்ளன. உரையாடல்கள் மக்களுக்கு அறிவுறுத்தும் செய்திகளைக் கொண்டுள்ளன. சமாசாரம் தமிழக, இந்திய, உலகச் செய்திகளை அறிவிப்பனவாய் உள்ளன.

மொழிநடை, உவமை, உருவகம், மேற்கோள் போன்றவற்றால் வளமூட்டப்பட்டதாக, மொழிக்கலப்புடையதாக, சுட்டிக் காட்டத்தக்க சொல் - வாக்கியப் பிழைகளை யுடைதாக அமைந்துள்ளது.

மொத்தத்தில் ஜநவிநோதிநி மக்களின் அறிவு வளர்ச்சிக்கும் பண்பாட்டு உருவாக்கத்திற்கும் பெருந்தொண்டு புரிந்துள்ளது. விளக்கமாகவும் தெளிவாகவும் இதிலே இடம்பெற்றுள்ள கட்டுரைகள் இன்றும் ஏற்றுப் போற்றும் வகையில் உள்ளமை, இதன் பெரிய சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

## குறிப்புகள்

1. வி.நா. மருதநாயகம், இந்தியப் பத்திரிகைத் தொழிலியல், கோவைத் தமிழ்ச்சங்கம், கோவை, 1935, ப. 241

2. கா. நமச்சிவாய முதலியார், ஜநவிநோதினி தொகுதி IV பகுதி 1, தமிழ்க்கடல், சென்னை முன்னுரை, 1934

3. கரு. நாகராாசன், 'மாத இதழ்கள்', எண்பத்தொன்றில் தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, ப. 545

4. ஞா. தேவநேயன், உயர்தரக் கட்டுரை இலக்கணம் கழகம், சென்னை - 1, 1968, ப. 134

5. ஜநவிநோதிநி, 1874

6. ஜநவிநோதிநி, இல.10, 1885 : ப. 221

7. மேற்படி, ப. 222

8. சாலினி இளந்திரையன், வாழ்க்கை வரலாற்று இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1974, ப.261

9. மா.ரா. இளங்கோவன், முற்காலத் தமிழ் இதழ்கள் - ஓர் அறிமுகம், (1848-1909), சேகர் பதிப்பகம், சென்னை, ப. 28

10. மு. வரதராசன், இலக்கிய மரபு, பாரி நிலையம், சென்னை, 1959, ப. 164

11. க. குளத்தூரான், தமிழ்ப் பத்திரிகைகள், ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில், ப. 83

12. இரா. கோதண்டபாணி, இதழியல், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1990, ப. 108

13. மேற்படி, ப. 161

14. திருமணம் செல்வக்கேசவராய முதலியார், தமிழ் வியாசங்கள், கழக வெளியீடு, 1945, ப. 81

15. தங்கமணியன், பத்திரிகைத் தமிழ், மாணிக்கப் பதிப்பகம், 1978, ப. 30

16. கா. நமசிவாய முதலியார், ஜநவிநோதிநி தொகுதி IV, பகுதி, தமிழ்க்கடல், சென்னை, முன்னுரை.

# செந்தமிழ்

**1903** **த. வசந்தாள்**

20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய தமிழ் இதழ்களில் பன்முகப் பரிமாணங்களோடு 'செந்தமிழ்' மதுரையில் தோற்றம் கொண்டது. மொழி, இலக்கியம், வரலாறு, மொழிபெயர்ப்பு, விமர்சனம் இவற்றோடு உரிய படைப்பாளிகளின் நூல்களை அச்சிட்டு வெளிக்கொணர்வதில் 19ஆம் நூற்றாண்டிலேயே ஐரோப்பிய நாடுகள் முன்னணியில் இருந்தன. ஐரோப்பிய நாடுகளில் இங்கிலாந்து, பிரான்ஸ், போர்ச்சுக்கல், டச்சு நாட்டார்களின் ஆளுகைக்குக் கீழே இருந்த இந்தியாவிலும் 20ஆம் நூற்றாண்டில் மொழி, இலக்கியம் உள்ளிட்ட பல விஷயங்கள் குறித்த தீவிர போக்குகள் தலைகாட்டின. அவற்றிற்குச் சான்றாகக் கொள்ளத்தகுந்த முறையில் செந்தமிழ், சீரிய அறிஞர்களின் வழிகாட்டுதல்களோடு மதுரையில் நான்காவது தமிழ்ச்சங்கத்தாரால் வெளியிடப்பெற்றது. நான்காமாண்டு (1905-'06) செந்தமிழ் இதழ்கள் சிறப்பாய்விற்குக் கொள்ளப்படுகின்றன.

## செந்தமிழின் சிறப்பு

பாலவனத்தம் ஜமீன் பாண்டித்துரைத் தேவர் அவர்களால் நவம்பர் 1903ஆம் ஆண்டில் உருவான செந்தமிழுக்கு முன்பாகவே தமிழகத்தில் 'உதயதாரகை' (1841), 'தேசோபகாரி' (1861), 'தத்துவ போதினி'(1864), 'விவேகசிந்தாமணி' (1892), 'ஞானபானு' (1894) போன்ற இலக்கிய இதழ்கள் வெளிவந்து நின்றுபோயின. அவற்றைப் போலவே செந்தமிழுக்குப் பிறகு தோன்றிய பல இதழ்களும் இவ்வாறே தொடர்ந்து இயங்காமல் போயிருக்கின்றன. ஆனால், செந்தமிழ் இன்னமும் தொடர்ந்து தலைமுறைகள் சிலவற்றைக் கண்டு, அடிப்படையில் பெரிய மாற்றங்கள் எதையும் அடையாமல் வந்து கொண்டிருக்கிறது. முனைவர் பா.ரா. சுப்பிரமணியம், 'செந்தமிழ் ஒரு வகையில் பின்னர் தோன்றிய இலக்கிய இதழ்களுக்கு ஒரு வகை மாதிரியாகவும் திகழ்ந்தது" எனக் குறிப்பிடுகிறார்.

செந்தமிழ், தொடக்க காலத்தில் மாத இதழாக வெளிவந்தது. பின்னர் இது இரு மாத இதழாகவும் காலாண்டு இதழாகவும் வெளிவந்தது. தற்பொழுது செந்தமிழ் காலாண்டு இதழாக வந்து கொண்டிருக்கிறது. தொடர்ந்து 100 ஆண்டுகளாக வெளிவரும் சீரிய தமிழ் இதழான இதனை நுணுக்கமாக ஆராய வேண்டும். இரா. இளங்குமரன் அவர்கள்,

> செந்தமிழ்.... தொகுதிகளை முற்றமுடிய ஒருவர் கற்பார் எனின் புலத்துறையில் அவர்க்கு இணையொருவர் வாய்த்தல் அரிது. எத்துணை எத்துணைத் துறைகளில் எல்லாம் எழில்பெறத் தன் ஆற்றலைப் பரப்பியுள்ளது செந்தமிழ்! செந்தமிழைத் தொகுதிவாரியாகவும் பொருள் வாரியாகவும் துறைவாரியாகவும் பிரித்துத் தனியொரு தொகுதி வெளிப்படுமாயின் அத்தொகுதியை மூலப்பொருள் திறவுகோலாய்க் கொண்டு எத்துணையோ முனைவர்கள் தம் ஆய்வுக்குப் பயன்படுத்தக் கூடும்[2]

என இவ்விதழின் திறத்தை - பணியைப் பாராட்டுகிறார். 20ஆம் நூற்றாண்டின் முதல் ஐம்பது ஆண்டுகளில் சிறந்த தமிழாராய்ச்சி ஆர்வலர் அனைவரும் ஏதோவொரு வகையில் செந்தமிழோடு தொடர்பு கொண்டவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. இதழ் தொடங்கிப் பன்னிரண்டு ஆண்டு காலப்பணியில் பயணிக்கும் பொழுது அதை மதிப்பிடும் பகடால நரசிம்மலு நாயுடு அவர்கள்,

> இச்சங்கத்தினின்றும் மாதந்தோறும் வெளியாகும் செந்தமிழ்ப் பத்திரிகை பதினொன்றரை வருஷக் காலமாகத் தமிழறிஞர்கள் பலரால் எழுதப்படும் அரிய விஷயங்களால் தமிழகத்தை மகிழ்வூட்டி வருதல் பலரும் அறிந்ததே. செந்தமிழ் தொடங்கப்பெற்றது முதல் இதுவரை அச்சாகாத 36 நூல்கள் இதன் வாயிலாகப் பத்திராதிபராலும் பிறராலும் வெளிவந்துள்ளன. இப்பத்திரிகைக்கு விஷயதானம் செய்துவரும் நிருப நேயர்களுக்குக் காரிய நிர்வாக சபையார் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள்[3]

எனப் பாராட்டுகிறார்.

## இயக்கமும் இதழும்

சிறப்புகள் பலவற்றைத் தம்முள் ஒருங்கே கொண்டிருந்த செந்தமிழ் தனித்த ஒருவரின் முயற்சியில் பிறந்ததாயினும், அதன் உருவாக்கம் சிறந்த பின்னணியைக் கொண்டது. ஜமீன்தாராக மட்டுமின்றித் தமிழார்வலராகவும் இருந்த பாண்டித்துரை தேவர் அவர்கள் 20ஆம் நூற்றாண்டில் மேலைநாட்டுக் கல்விக்கு மத்தியில் தமிழ் மொழி, இலக்கியம் தாழ்வடைந்த நிலைக்குத் தீர்வு காணும் நோக்கில் தமிழறிஞர்களை ஒருங்கிணைத்து நான்காவது தமிழ்ச் சங்கத்தை மூன்றாவது தமிழ்ச் சங்கம் இருந்த மதுரையிலேயே ஏற்படுத்தினார்.

இதை,

> *ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவரவர்கள் ஸ்ரீ சேதுபதி முதலானவர்களுடைய சகாயத்தைக் கொண்டு மறுபடியும் 1901ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 14ஆம் தியதிக்குச் சரியான பிலவ வருஷம் ஆவணி மாதம் 31ஆம் தியதி பானு வாரம் சித்திரா நக்ஷத்திரங் கூடிய சுபதினம் பகல் 1½ மணிக்கு மேல் 2¾ மணிக்குள் தனுர் லக்கினத்தில் மதுரையில் நான்காவது தமிழ்ச் சங்கத்தை ஸ்தாபித்து அதற்காக் அல்லும் பகலும் உழைத்து வந்தனர்*[1]

எனப் பாண்டித்துரைத் தேவர் அவர்களோடு சங்கத்தின் தோற்றத்தின் போது அதில் பங்குகொண்ட பகடால நரசிம்மலு நாயுடு அவர்கள் குறிப்பிடுகிறார். இச்சங்கம், தமிழ் வளர்ச்சிக்காகக் கீழ்க்கண்டவற்றை நோக்கங்களாகக் கொண்டிருந்தது.

1. தமிழ்க் கலாசாலை உருவாக்குதல்
2. இறவாதுள்ள தமிழ் ஏடுகள் பலவற்றையும் அச்சிட்ட தமிழ் நூல்கள் அனைத்தையும் தேடிப்பெற்றும் பிறருக்குப் பயன்படுமாறு ஒருவழித் தொகுத்து வைத்தல்
3. வெளிவராத அரிய தமிழ் நூல்களைப் பரிசோதித்து அச்சிட்டுப் பரவச்செய்தல்
4. வடமொழி, ஆங்கிலம் முதலிய பிற பாஷைக்கண்ணுள்ள அரிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்துப் பதிப்பித்தல்

5. தமிழ்க்கல்வி அபிவிர்த்தியைப் பற்றிய செந்தமிழ்ப் பத்திரிகை வெளியிடல்

6. தமிழ்ப் பரிக்ஷை பல வைத்து உயர்தரத்தே தேர்ந்தோர்க்குப் பட்டம் பரிசு முதலியன அளித்தல்

7. தமிழ் அறிஞரால் உபநியாசங்கள் புரிவித்தல்

8. இக்காலைத் தமிழ் அறிவுமிக்கார் பலரையும் ஒருங்குகூட்டித் தமிழ் ஆராய்தல்

9. வேண்டும் நூல், உரை முதலியன செய்வித்தல்

10. பிறர் செய்த உரை முதலியவற்றை அரங்கேற்றுவித்தல்; தமிழ்ப் பாஷையை வளர்த்தல்.

## பல்மொழி அறிஞர்களும் சங்கமும்

செந்தமிழ் பத்திரிகை உள்ளிட்ட உயர்ந்த குறிக்கோள்களை எட்டிப்பிடிக்கத் தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் போன்ற மொழிகளில் வல்லுநர்களாகத் திகழ்ந்த 48 அறிஞர்கள் நான்காவது மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பங்கேற்றனர். தொடக்கக் காலத் தமிழ்ச் சங்கத்தில் ப. பாண்டித்துரைத் தேவர், உவே. சாமிநாதையர், ரா. இராகவையங்கார், வை.மு. சடகோப ராமாநுஜாசாரியர், நாராயணய்யர், சேற்றூர் சுப்பிரமணிய கவிராயர், அம்பலவாண நாவலர், அ. சண்முகம் பிள்ளை, அஷ்டாவதானம் கலியாணசுந்தர முதலியார், திருமயிலை ஷண்முகம் பிள்ளை, எஸ். பால்வண்ண முதலியார், வா. குலாங்காதிறு நாவலர் போன்றோர் தமிழ் அறிஞர்களில் குறிப்பிடத் தகுந்தவர்கள் ஆவர்.

தமிழறிஞர்களையும் பிறமொழி அறிஞர்களையும் ஒருங்கிணைக்கப் பாண்டித்துரைத் தேவர் அவர்கள் சேதுபதி உயர்பள்ளி மண்டபத்தில் மூன்று நாட்களுக்கு விழாவை ஏற்படுத்தினார். இவ்விழாவில் சேது நாட்டு அவைப் புலவர்கள் G.சுப்பிரமணிய ஐயர், G. ஸ்ரீநிவாசராயர், நாகலிங்கம் பிள்ளை, பத்மநாப நாயுடு, அநந்தாசாமி, பால்பீட்டர் பிள்ளை, சேப. நரசிம்மலு நாயுடு, துரைசாமிப் பிள்ளை போன்றவர்கள் கலந்து கொண்டதோடு தம் எண்ணங்களை வெளிப்படுத்தியதின் விளைவாகவே மேற்கண்ட பத்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இத்தகு அறிஞர்களின்

வழிகாட்டுதல்களும் செந்தமிழுக்கு இருந்தமையால் 20ஆம் நூற்றாண்டின் தலைசிறந்த இலக்கிய இதழாகச் செந்தமிழ் திகழ்ந்தது; நூற்றாண்டைக் கடந்தும் தலைமுறைகளாகத் தமிழறிஞர்களை வளப்படுத்தி வளர்ந்து கொண்டிருக்கிறது. செந்தமிழ் இதழைக் கொண்டு வரவும் அச்சில் வாரா அருந்தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களை வெளிக்கொணரத் தமிழ்ச்சங்க முத்திராசாலை என்னும் அச்சகமும் தொடங்கப்பெற்றன.

## செந்தமிழின் உள்ளடக்கமும் சிறப்பும்

செந்தமிழ் வெளிவந்து 30 ஆண்டுகளுக்குப் பிறகு, அது தமிழறிஞர்களிடம் எவ்விதப் பாதிப்பை ஏற்படுத்தியது என்பதை 1938ஆம் ஆண்டில் ச. வையாபுரிப் பிள்ளை அவர்கள்,

> தமிழ்க் கல்வியிலும் தமிழாராய்ச்சியிலும் பேரவாக் கொண்ட தமிழ் மக்கட்கு உறுதுணையாய் நின்றது செந்தமிழ்ப் பத்திரிகையாம். ஒவ்வொரு மாதத்துப் பத்திரிகையினும் அதுவரை அறியாத அரிய விஷயங்களைக் குறித்துச் சிறந்த கட்டுரைகள் பல வெளிவந்து கொண்டே இருந்தன. பத்திராதிபர் எழுதியனவெல்லாம் தமிழ் மணமும் ஆராய்ச்சி நலமும் செறிந்து விளங்கின; கற்பார்க்கும் பெருவிருந்தாய் அமைந்தன; ஒவ்வொரு மாதமும் செந்தமிழ் எப்போது வெளிவருமென்று பேராவலோடு தமிழன்பர்கள் எதிர்பார்த்த வண்ணமாய் இருந்தார்கள். தமிழ்நாட்டுப் பெரும் பேராசிரியனாய் அமைந்து தமிழ் மக்கள் வீடுதோறும் சென்று தமிழ்க் கல்வி நலத்தை அவர்கள் நுகரும்படி செய்துவந்த பெருமை செந்தமிழ்ப் பத்திரிகைக்கே உரியதாய் இருந்தது[5]

எனக் குறிப்பிடுகிறார். செந்தமிழில் தொடக்கக் காலத்தில் இரா. இராகவ ஐயங்கார் ஆசிரியராகவும் (பத்திராசிரியர்), மு. இராகவ ஐயங்கார் துணையாசிரியராகவும் இருந்தனர். ஏறத்தாழச் செந்தமிழ் சராசரியாக 70 பக்கங்கள் கொண்டிருந்தது; 10 கட்டுரைகள் வெளிவந்தன. கட்டுரைகள் அன்றியும் நூல் மதிப்பீடு, நூல் வெளியீட்டுத் திட்டம், சிறந்த தமிழறிஞர்கள் மறைந்த காலத்தில் அவர்களின் பணிகளை நினைவுகூர்ந்து சிறப்பு கட்டுரைகளும் வெளிவந்திருக்கின்றன. சுவடியிலிருக்கின்ற சிறந்த நூல்களைச்

செந்தமிழ் உரிய பதிப்பாசிரியர்களைக் கொண்டு தொடர்ச்சியாக வெளியிட்டு நூலுருவாக்கம் செய்துள்ளது. செந்தமிழின் ஆரம்பகால இதழ்களை அட்டவணைப்படுத்திய பா.ரா. சுப்பிரமணியம் அவர்கள்,

1. பண்டை இலக்கியக் கட்டுரைகள்
2. வரலாற்றுக் கட்டுரைகள்
3. இலக்கணக் கட்டுரைகள்
4. அறிவியல் கட்டுரைகள்
5. நாடகம் முதலிய நவீன இலக்கியம் மீதான கட்டுரைகள்
6. ஓலைச் சுவடிகளைப் பதிப்பித்தல்[6]

என்கிற ஆறு கூறுகளோடு இவ்விதழ், தமிழுக்குத் தொண்டாற்றியது என்கிறார். தமிழின் எல்லாத் துறைகளிலும் சீரிய பங்களிப்பைச் செய்த செந்தமிழுக்கு அக்காலத்தில் இதழாசிரியர் இருவரோடு சேர்ந்து பரிதிமாற்கலைஞர், உ.வே. சாமிநாத ஐயர், சி. கணேசையர், நா. கதிரைவேற் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, குலாம்காதிறு நாவலர், து.அ. கோபிநாத ராவ், சே. சுப்பிரமணியக் கவிராயர், ச.ம. நடேச சாஸ்திரி, பால்வண்ண முதலியார், ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை, வெள்ளியந் திருமலைக் கிழார் போன்றோர் தங்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தந்துள்ளனர்.

புற அமைப்பு

எனைத்தானு நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும் - திருவள்ளுவர்

என்கிற குறட்பாவை அனைத்து இதழ்களிலும் கொண்டிருந்த செந்தமிழ், தனது முகப்புப் பக்கத்திலேயே,

1. மாதப் பத்திரிகை - 'மதுரைத் தமிழ்ச்சங்கத்து மாதந்தோறும் பிரசுரமாகும் ஒரு தமிழ்ப்பத்திரிகை'

2. இதழாசிரியர் - 'பத்திராசிரியர் - ரா. இராகவையங்கார், ஸேது ஸம்ஸ்தான வித்வான்'

3. தொகுதி & பகுதி குறிப்பு

4. ஆண்டு & மாதக் குறிப்பு (தமிழாண்டு & மாதம் இவற்றோடு இதழ் முகப்பட்டையின்கீழ் ஆங்கில ஆண்டும் தரப்படுகிறது)

5. உள்ளுறை (கட்டுரைகளின் பெயர்களை முதலில் தந்து அவற்றை எழுதியவர்களின் பெயர்களை அடுத்துத் தரும் முறை)

6. பதிப்பு & அதன் இருப்பிடம் - 'மதுரை : தமிழ்ச்சங்க முத்திராசாலைப் பதிப்பு'

7. சந்தா விவரம் (ஆண்டு & தனிப்பிரதி) - 'வருஷம் ஒன்றுக்கு ரூபாய் 4, தனிப்பிரதி அணா 8

என்கிற செய்திகளை உள்ளடக்கியிருந்தது. செந்தமிழ் உள்ளடக்கப் பகுதியில் உள்ளுறையில் தரப்பட்ட வரிசையமைப்பில் கட்டுரைகள் இடம் பெறுகின்றன. முகப்பட்டைக்கு அடுத்த பக்கத்தில் இதழாசிரியர் இதழோடு தொடர்புடைய செய்திகளையும், வாசகர்களுக்கு வேண்டுகோள் ஏதேனும் சொல்ல நினைப்பின் அவற்றையும் தருகிறார். எடுத்துக்காட்டாக 1906ஆம் ஆண்டின் நான்காம் தொகுதியின் மூன்றாம் பகுதியில் 'அக்கிராசனாதிபர்' பொ. பாண்டித்துரைத் தேவர் அவர்கள், "நம் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் 'பாண்டியன் புத்தகசாலை'க்கு அடியிற் குறித்த அபிமான சீலர்கள் ஏட்டுப் பிரதிகளும் அச்சுப் பிரதிகளும் உதவினமைக்குப் பெரிதும் நன்றி கூறுகின்றேன்" எனக் குறிப்பிட்டு அவர்களின் பெயர்களையும், அவர்கள் தந்த சுவடிகள் மற்றும் நூல்களையும் தருகிறார். தமிழகம் மட்டுமின்றி யாழ்ப்பாணத்திலிருந்து 'பாரதம்' ஏட்டைக் குமாரசுவாமிப் பிள்ளையும் மட்டக்களப்பிலிருந்து 'விநாயக மான்மியம்' அச்சுநூலைச் ச. பூபால பிள்ளையும் கொடுத்துள்ளமையும் பட்டியலில் இருந்து அறியமுடிகின்றன. அதே ஆண்டின் ஐந்தாம் பகுதியில், "நம் சங்கத்தின் ஐந்தாவது வருஷோற்சவம் அடுத்த மே மாதம் 24,25,26 தேதிகளில், வழக்கம் போலவே விமரிசையுடன் நடைபெறும். அவ்வருஷோற்சவ தினத்தில், சங்க வித்துவான்களில் சிலர், அடியிற் குறித்தபடி, வியாசங்கள் வாசிக்கவும் நூல்கள் அரங்கேற்றவும் அன்புடன் சம்மதித்திருக்கிறார்கள்" என்று குறிப்பிடும் பொ. பாண்டித்துரைத் தேவர் அவர்கள் அவற்றைக் குறித்த விவரங்களைக் குறிப்பிடுகிறார். இக்குறிப்பால் வை.மு. சடகோபராமாநுஜாசாரியின், 'ஸ்ரீ பட்டர்வைபவம்', டி. லக்ஷ்மண பிள்ளையின் 'இரவிவர்மன்' என்ற நாடகம் ஆகிய நூல்கள் அரங்கேற்றப்பட்டதை அறியமுடிகிறது.

நூலின் இறுதிப் பக்கத்திலும் பல அரிய செய்திகள் காணக்கிடக்கின்றன. இறுதி அட்டையின் உள்பகுதியில் பெரும்பாலும் நான்காம் தமிழ்ச் சங்கம் வெளியிட்ட நூல்பெயர்களும் அவற்றின் விலை விவரங்களும் உள்ளன. இவ்விதம் எல்லாப் பக்கங்களிலும் தமிழ் குறித்த செய்திகள் வருமாறு செந்தமிழ் வெளியீட்டாளர்கள் கவனித்துக் கொண்டனர். ஒரு சில விளம்பரங்களும் வாசகர்களுக்கு எவ்வித இடையூறுமின்றி நூலின் இறுதிப் பகுதியில் தரப்படுகின்றன.

## இலக்கியக் கட்டுரைகள்

'திருத்தக்கதேவரும் கம்பரும்' என்கிற கட்டுரை நான்காம் தொகுதியின் முதல் பகுதியில் எழுதப்பட்டிருக்கிறது. இதை இரா. இராகவையங்கார் எழுதியுள்ளார். கம்பர் தமக்கு முந்தைய திருத்தக்க தேவரின் சீவக சிந்தாமணியிலிருந்து வடிவம், கருத்து ஆகியவற்றை எவ்வாறு பெறுகிறார் என்பதை விளக்குகிறார். இக்கட்டுரையை இரண்டு மாதங்களாக இவர் எழுதியிருக்கிறார். இவரே, 'காலஞ்சென்ற ஸ்ரீகனகசபைப் பிள்ளையவர்களும் அவர் தமிழாராய்ச்சியும்' என்கிற கட்டுரையும் எழுதியுள்ளார். இக்கட்டுரையில்,

> கடைச்சங்க நாளிலிருந்த தமிழ்நாட்டினியல்களையும் யவனர் முதலிய அந்நியர்க்கும் தமிழர்க்கும் அக்காலத்து நிகழ்ந்த தொடர்புகளையும் தமிழரது சாதி குலங்களையும் தமிழ்ப் பேரரசர் சிற்றரசர் வரலாறு களையும் தமிழர் வழக்க ஒழுக்கங்களையும் பண்டை நூலாசிரியர் சரிதங்களையும் தமிழர் மதக் கொள்கை களையும் பிறவற்றையும் பற்றிய நுணுக்கங்களையும் பிள்ளையவர்கள் எழுதிப் போந்த விஷயங்கள் தமிழினும் ஆங்கிலத்தினும் பயிற்சியுடைய ஒவ்வொருவர் உள்ளத்தையும் கவரத்தக்கன வென்பதில் ஐயமில்லை... பிள்ளையவர்கள் . . . ஆராய்ச்சியில் வெளிவந்த தமிழ்ச் சரித்திர நுட்பங்களும் எண்ணிறந்தனவாம்

எனக் கனகசபைப் பிள்ளை ஆற்றிய அனைத்துத் தமிழ்ப் பணிகளையும் உள்ளடக்கி எழுதியுள்ளார்.

சேற்றூர் இராமசாமிக் கவிராயர், 'தனிச் செய்யுட் கோவை' என்கிற கட்டுரை ஒன்றை வெளியிட்டுள்ளார். 'கல்லாடம்', 'தக்கயாகப்பரணி பாடப்பட்ட வரலாறு', 'இளம்பூரண அடிகள்', 'பஞ்சந்திரம்', 'தஞ்சைவாணன் கோவை', 'பொருட்பெண்டிர் என்னுந் திருக்குறள்', 'பஞ்சதந்திரம்' போன்ற பல இலக்கியக் கோட்பாடுகளும் நான்காமாண்டு செந்தமிழ் தொகுப்பில் காணப்படுகின்றன.

## இலக்கணக் கட்டுரைகள்

இலக்கியக் கட்டுரைகளை விடவும் எண்ணிக்கையில் இலக்கணக் கட்டுரைகள் அதிக அளவில் வந்துள்ளன. நான்காம் தொகுதியின் ஒன்றாம் பகுதியிலேயே 'உகாரவீற்று வினைப்பகுதி, 'தொல்காப்பியம் - செய்யுளியல் - நச்சினார்க்கினயர்' ஆகிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன. பேராசிரியர் ஜூலியன் வின்ஸன் எழுதிய, 'தென் மொழியில் தன்மை முன்னிலையாமாறு' என்னும் கட்டுரை மொழிபெயர்த்து வெளியிடப்பட்டது. 'தொனி' என்னும் கட்டுரையை யாழ்ப்பாணத்து சி. கணேசையர் எழுதியிருக்கிறார். தொனி என்பது,

> கவி தான் எடுத்துக்கொண்ட செய்யுட் பொருளாகிய புகழ் பொருளேயன்றி, சொல்லாற்றாற் பிறிது மொருபொருள் தோன்ற வைப்பது. இது செய்யுட்கு மிகுந்த அலங்காரத்தைக் கொடுப்பதாகும்[8]

என விளக்கியதோடு இரகுவம்சம், கந்தபுராணம், ஒருதுறைக் கோவை இவற்றிலிருந்து காட்டுகளோடு கட்டுரையாளரால் விளக்கப்படுகிறது. 'கொழுவும் துன்னூசியும்', 'ஆயிரம் என்பதின் குறிப்பு, 'நன்னூல் - ஓர் குறிப்பு', 'நன்னூல் விருத்தியுரைக் குறிப்பு' போன்றனவற்றோடு சேனாவரையர், இளம்பூரணர் போன்ற உரையாசிரியர்கள் குறித்த சிறந்த கட்டுரைகளும் நான்காமாண்டு செந்தமிழ் தொகுப்பில் வெளிவந்தன.

## வரலாறு - பண்பாட்டுக் கட்டுரைகள்

இலக்கியங்களின் காலங்களை நிர்ணயம் செய்வது; நூலாசிரியர்களது தனித்தன்மைகளை - கொள்கைகளைப் பண்பாட்டுச் சூழலில் விளக்குவது; சாதனம், கல்வெட்டு முதலியன கொண்டு தமிழர் - தமிழ் அடையாளங்களைத் தெளிவுப் பெறச்

செய்வது போன்றவற்றிலும் செந்தமிழ் தன் சீரிய பங்களிப்பை நல்கியுள்ளது. மேலும் இந்திய அளவிலும் இதழ் தன் பரப்பளவை விரித்துள்ளது.

'எலிபெண்டா எனும் கரிபுரக் குகைகள்' கட்டுரை ல. அனந்தய்யரால் எழுதப்பட்டிருக்கிறது. பம்பாய் அருகிலுள்ள ஒரு தீவில் எலிபென்டா, ஆதிபத்தியம், கரிபுரி போன்ற குகைகளில் சிவன் உருவம் மற்றும் பிற சிற்பங்கள் குறித்த விளக்கங்களைத் தருகிறது. 'வேள் ஆயண்டிரன்' என்ற கட்டுரையில், வேளிர் வரலாற்றைச் சங்க இலக்கியங்கள் மற்றும் வரலாற்றுக் குறிப்புகளோடு மு. இராகவையங்கார் விளக்குகிறார். கலிங்கத்துப் பரணி என்ற இலக்கியம் கண்ட தமிழர்களுக்குக் கலிங்க நாட்டின் வரலாற்றை, 'கலிங்கம்' கட்டுரையில் சிறந்த விளக்கங்கள்வழி ல. அனந்தய்யர் தருகிறார்.

து.அ. கோபிநாதராவ் எழுதிய, 'பாண்டிய சாஸனம்', மா. கார்த்திகேய முதலியார் எழுதிய, 'வேளிர் வரலாற்று மறுப்பு', பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் எழுதிய, 'வெண்ணெயூர்ச் சடையப்பிள்ளை யென்கிற புதுவைச் சேதிராயர் கல்வெட்டுக்கள்', ரா. இராகவையங்கார் எழுதிய, 'பழந்தமிழ்க் குடிகள்', 'தக்கயாகப்பரணி பாடப்பட்ட வரலாறு' கட்டுரைகள், இசைவளமையைக் குறிப்பிடும் பி.எஸ். சுந்தரமையர் எழுதிய 'இருபத்திரண்டு சுருதிகள்' என்கிற கட்டுரை போன்ற பல, இத்தொகுப்புகளுள் காணப்படுகின்றன. து.அ. கோபிநாத ராவ் அவர்கள் கல்வெட்டுக்கள் மற்றும் சாஸனங்கள் அடிப்படையில் 'மாறஞ்சடையன்' என்ற கட்டுரை கிரந்த எழுத்துக்களையும் அதற்கான தமிழ் பெயர்ப்புகளையும் வெளியிட்டு மாறன் சடையன் என்கிற பாண்டிய மன்னன் குறித்த பல குறிப்புகளைத் தருகிறது.

> பாரியின் வரலாறு ஏன் எழுதப்படவேண்டும்? என்பதை, தென்னாட்டில் ஆட்சிபுரிந்த சிற்றரசனை இன்னுந் தெற்கேயுள்ள சிங்கள நாட்டவனென்று வடக்கணுள்ளோர் கொண்டதும் பாரி என்னும் பெயரைப் பரிசஸன் என வழங்கியதும் அவ்வளவு வியப்புடையனவல்ல; உண்மைக் கதைகள். பிற்காலத்தில் மாறுபட்டுக்கிடப்பன இதுபோற் பலவுள. மேலே

கூறியவற்றால் வேள்பாரியின் வரலாறு ஒருவாறு உணரத்தக்கது[9]

எனத் தமது 'வேள்பாரி' என்னும் கட்டுரையில் (தொகுதி 4-பகுதி II) குறிப்பிடும் ரா. ராகவையங்கார் செந்தமிழின் இதழாசிரியராக இருக்கும் வரையில் தமிழர் பண்பாட்டு மீட்டெடுப்புக்கெனப் பல பக்கங்களைச் செந்தமிழில் ஒதுக்கியிருந்தார்.

## பிற செய்திகள் – கட்டுரைகள்

ஒழுக்கம், சித்தாந்தம், வேதாந்தம், அறிவியல் போன்றவற்றைக் குறித்த கட்டுரைகள் பலவும் செந்தமிழில் இடம்பெற்றிருக்கின்றன.

இந்துமதம் (மு. சாம்பசிவ நாயனார் பகுதி - 6), உயிர் (சேற்றூர் இராமசாமிக் கவிராயர் பகுதி-6), பிரதம வித்தியாப்பியாசப் பிரகடனம் பகுதி-6), நல்லொழுக்கம் (இலக்குமணப் போற்றிகள் பகுதி-8), கால்நடையின் உணவுப்பயிர்கள் (நாராயணசாமி ஐயர் பகுதி-8), பஞ்சதந்திரம் (எஸ். சாமிநாதஐயர் பகுதி-9), கல்வியின்பம் (ஆ. முத்துத் தம்பிப் பிள்ளை), அன்பு (ஆத்மநாதன் தொகுதி-11), ஹிந்து சாகபட்சகனாய் இருப்பதேன்? (ம. ஜகதீச ஐயர் பகுதி-12) என்பன இவற்றுள் குறிப்பிடத் தகுந்த கட்டுரைகளாகும். நல்லொழுக்கம், பிரதம வித்தியாப்பியாசப் பிரகடனம் போன்றன தொடர் கட்டுரைகளாக வெளிவந்துள்ளன.

ஸ்ரீவத்ஸன் என்பவர் 'பொன்னெறும்புகள்' (பகுதி-4) என்னும் கட்டுரையில் 2000 ஆண்டுகளுக்கு முன்பிருந்த ஓர் அதிசய எறும்பு வகையை உலகச் சரித்திரங்களிலிருந்தும் இந்திய இலக்கியங்களி லிருந்தும் எடுத்துக்காட்டி விளக்குகிறார்.

கி.மு.400 முதல் கி.பி.400 வரை இந்தியாவுக்கு வந்தவர்களுள்ளும் இத்தேசத்தைக் குறித்தெழுதியவர்களுள்ளும் இப்பொன்னெறும்புகளைப் பற்றிப் புகலாதவர் ஒருவருமில்லை... இவை போன்ற அதியசங்களைக் காணவேண்டுமென்ற அவா, மேனாட்டார் பலரை இந்திய யாத்திரை செய்யத் தூண்டிற்று... மெகாஸ்தனிஸ் இவ்வெறும்பின் தோல்களைத் தாம் நேரில் பார்த்ததாகவும் அவை சிவிங்கியின் தோலளவு பெரிதாகவிருந்ததாகவும் எழுதியிருத்தலோடு, மாரிக்காலத்தில் இவ்வெறும்புகள் பூமியைத் தொளைத்துத் தொளைவாயிலில் பொன்மணல்களாகக் குவிக்குமென்றும் சொல்லுகின்றார்[10]

மேலும் பாடபேத ஆராய்ச்சிகள், உரைகுறிப்புகள், மூல ஏட்டுச் சுவடிகளைப் பதிப்பித்துத் தொடர்ச்சியாக உரையெழுதி வெளியிடுதல் போன்ற பலவும் தொகுதி நான்கில் காணக் கிடக்கின்றன. 12 இதழ்கள் அடங்கிய ஓராண்டில் செந்தமிழ் குறித்த ஒரு சிறுபார்வை மட்டுமே இங்கு தரப்பட்டிருக்கிறது. நூற்றாண்டைக் கடந்துவிட்ட செந்தமிழில் தமிழின் முழுமையான பரிமாணத்தைக் காண, அனைத்துத் தொகுப்புகளையும் உள்ளடக்கிய விரிவான ஓர் ஆய்வு தேவைப்படுகின்றது. ஆகவே, " 'Centamil' was the first periodical to carry serious and scholarly discussion arressing Tamil literary and linguistic heritage, it printed in its pages a number of literary and grammatical and inscriptional texts of great importance, and finally served as an exemplary model for others to follow suit" எனச் செந்தமிழுக்கு நூலடைவு செய்த பா.ரா. சுப்பிரமணியன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

## குறிப்புகள்

1. P.R. Subramanian, Annotated Index to Centamil, p.xviii
2. இரா. இளங்குமரன், மதுரை நான்காம் தமிழ்ச்சங்கம், ப.91
3. பகடால நரசிம்மலு நாயுடு, திவ்விய தேசயாத்திரையின் சரித்திரம் (இரண்டாம் பாகம்), ப.626
4. மேலது, ப.620
5. ச. வையாபுரிப் பிள்ளை, ஆராய்ச்சித் தொகுதி (முன்னுரை)
6. P.R. Subramanina, Op.cit., p.xvi
7. செந்தமிழ், தொகுதி:4 - பகுதி : 4, ப.134
8. மேலது, பகுதி : 5, ப.196
9. மேலது, பகுதி : 11, ப.571
10. மேலது, பகுதி : 4, ப.171
11. P.R. Subramanina, Op.cit., p.VIII

# சித்தாந்தம்

**1912** அருணை பாலறாவாயன்

## சித்தாந்தம் – திங்கள் இதழ்

சென்னையில் உள்ள 'சைவ சித்தாந்தப் பெருமன்றம்' என்னும் அமைப்பின் மூலம் இப்போதும் 'சித்தாந்தம்' திங்கள் இதழாக வெளிவந்து கொண்டிருக்கின்றது.

இவ் இதழ் சைவ சித்தாந்தப் பெருமன்ற உறுப்பினர்கட்குத் திங்கள்தோறும் கிடைக்கப் பெறுகிறது. இவ் இதழுக்கு இன்று ஆண்டுக் கட்டணம் ரூ.50/- (ஆண்டுக் கட்டணம் சனவரி முதல் டிசம்பர் வரை); ஆயுள் கட்டணம் ரூ.500/-; தனி இதழ் விலை குறிப்பிடப்படவில்லை.

சித்தாந்தம் இதழுக்கு இப்போது முனைவர் வை. இரத்தின சபாபதி ஆசிரியராக உள்ளார். துணை ஆசிரியர் ந. ஒளியரசு பி.ஏ., பி.காம். இதன் பொதுப் பதிப்பாசிரியர் தொழிலதிபராகவும் சித்தாந்த ஆர்வலராகவும் உள்ள திரு. எஸ். தியாகராசன் பி.இ. சித்தாந்தம் இதழை மன்றத்திற்காக வெளியிடுபவர் கி.இல.பழநிச்சாமி பி.ஏ., எல்.டி., அச்சிடுபவர் நாரா. நாச்சியப்பன்.

## இதழ்த் தொடக்கம்

இன்று சைவ சித்தாந்தப் பெருமன்றம் என வழங்கப் பெறும் அமைப்பு 'சைவ சித்தாந்த மகா சமாஜம்' என்ற பெயரில் சென்னையில் 1905இல் தொடங்கப்பெற்றது. 'மகா சமாஜம்' என்ற வடசொல் 'பெருமன்றம்' எனத் தமிழில் 1982ஆம் ஆண்டில் மாற்றப்பெற்றது.

சைவ சித்தாந்த மகா சமாஜம் தொடங்கிய 1905ஆம் ஆண்டு முதல் 1911 ஆம் ஆண்டு முடியும் வரை ஓர் இதழ் வெளியிடும் கருத்து உருவாகவில்லை. 1911ஆம் ஆண்டு டிசம்பர் 27,28,29 ஆகிய 3 நாட்கள் சென்னை விக்டோரியா பப்ளிக் ஹாலில் நடைபெற்ற ஆண்டு விழாவில் சித்தாந்தம் இதழ் சமாஜச் சார்பில் வெளியிட வேண்டும் என்ற எண்ணம் உருவானது.

சித்தாந்தம் - மாதாந்திர சஞ்சிகை
சமாசிகர்களுக்கு இலவசம் (சமாசிகர் - சமாஜ உறுப்பினர்)
ஏனையோருக்கு ஆண்டுக்கு 1-8-0. (1½ ரூபாய்)
வருடாந்திர சந்தா - வி.பி. தபால் மூலம் அனுப்ப
சஞ்சிகை 4 - பாரம் கொண்டதாயிருக்கும்.

பத்திராதிபர் - சித்தாந்த சரபம். அஷ்டாவதானம், பூவை-கலியாண சுந்தர முதலியார் அவர்கள் (வேண்டிக் கொள்ளப் பட்டார்).

இச் செய்திகள் 1912 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் வெளியான முதல் சித்தாந்த இதழில் காணப்படுகின்றன. எனினும் இவ் இதழுக்குச் சித்தாந்தம் என்ற பெயர் வைக்கப்பட்ட வரலாறு, நோக்கம் இவை பற்றிய செய்தியேதும் இவ் இதழில் காணப் படவில்லை.

## முதல் இதழ் உள்ளடக்கம்

சித்தாந்தம் முதல் இதழ் சென்னை மெய்கண்டான் அச்சுக் கூடத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. 'இது சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் மாதாந்திரத் தமிழ்ப் பத்திரிகை' எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.

1912ஆம் வருடம் தொகுதி ஒன்று, பகுதி ஒன்று ஜனவரி மாதம் எனக் காணப்படும் இவ் இதழ் மொத்தம் 40 பக்கங்கள் கொண்டுள்ளது. அடுத்து வரும் பிப்ரவரி, மார்ச்சுத் திங்கள் இதழ்களின் முதல் இதழ் பக்கங்கள் 40க்கு மேல் எனக் கணக்கிட்டு 41 பக்கம் முதல் 72- 72 முதல் 102 எனத் தொடர் எண்களால் குறிக்கப்படுகின்றது. இப்போதும் இதே வழக்கத்தைச் சித்தாந்தம் இதழில் காணலாம். ஓர் ஆண்டு (12 இதழ்களுக்கு) இதழ்களுக்கு இவ்வாறு தொடர் எண்கள் தரப்படுகின்றன.

முதல் இதழில் அப்போதைய ஆசிரியர் பூவை. கலியாண சுந்தர முதலியார் 'மணவழகு' என்ற புனை பெயரில் சித்தாந்தம் பற்றி ஐந்து பக்கக் கட்டுரை எழுதியுள்ளார்.

அன்று 5ஆவது ஜார்ஜ் சக்கரவர்த்தியின் முடிசூட்டு விழா டில்லியில் நடைபெற்றதை முன்னிட்டு 'மணவழகு' 44 அடி வாழ்த்து அகவற்பா ஒன்றும், அசலாம்பிகையம்மாள் அறுசீர் விருத்தத்தில் 22பாடல்களும் எழுதியுள்ளனர்.

1910இல் இராமநாதபுரத்தில் நடந்த 5ஆம் ஆண்டு மகா சமாஜ ஆண்டு விழாவில் படித்த கட்டுரைகள் இவ் இதழில் காணப்படுகின்றன. ஆண்டு விழா நிகழ்ச்சிகள் (3 நாள்) குறிக்கப் பட்டுள்ளன. இந்த விழாவிற்கு ஜார்ஜ் சக்கரவர்த்தியின் தனிச் செயலாளர் வாழ்த்துத் தந்தி அனுப்பியுள்ளார்.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் சட்டங்கள், ஆட்சிக் குழுத் தலைவர், துணைத் தலைவர், செயலாளர், பொருளாளர், உறுப்பினர்கள் பற்றிய செய்திகள் உள்ளன. மகா சமாஜத்தின் 'போஷகர்' என்று இராமநாதபுரம் மகாராஜா குறிப்பிடப் படுகின்றார். சமாஜ அக்கிராசனாபதி என ஸ்ரீமான் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை பெயர் உள்ளது. சமாஜ உறுப்பினர்கள் 24இல் 8 பேர் சென்னையைச் சார்ந்தவர்கள்.

1911ஆம் ஆண்டிற்கு உரிய சமாஜ வரவு செலவு கணக்குக் காட்டப்பட்டுள்ளது. அது வருமாறு :

| | |
|---|---|
| சந்தா | 325-8-0 |
| நன்கொடை முதலிய வரவு | 215-4-2 |
| | ---------- |
| கூடுதல் | 540-12-2 |
| செலவு | 504-0-7 |
| இருப்பு | 36-11-7 |

செலவு விளக்கம்

| | |
|---|---|
| துண்டுப் பத்திரிக்கை - விளம்பரம் - சிறு புத்தகம் சபாக் கிரந்தம் அச்சுச் செலவு | 205-3-0 |
| உபந்நியாசகர் பயணச் செலவு | 51-12-0 |
| பிரம்மஸ்ரீ குளித்தலை A. அரங்கசாமி ஐயர் பிரயாணச் செலவு - (இந்திய சர்வ மத சங்கத்தில் சித்தாந்த உபந்நியாசம் செய்ய அனுப்பியது) | 100-0-0 |
| காகிதம் - குறிப்புப் புத்தகம் | 2-10-6 |

வீதிப் பிரசங்கம் வண்டிச் செலவு
முதலிய சில்லறைச் செலவு 38-6-0

தபால் தந்தி 18-9-0

சுவாமி வேதாசலம் (மறைமலையடிகள்) சமாஜ உபந்நியாசகராக நியமிக்கப்பட்டு மாதம் ரூ.5/- இவருக்குத் தரப்பட்டிருக்கிறது. சமாஜத்தின் கௌரவ உபந்நியாசகர்களாகத் தூத்துக்குடி பொ. முத்தையா பிள்ளை, பூவை. கலியாண சுந்தர முதலியார் நியமிக்கப்பட்டு மாதம் ரூ.20/- பயணப் படியாகத் தரப்பட்டிருக்கிறது. பயணச் செலவும் பெறாமலே கௌரவ சைவப் பிரசாரகர்களாக ஸ்ரீமான் T.S. தியாகராஜ ஞானியார், சுவாமி விருதை சிவஞான யோகி இருவரும் இருந்துள்ளனர்.

'கன்மம்' (பொ. முத்தையா பிள்ளை), 'கடவுளின் சொரூபம்' (ஜே.எம்.நல்லசாமிப் பிள்ளை) போன்ற கட்டுரைகள் காணப்படுகின்றன. 'கடவுளின் சொரூபம்' ஆங்கிலத்தில் எழுதப்பட்டதைச் சுவாமி வேதாசலம் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

மாசி மக உற்சவம் சிறப்பாக நடைபெற்றிருக்கிறது. சென்னைக் கடற்கரை எங்கும் அலங்காரப் பந்தல்கள், கடற்கரையில் உபந்நியாசங்கள் என அக்காலத்தில் சென்னைக் கடற்கரையில் சைவ சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்ற செய்தி தெரிய வருகின்றது.

சைவ சித்தாந்திகள் வடலூர் இராமலிங்க வள்ளலாரை முற்றுமாக ஏற்றுக் கொள்வதில்லை. எனினும் அன்றே சுவாமி வேதாசலம் 'சமரச சன்மார்க்கம்' பற்றிச் சமாஜத்தின் சார்பில் சொற்பொழிவு ஆற்றியிருக்கின்றார் (வேலூர் 1991ஆம் ஆண்டு ஜனவரி 25ஆம் நாள்) இச்செய்தி இவ் இதழில் 'சமாசாரங்கள்' என்ற தலைப்பில் தரப்பட்டிருக்கிறது.

இந்து, முஸ்லீம், கிறித்தவர் கலந்திருந்த பாடசாலைகளில் நீதி போதனை நிகழ்த்தப்பட்டிருக்கிறது.

## இடையீடு

1912இல் தொடங்கிய சித்தாந்தம் இதழ் 1921 முதல் 1927 வரை நின்று போனது. வெளி வராமல் நின்று போன சித்தாந்தம் மீண்டும் 1928 ஜனவரியில் தொடங்கப்பெற்றது. அப்போது இவ் இதழ் வெளி

வரச் சில புண்ணிய சீலர்களின் நிதி உதவி பெற 1927 ஜூலை மாதம் சென்னை பாலெஸ் தியேட்டரில் நடந்த பொதுக்கூட்டத்தில் முடிவு செய்யப்பெற்றது. இக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள். நிதி உதவி செய்தோர்:

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் | 80-00-0 |
| 2. | M. பாலசுப்பிரமணிய முதலியார் - சென்னை | 58-12-0 |
| 3. | S. கனகசபாபதிப் பிள்ளை - திருச்சி | 58-12-0 |
| 4. | A. சோமசுந்தர செட்டியார்-சென்னை | 58-12-0 |
| 5. | M.C. சோமசுந்தர முதலியார்-சென்னை | 58-12-0 |
| 6. | P. தானப்ப முதலியார்-சென்னை | 25-00-0 |
| 7. | P. நடராஜ முதலியார்-சென்னை | 25-00-0 |

இச்செய்திகளை அன்று சமாஜச் செயலாளராக இருந்த ம. பாலசுப்பிரமணிய முதலியார் 1928-ஆம் ஆண்டு சமாஜத்தின் 23ஆம் ஆண்டு அறிக்கையில் குறிப்பிடுகின்றார்.

## முன்னோடி இதழ்கள்

### ஞானசாகரம்

1905இல் சைவ சித்தாந்த மகா சமாஜம் தொடங்கப்பெற்ற போது மறைமலையடிகளார் 1902 முதல் தாம் நடத்தி வந்த 'ஞானசாகரம்' என்ற இதழை 1905 முதல் 1910 வரை சமாஜ இதழாகவே மாற்றிக்கொண்டு வெளியிட்டு வந்தார். அவர் சமாஜப் பொறுப்பிலிருந்து விலகியபின் தனி இதழ் ஒன்று, சமாஜம் தொடங்க எண்ணியது. மறைமலையடிகள் இராமலிங்க வள்ளலார் கருத்துக்களுக்கு உடன்பாடு கொண்டிருந்தமை சமாஜத்திற்கு ஏற்புடையதாக இல்லாததால் அவர் விலகி விட்டதாகத் தெரிகின்றது.

### சித்தாந்த தீபிகை

ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை 21.6.1897 அன்று தொடங்கிய 'சித்தாந்த தீபிகை' என்னும் திங்கள் இதழ் '1911ஆம் ஆண்டு ஆகஸ்டுத்

திங்கள் முதல் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் சொந்த இதழ்' என அவரால் அறிவிக்கப்பட்டது. ஆயினும் சமாஜப் பத்திரிகையான பின்பு இவ் இதழ் ஓராண்டுக் காலமே வெளிவந்து 1912ஆம் ஆண்டு மறைந்தது.

## இதழ்த் தோற்றக் காரணம்

சமாஜத்தின் சார்பில் வரும் இதழ்கள் என அறிவிக்கப்பட்டு நடந்த ஞானசாகரம், சித்தாந்த தீபிகை இவை சமாஜம் மூலம் வெளிவராமல் போகவே சமாஜத்திற்கென ஒரு தனி இதழ் தொடங்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. இதற்கும் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையின் ஊக்கமும் தூண்டுதலும் இருந்திருக்கலாம். பூவை. கலியாண சுந்தரனாரை இவர் விரும்பி இதழ் ஆசிரியராகப் பணித்திருக்கலாம்.

இதுவேயன்றி, அக்காலத்தில் தொடங்கிப் பரவிய 'சுயமரியாதை இயக்கக்' கருத்துக்களுக்கு மக்கள் - குறிப்பாகச் சைவர்கள் - ஆட்பட்டுவிடக்கூடாது என்ற எண்ணத்திலும் சித்தாந்தம் இதழ் தொடங்கப்பட்டிருக்கலாம் என இன்றைய சைவ சித்தாந்தப் பெருமன்றத் துணைத் தலைவர், சி.எஸ். குப்புராஜ் தாம் எழுதியுள்ள 'கடந்த அறுபத்தொன்பது ஆண்டுகளில்' என்ற தொடர் கட்டுரையில் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

1912 முதல் 1916 வரை வெளிவந்துள்ள சித்தாந்த இதழ்களில் சுயமரியாதை இயக்க மறுப்புக் குறிப்புக்கள் எவையும் இல்லை; மேலும் சித்தாந்த இதழ் நோக்கமாக இது இருந்திருப்பின் முதல் இதழில் குறிப்பாகவேனும் அது சொல்லப்பட்டிருக்கும். மேற்குறித்த 5ஆண்டு இதழ்களில் வடமொழி மறுப்பு, வைணவ மறுப்பு, வேதாந்த மறுப்பு, இஸ்லாம், கிறித்தவ சமய மறுப்பு போன்றவை காணப்படுகின்றன. இம்மறுப்புக்கள் போல் சுய மரியாதை இயக்கத்தைக் குறிப்பாகச் சுட்டிய மறுப்பு ஏதும் இவ் இதழ்களில் காணப்படவில்லை.

### உறுப்பினர்கள்

1912இல் 1000 பேரின் கையொப்பம் சேர்ந்திருப்பதாக ஒரு கணக்குக் கூறப்படுகிறது. 1912ஆம் ஆண்டில் சமாஜத்தின் 7ஆம் ஆண்டு விழா காஞ்சிபுரத்தில் நிகழ்ந்துள்ளது. இது பற்றிய செய்திகள் 1913ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் சித்தாந்தம் இதழில்

காணப்படுகின்றன. அதில் 454லிருந்து 996ஆக உறுப்பினர்கள் சேர்ந்துள்ளதாகக் காணப்படுகின்றது.

ஆண்டுச் சந்தா அனுப்புவதாகக் கூறி விபி. மூலம் சித்தாந்தம் இதழ் கேட்டவர்களில் சிலர் அவ்விதழ்களை ஏற்காமல் திருப்பியனுப்பி விட்டதால் சமாஜத்திற்கு இழப்பு ஏற்பட்டிருக் கின்றது. இதுபற்றி,

> சில கனவான்கள் விபி. யாலனுப்பபட்ட சஞ்சிகைகளைப் பெற்றுக் கொள்ளாது திருப்பிச் சமாஜத்திற்கு நட்டம் உண்டாக்கினர். இத்தகைய புண்ணியர்களது தொகை பெருகாதிருக்குமாறு திருவருள் துணை செய்வதாகுக

என்று இதழ் ஆசிரியர் அறிவித்திருக்கின்றார். அக்குறிப்பில்

> வருட சந்தா குறைந்தது 1 ரூபா
>
> தபால் கூலிக்காக மூன்று அணா

எனக் காணப்படுவதால் (1912 மார்ச்சு, ஏப்ரல்) முதலில் குறித்த ஆண்டுச் சந்தா 1-8-0 பின்னால் 1 ரூபாயாகக் குறைக்கப் பட்டிருக்கலாம் என எண்ண வேண்டியுள்ளது. 1 ரூபாய் 3 அணா தந்து 'சித்தாந்தம்' இதழ் வாங்கும் பொருளாதார நிலைமை அன்று சைவ அன்பர்கட்கு இல்லாது இருந்திருக்கலாம். எனவே சமாஜத்திடம் விரும்பிக் கேட்ட இதழ்களைப் பெற இயலாமற் போயிருக்கின்றது.

## சித்தாந்தம் – இரு திங்கள்

திங்கள் இதழாகச் சித்தாந்தம் அறிவிக்கப்பட்டிருந்தும் சில வேளைகளில் இரு திங்கட்கு ஓர் இதழாக வெளிவந்திருக்கிறது. அச்சுச் செலவு, போதிய கட்டுரை வரவின்மை, செய்திக் குறைவு, வெளியீட்டுத் தடை எனக் காரணங்கள் இருந்திருக்கலாம்.

1912 மார்ச்சு / ஏப்ரல்
மே / ஜூன்
ஜூலை / ஆகஸ்டு
செப்டம்பர் / அக்டோபர்
நவம்பர் / டிசம்பர்

என 1912ஆம் ஆண்டில் இரு திங்கட்கோர் இதழாகச் சித்தாந்தம் வெளிவந்திருக்கிறது. இதுபோலவே,

1914 பிப்ரவரி / மார்ச்சு
ஏப்ரல் / மே என வந்துள்ளதைக் காணலாம்.

## ஆசிரியர்கள்

சித்தாந்தம் இதழுக்கு ஆசிரியர்களாக இருந்தவர்களுள் பணிக்கால முதன்மை இடம் பெறுபவர் மு. அருணாசலம் ஆவார். 1963 - 1971; 1980-89 என இரண்டு முறையாக இவர் ஆசிரியர் பணியை 17 ஆண்டுக் காலம் ஏற்றிருந்தார். இவருக்கு அடுத்த நிலையாக ம. பாலசுப்பிரமணியம் (1929 - 1936; 1944; 1954-1955) 10 ஆண்டுகள் ஆசிரியராய் இருந்துள்ளார்.

1997ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல் 1997 டிசம்பர் வரை சித்தாந்தம் இதழில் 'பவள விழா இதழ்' என்னும் சார்பில் சித்தாந்தம் இதழ் பற்றிய வரலாறு பெருமன்றத் துணைத் தலைவர் சி.எஸ். குப்புராஜ் பி.இ., அவர்களால் எழுதப்பட்டு வருவதில் சித்தாந்த இதழ் ஆசிரியர்கள் பெயர்கள், பணிக்காலம் இவை இதழ்த் தொடக்க காலம் முதல் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை கீழே வருமாறு :

| ஆண்டு | ஆசிரியர் பெயர் |
|---|---|
| 1912 | திரு. பூவை. கலியாண சுந்தர யதீந்திரர் |
| 1918 | திரு. கி. குப்புசாமி முதலியார் |
| 1921 முதல் | 1927 வரை இதழ் வெளியாகவில்லை |
| 1928 | திரு. மணிமங்கலம் திருநாவுக்கரசு முதலியார் |
| 1929 | திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் |
| 1937 | திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் |
| 1938 | திரு. வி. உலகநாத முதலியார் |
| 1943 | திரு. பு.ர. சாமிநாதன் |
| 1944 | திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் |
| 1945 | திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை |
| 1947 | திரு. சி.எம். இராமச்சந்திரன் செட்டியார் |
| 1954 | திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் |

| | |
|---|---|
| 1956 | திரு. சி.எம். இராமச்சந்திரன் செட்டியார் |
| 1958 | திரு. நரா. முருகவேள் |
| 1962 | திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் |
| 1963 | திரு. மு. அருணாசலம் |
| 1972 | திரு. ஜி. கலியாணம்பிள்ளை |
| 1978 | திரு. நரா. முருகவேள் |
| 1980 | திரு. மு. அருணாசலம் |
| 1990-1995 (ஜூன் வரை) | திரு. அம்பை சங்கரனார் |

மேற்குறித்த சித்தாந்த இதழ் ஆசிரியர்களில் எவரும் இன்று நம்முடன் இல்லை. இவர்களுள் அ. சோமசுந்தரம் செட்டியார் ஒருவரே சமாஜத்திற்குப் பொருள் தந்து பெரிதும் உதவியவர். இயற்பியல் படித்தவர். அந்நாளிலேயே 'ருக்மணி குக்கர்' என்ற சமையல் கருவி (இன்றைய பிரெஷர் குக்கர் போல) கண்டு பிடித்து அதனை உற்பத்திச் செய்து பெரும்பொருள் ஈட்டியவர். சமாஜத்திற்கு என சென்னை ஈவினிங் பஜார் தெருவில் 1960இல் ஒரு கட்டிடம் வாங்கி அக்கட்டிட வருமானத்தைச் சமாஜத்திற்கு வழங்கியவர். இன்றும் பெருமன்றத்திற்கு அத்தொகை உதவி வருகின்றது. நகர நெருக்கடியில் இருந்ததால் சமாஜம் அக்கட்டிடத்திற்கு மாற்றப்படாமல் இருந்தது.

பூவை. கலியாண சுந்தர முதலியார் பின்னாளில் துறவு மேற்கொண்டு 'யதீந்திரர்' எனப்பட்டார். ம. பாலசுப்பிரமணிய முதலியார் பதிப்புப் பணிகள் இன்றும் பாராட்டுக்கு உரியவை. தேவாரம், நாலாயிர திவ்விய பிரபந்தம் இவற்றிற்கு இவர் எழுதியுள்ள ஆராய்ச்சிக் குறிப்புக்கள் பெரிதும் பயன்பாடு உடையவை. சைவப் பெருமன்றத்தினராக இருந்தாலும் 'மயிலை மாதவ தாஸன்' என்ற பெயரில் ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு இவர் 'நாலாயிர திவ்விய பிரபந்தம்' வெளியிட்டது குறிப்பிடத்தக்கது. இதனால் இவர் போக்கு பற்றி மறுப்பும் இவர் எதிர்கொண்டார்.

S. சச்சிதானந்தம் பிள்ளை 'சைவப் பாதிரியார்' என அழைக்கப்பட்டவர். அந்நாளில் பரவிய கிறிஸ்துவச் சூழலில் ஒரு சைவருக்குப் 'பாதிரியார்' பட்டம் கொடுக்கப்பட்டிருப்பது

வியப்பளிக்கிறது. கிறிஸ்துவப் பாதிரிமார் போன்று சைவத்திற்குத் தொண்டு செய்பவர் என்பதை வெளிப்படுத்த சைவர்கள் 'பாதிரியார்' என்ற புறச் சமயப் பட்டத்தை ஏற்றனர் போலும்! வி. உலகநாத முதலியார் திரு.வி.க.வின் தமையனார் ஆவார். இன்னும் மு. அருணாசலம், ந.ரா. முருகவேள், அம்பை சங்கரனார் போன்றோர் சைவம், சித்தாந்தம், வரலாறு இவை வல்லோர். இப் பெருந்தகையோரின் பணிகள் நிலைத்த நினைவுக்குரியன.

## கட்டுரை எழுதியோர் – கட்டுரைகள்

சித்தாந்தம் தொடங்கிய நாளில் இவ் இதழுக்குக் கட்டுரைகளை எழுதித் தந்தவர்கள் பலர். அவர்களில் சிலர் தொடர் கட்டுரைகள் எழுதியுள்ளனர்.

முதற்காலங்களில் சித்தாந்த இதழில் சமாஜத்தின் ஆண்டு விழா நாட்களில் கலந்துகொண்டோர் பேசிய உரைகள் வெளியிடப் பட்டுள்ளன. அவற்றிற்கிடையே வேறு கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

இதழ் ஆசிரியராய் விளங்கிய 'மணவழகு' பூவை. கலியாண சுந்தரனார் தவறாமல் கட்டுரை எழுதியுள்ளார். அவர் சித்தாந்தம் பற்றிய விளக்கக் கட்டுரைகள் எழுதியதோடு மட்டுமன்றி உபநிஷத்துக்களைத் தமிழில் மொழியாக்கம் செய்து வெளியிட்டுள்ளார். மணவழகு எழுதிய சில தொடர் கட்டுரைகள் :

1. தருக்க சோபானம் - சித்தாந்த பரிபாஷை
2. உபநிடதங்கள் -
   1. பஞ்சப் பிரம்மோபநிஷத்
   2. சரபோநிஷத்
   3. அதர்வசிகோபநிஷத்
   4. கேனோபநிஷத்
   5. முண்டகோபநிஷத்
   6. மாண்டூக்யோபநிஷத்
   7. ஈசாவஸ்யோபநிஷத்
   8. கடோபநிஷத்
   9. ஜாபாலோநிஷத்
   10. பைத்திராணியோபநிஷத்

11. ஐதரேயோபநிஷத்

12. தைத்திரியோபநிஷத்

3. சிவபாரம்மியம் (விஷ்ணு பாகவதம்)

இத்தொடரேயன்றிச் சில தனிக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். அவற்றுள் சில :

1. சதுர்த்தம் 2. வியாச சூத்திர விசாரம் 3. உருத்திராட்ச வைபவம் 4. சித்தாந்த ஞானத்திரயம் 5. தாரக மந்திரம்

சித்தாந்தம் இதழில் எழுதியவர்களுள் குறிப்பிடத்தக்கோர்:

1. ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை
2. பொ. முத்தையா பிள்ளை
3. S. பால்வண்ண முதலியார்
4. மாகறல் கார்த்திகேய முதலியார்
5. துடிசைகிழார் அ. சிதம்பரனார்
6. S. சச்சிதானந்தம் பிள்ளை
7. காஞ்சி நாகலிங்க முதலியார்
8. நாகை ஸி. கோபாலகிருஷ்ணன்
9. சுவாமி வேதாசலம்
10. மணி திருநாவுக்கரசு முதலியார்
11. கா. ஆலால சுந்தரம் பிள்ளை
12. ஹர. சண்முக முதலியார்
13. வ.மு. இரத்திநேசுவர அய்யர்
14. குளித்தலை பிரம்மஸ்ரீ அரங்கசாமி அய்யர்
15. வி. குஞ்சிதபாதம் பிள்ளை

மேற்குறித்தோருள் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை ஆங்கிலத்தில் எழுதும் சித்தாந்தக் கட்டுரைகள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுச் சித்தாந்தம் இதழில் வெளிவந்துள்ளன.

மாகறல் கார்த்திகேய முதலியார் தமிழ் இலக்கண, மொழி நூற் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதியுள்ளார்.

S. சச்சிதானந்தம் பிள்ளை 'சைவ சமயத்தைக் குறித்த ஒரு சம்பாஷணை' என்ற தலைப்பில் எழுதியுள்ள தொடர் கட்டுரை உரையாடல் அமைப்பைக் கொண்டுள்ளது.

1. சித்தாந்தம் இதழில் தொடர் கட்டுரையாக வந்தவற்றில் இன்றியமையாதது சிவஞானபோதம் முதல்நூலா? அன்றா? என்னும் கட்டுரை. துடிசை கிழார், மாகறல் கார்த்திகேய முதலியார், திரு.வி.க. முதலியோர் சிவஞானபோதம் முதல் நூலே! என நிறுவியுள்ளனர். சிவஞானபோதம் மொழிபெயர்ப்பே என நிலைநாட்ட 15பக்கக் கட்டுரை ஒன்றைத் தூத்துக்குடி பொ. முத்தையா பிள்ளை எழுதியுள்ளார். வேலூரில் 1913இல் டிசம்பர் 26,27,28 நாட்களில் நடந்த சமாஜ ஆண்டு விழாவில் கொழும்பு முதலியார் சபாரத்தினம் 'சிவஞானபோதம் மொழி பெயர்ப்பே' என்று பேசிய உரை வெளியிடப்பட்டுள்ளது. சிவஞானபோதம் முதல் நூலே என்று எழுதிய ஹர. சண்முக முதலியாருக்கு 'ஐய வினா' என்று தலைப்பிட்டுக் கடித வடிவில் பொ. முத்தையா பிள்ளை மறுப்புத் தெரிவித்திருக்கிறார்.

2. இதுபோல மு. இராகவையங்கார் செந்தமிழ் (தொகுதி 3 பகுதி 7) இதழில் எழுதிய 'அர்ச்சுனனும் பாண்டிய மரபும்' என்ற கட்டுரைக்குத் துடிசை கிழார் மறுப்பு எழுதியுள்ளார். துடிசை கிழாரின் மறுப்புக்குப் பொருந்துமாறு பதில் கூற மு. இராகவையங்கார் 5 ஆண்டுகள் எடுத்துக்கொண்டார்; எனினும் அக்கருத்துக்கள் பொருத்தமானவையல்ல என்ற குறிப்புக் காணப்படுகின்றது.

3. தமிழில் ந, ன இரண்டு எழுத்துக்கள் ஒரே ஒலி உள்ளது. எனவே இரண்டு எழுத்துக்கள் வேண்டா; ஏதேனும் ஓர் எழுத்தைக் கொள்ளலாம் என்ற கருத்தை வெளியிட்டு இன்னும் தமிழில் எழுதும் முறை, உச்சரிப்பு முறை பற்றிய ஓர் ஆங்கில நூல் ராவ்பகதூர் ம. ரங்காச்சாரியாரால் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலை அவரே ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். இதற்குத் தக்க மறுப்பினை மாகறல் கார்த்திகேய முதலியார் எழுதியுள்ளார்.

மாகறல் கார்த்திகேயனார் 'மொழி' என்ற சொல்லிற்குப் 'பாழை' என்று எழுதும் முறை நன்றாக இல்லை என ஒரு சாரார் கூறியதற்கு மறுப்பாக 'பழம்' என்ற சொல்லிற்கு இசை என்பது பொருள்; பழந்தக்க ராகம், பழம் பஞ்சுரம் என்னும் சொற்கள் காண்க. எனவே பழம் → பாழை ஆயிற்று என உரைத்துள்ளார்.

மாகறலார் எழுதிய 'தமிழில் வடமொழி கலத்தல்' என்னும் மறுப்புக் கட்டுரை மூலம் அந்நாளில் பல்கலைக்கழகத்திலிருந்த சேஷகிரி சாஸ்திரியார் தமிழில் குற்றியலுகரத்தை நீக்க முயன்ற செய்தியறியப்படுகின்றது.

4. 1913ஆம் ஆண்டு வேலூரில் நடந்த மகா சமாஜ ஆண்டு விழாவை வேலூரில் உள்ள சைவ, வைணவப் பெருமக்களை இணைத்து, வேண்டுவன செய்ய முயன்றுள்ளனர். எனவே வைணவச் சமயப் பெருமக்களையும் சைவ சமாஜம் வேறுபாடின்றி அழைத்திருக்கின்ற செய்தி அறிகிறோம். ஆனால் கொள்கை விளக்கம் என்ற அளவில் 1915ஆம் ஆண்டில் 'தாரக மந்திரம்' என்ற கட்டுரையில் மணவழகு தாரக மந்திரம் - இராம மந்திரம் என்பர் சிலர். 'இராமன்' எனில் எந்த இராமன்? பரசுராமனா? தசரதராமனா? பலராமனா? இராம மந்திரம் சிவசஹஸ்ர நாமத்தில் பழக்கப்பட்டுள்ளது. இராமநாமம் சிவநாமம் என்றுதான் சிவபக்தர்களான ஜமதக்கினியும் தசரத ராமனும் வசுதேவனும் தம்மக்கட்கு மந்திரம் என்பது சிவமந்திரமே என நிறுவுகிறார். இது ஒரு வகையில் வைணவ சமய மறுப்பு எனலாம்.

5. புறச் சமயங்களான இஸ்லாம், கிறித்தவம் பற்றியும் சில மறுப்புக் கட்டுரைகள் காணப்படுகின்றன. இலிங்கம், நந்தி என்ற சொற்கள் பஞ்ச கிருத்தியங்கள் விளக்கும் பொருளில் அமைந்தவை. ஆனால் அல்லா - அலிலா (Ali - lah) விளங்கத் தக்கவன் (The worthy to be adored by all); Jehova - This word from Jo haya to be i.e. External or self - Existent Being 'ஹாயி' என்ற சொல்லின் மூலப்பொருள் இருக்கிறது என்றும் உள்ளது; God - Gutha என்ற டூட்டானியர் சொல் (Teutonic word) ஆரிய பதம் ஏன்க்ஹ - கூட; Secret - இரகசியம் : அதாவது அறியக் கூடாதது (Unknowable) என்று பொருள். இச்சொல்லில் 'திரோபவம்' என்னும் 'மறைத்தல்' தொழில் குறிப்பிடப்படுவதாகக் கூறலாம். எனவே சிவபெருமானின் ஐந்தொழில்களையும் குறிக்கும் நந்தி, இலிங்கம் போன்ற சொற்கள் பிற சமயக் கடவுளர் சொல்லாக இல்லை என மறுப்புக் கூறப்பட்டு உள்ளது.

மேலும் நம் உருவ வழிபாட்டை Shadowy Practice - குருட்டு அல்லது அக்ஞை வழிபாடு எனக் கிறித்தவ பாதிரியார் குட்வில் (Rev. T. Goodwill) கூறி அது 'Not illuminative Perception of God' எனக்

கருத்துரைத்ததை மறுக்கும்போது 'நாம் நம் கொள்கைகளை விளங்க அவர்கட்குக் கூறினால் அச்சமயத்தினர் ஒப்புக் கொள்வர்' என நம்பிக்கை தெரிவிக்கப்படுகின்றது.

6. சிலர் எழுதும் கட்டுரைக் கருத்து ஒவ்வாது என இதழ் ஆசிரியர் கருதினால் அக்கட்டுரையின் அடிக்குறிப்பாகத் தமது மறுப்பை வெளியிட்டு உள்ளார். சான்றாக C. சங்கரராயர் (1916 - ஏப்ரல்) எழுதிய 'சைவ சமயமும் சைவத் தலைவர்களின் கடமையும்' என்ற கட்டுரையின் 'கடவுளின் பெயரை மாற்றியமைப்பதினால் சமய பேதம் உண்டாக மாட்டாது. அவ்விதம் யோசிக்கும் அளவில் சைவ சமயத்திற்கும் வைஷ்ணவ சமயத்திற்கும் அதிக வித்தியாசமில்லை' என்ற கருத்திற்கு மறுப்பாக இதழ் ஆசிரியர் மணவழகு, 'வைணவர்கள் சைவர்களைப் போலத் தம்மை உடைப்பொருளாகக் கொள்ளினும் உடைப்பொருளாகிய தமக்கு அணுப் பரிணாமமும் உடையானுக்கு பரிணாமமும் உடையன் அல்லாதானை உடையான் எனவும் மயங்கும் வித்தியாசமே உண்டு' எனப் பதில் கூறியுள்ளார். இதே கட்டுரையாசிரியர் இக்கட்டுரையில், 'சைவர்களால் ஒப்புக் கொள்ளப்படுவது நீலகண்ட பாஷ்யம். இதனையே 'சுத்தாத்துவிதம்' என்பர் என்ற கருத்தை மறுத்து இதழ் ஆசிரியர் 'அது சுத்தாத்துவிதம் அன்று; அறுவகைச் சமயத்துள் ஒன்றாகிய சிவாத்துவிதம்' எனத் திருத்தியுள்ளார்.

7. சித்தாந்தம் இதழ் வடலூர் இராமலிங்க வள்ளலார் கருத்துக்களை விளக்கும் கட்டுரைகளை வெளியிட்டுள்ளது. 'சீவகாருண்ய ஒழுக்கம்' - காஞ்சி. நாகலிங்க முதலியார் (1913-பிப்ரவரி); 'சிவார்ச்சனை' - காஞ்சி. நாகலிங்க முதலியார் (1913-மார்ச்சு). இதுவன்றி வடலூரில் நடந்த தைப்பூச விழாவில் மணவழகு இராமலிங்க சுவாமிகள் மேல் 'நிந்தாஸ்துதி' யாகப் பாடல் பாடிய செய்தி காணப்படுகின்றது (1914-பிப்ரவரி). ஆயினும் 'சமரச சன்மார்க்கம்' என்ற கருத்துக்கு அந்நாளில் சமாஜ உறுப்பினர்களிடையே மறுப்பு இருந்திருக்கிறது. ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையின் கட்டுரையில் (1912 ஜூலை / ஆகஸ்டு) சமரசம் என்ற சொல் குறித்துக் கூறுகிறார் :

'சமம் - ஒற்றுமை என்னும் பொருளை விட அபிமானத் தழுந்துவது, உள்ளதை உள்ளபடி உணர்ந்து அதன் உண்மையறிதல்

என்னும் பொருள் சிறக்கின்றது. சசம் - சுவை; ஆறுசுவை - வேறு வேறு; ஒன்று எனல் பொருந்தாது; எல்லாப் பழத்தின் சாரம் ஒன்றாகா; ரசம் - ஒருவருக்கு ஒன்று விருப்பம்; ஒருவருக்கு இன்னொன்று விருப்பம்; எல்லா மதங்களும் ஒன்றாகா; தெய்வமில்லை; தெய்வம் உள்ளது. இரு மதமும் ஒன்றாகா. ஒவ்வொரு மதத்திலும் ஒரு பயன் உள்ளது; பக்குவ முறையில் மதங்கள் பயன்படும். 'சமரசம்' என்ற கருத்தில் சமாஜப் பெரியவரான ம. பாலசுப்பிரமணிய முதலியார்க்கும் உடன்பாடு இல்லை என்று கூறுவர். ஆனால் சுவாமி வேதாசலம் 'சமரச சன்மார்க்கம்' பற்றிச் சமாஜம் சார்பிலேயே சென்று சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளதையும் அறிகிறோம்.

### பிற கட்டுரைகள்

சித்தாந்தம் இதழ் பெரும்பாலும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்கும் கட்டுரைகளை வெளியிட்டு வந்தபோதிலும் அவ்வப்போது வேறு தலைப்பிலும் கட்டுரைகளை வெளியிட்டுள்ளது. அவை அறம், அறிவியல், திருக்கோயில், தமிழ் மொழி போன்ற தலைப்புகளில் காணப்படுகின்றது. கட்டுரைப் பெயர்களில் சில :

1. திருக்குறள் முதற்பாட்டின் உண்மை
2. அன்பு
3. கல்வி
4. கடவுள் இலக்கணமும் ஆலய வழிபாடும்
5. அறம் செய விரும்பு
6. திருவள்ளுவர் - திருக்குறள் மாட்சி
7. ஊழ்
8. போகனம்
9. பழந்தமிழுள் சந்தேக ஆராய்ச்சி
10. நான் யார்?
11. தமிழர்க்கான சில குறிப்புகள்
12. அறத்தின் மேம்பாடு
13. மன நினைவு

14. பிரபஞ்ச உற்பத்தி
15. ஆசாரம்
16. மும்மூர்த்திகள்

## சித்தாந்தம் – ஆதீனங்கள்

சைவ சித்தாந்தத்தைப் பரப்பும் நோக்கில் வெளியிடப்பட்ட சித்தாந்தம் இதழில் தமிழகத்தில் நிலவி வரும் சைவத் திருமடங்கள் பற்றிய குறிப்புக்களும் அத்திருமடங்களோடு இதழுக்குள்ள தொடர்புகளும் தெரியவருகின்றன. அவற்றுள் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் திருமடம் குறிப்பிடத்தக்கது. 1913ஆம் ஆண்டு வேலூரில் நடந்த சமாஜ ஆண்டு விழாவிற்குத் தலைமையேற்றவர் ஞானியார் மடம் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள். இவரை அன்பர்கள் புடைசூழச் சிவிகையில் தாங்கி வந்து வரவேற்பு நிகழ்த்தியுள்ளனர். 1914ஆம் ஆண்டு சமாஜ விழா திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் தலைமையில் நிகழ்ந்துள்ளது.

காஞ்சி, நாகலிங்க முதலியார் 1912இல் வெளியிட்ட ‘காஞ்சிப் புராணம்’ திருவாவடுதுறையாதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் அருளாணையின் வண்ணம் வெளிவந்ததாகத் தெரிகின்றது. 1916ஆம் ஆண்டு ஜனவரி இதழில் துறைசையாதீனம் நமசிவாயத் தம்பிரான் சுவாமிகள் ‘குருவணக்கம்’ என்ற தலைப்பில் கட்டுரை எழுதியுள்ளார்.

சித்தாந்தம் 1915 ஜூலை இதழில் ‘திரிபார்த்த தசகாரியம்’ என்ற நூலுக்கு மதிப்புரை எழுதப்படுகிறது. மதுரைத் தமிழ்ச் சங்க ஏட்டுப் பிரதிகளைச் சோதித்து வெளியிட்டவர் S. பால்வண்ண முதலியார். இந்நூலின் ‘ஆசிரியர் பெயர் தெரியவில்லை’ எனக் குறிக்கப்பட்டுள்ளது. இதற்கு மதிப்புரை எழுதியவர் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை.

இந்நூலின் அகச்சான்றாக ஆசிரியரின் குரு திருவாரூர் ஞானப்பிரகாசர் எனக் கூறப்பட்டிருந்தும் நூலாசிரியர் தருமையாதீன முதற்குரவர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் என்ற செய்தி அன்று அவர்களால் அறியக் கூடவில்லை. இந்நூல் ‘திரிபதார்த்த தசகாரியம்’ என்ற பெயரில் இல்லாமல் இப்போது ‘திரிபார்த்த ரூபாதி தசகாரிய அகவல்’ என்ற பெயரோடு தருமையாதீன வெளியீடாக வந்துள்ளதைக் காணலாம்.

1915ஆம் ஆண்டு தஞ்சையில் நடந்த சமாஜ விழாவிற்கு மலைக்கோட்டை ஸ்ரீலஸ்ரீ தம்பிரான் வருகை தந்துள்ளார். இத் தம்பிரான் சுவாமிகள் தருமையாதீனத்தைச் சார்ந்தவராய் இருக்கலாம்.

## ஸ்மார்த்த மடம் – மறுப்பு

சைவ சித்தாந்த மடமான திருப்பனந்தாள் ஆதீனம் ஜீலுாக்க லிங்கத் தம்பிரான் சுவாமிகள் அந்நாளில் கும்பகோணம் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளிடம் சென்று திருநீறு பெற்று அவர் வாழ்த்தினைப் பெற்று வந்தார் என்னும் செய்தியை ஆங்கில நாளேடு 'இந்து' வெளியிட்டிருக்கிறது. இதற்குக் கடும் எதிர்ப்பைத் தெரிவித்து 1916 ஆகஸ்டு இதழ் அறிக்கை வெளியிட்டிருக்கிறது.

"இஃது உண்மையாயின் வைதிக சைவ சமய மரபும் வரம்பும் தடுமாறி விட்டதாகக் கொள்ள வேண்டி வருமன்றோ! கொள்ள வேண்டியதில்லை எனில், கொள்ள வேண்டுவது தான் என திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்தில் வைதிக சைவ சமயாபிவிருத்திக்கு இலக்காக எழுந்தருளியுள்ள மகா சந்நிதானத்தில் மேற்படி தம்பிரான் சுவாமிகள் உண்மை தெரிந்து கொள்ளும்படி விரும்புகின்றனம். அங்ஙனம் செய்யேம் நம் பிரியப்படி செய்வோம் என்பாரேல் நாம் இனி மௌனம்.

மெய்கண்ட சம்பிரதாயம் மேன்மேலும் ஓங்குக. மணவழகு

ஸ்ரீ சங்கர மடம் ஸ்மார்த்தர் மடம். நம் சித்தாந்தக் கொள்கைக்கு நேர் எதிரான அம்மடத்திற்குச் சென்று வந்த திருப்பனந்தாள் மடத்துத் தம்பிரான் சுவாமிகளைக் கண்டிக்கும் துணிவு சித்தாந்தம் இதழ் கொண்டிருந்ததை அறிவதன் மூலம் அவ்விதழ்க் கொள்கை வெளிப்படுகிறது.

1913 ஜனவரி 26இல் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் தலைமையில் சொற்பொழிவுகள் நிகழ்ந்துள்ளன. அவர் 'அத்வைதம்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்தியிருக்கிறார். 'பகவத் கீதை' சிவபரத்துவம் போதிப்பது என்ற கருத்தைச் சுவாமிகள் வெளியிட்டுள்ளார்.

1915ஆம் ஆண்டு தஞ்சையில் நடந்த சமாஜ ஆண்டு விழாவில் யாழ்ப்பாணம் ஸ்ரீமத் அம்பலவாண நாவலர் சுவாமிகள் தலைமை தாங்கியுள்ளார்.

தருமையாதீனம் சார்ந்த வைத்தீசுவரன் கோயில் சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகள் 'பதி பசு பாச விளக்கம்' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரை 1916 ஜனவரியில் வெளி வந்துள்ளது.

## புத்தக வரவு

சித்தாந்தம் இதழில் 'புத்தக வரவு' என்ற பகுதி முறையாக வெளிவந்திருக்கிறது. இது நூல் மதிப்புரைப் பகுதி. இப்போது வெளிவரும் சித்தாந்தம் இதழில் இப்பகுதி 'நூலியல் நுவலல்' என்னும் அழகு தமிழ்ப் பெயராக வெளிவந்து கொண்டிருக்கிறது.

சித்தாந்தம் மூலம் அந்நாளில் வெளிவந்ததாக அறியப்படும் நூல்களுட் சில :

1. காரோனேஷன் தமிழ்மொழியகராதி - காஞ்சி. நாகலிங்க முதலியார்
2. சிவஞான போதம் - ஆங்கில மொழிபெயர்ப்பு - ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை
3. சிவஞானசித்தியார் - ஆங்கில மொழிபெயர்ப்பு - ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை
4. ஞானகாந்தி - செ.இராஜு செட்டியார்
5. காஞ்சிபுராணம் - காஞ்சி. நாகலிங்க முதலியார்
6. திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை - சதாசிவ பண்டிதர்
7. குருநாத சுவாமி கிள்ளை விடுதூது - சுன்னாகம் வரதராஜ பண்டிதர்
8. நீதிநெறித் தாலாட்டு - ஸ்ரீவில்லிபுத்தூர் ஈசுவர மூர்த்தியா பிள்ளை
9. தர்மகர்த்தா - A. நடேசம் பிள்ளை
10. துடிசைப் புராணம் - ஆசிரியர் பெயர் தெரியவில்லை. துடிசை கிழார் வசனநடை எழுதியுள்ளார்.
11. விபூதி விளக்கம் - துடிசை கிழார் திரட்டியது
12. சிவஞான சித்தியார் - சுபட்சம் - பொ. முத்தையா பிள்ளை

## இதழ்கள்

1. சங்கீத சதீ சம்பிரதாய தீபிகை - மாத இதழ்

2. தொழிற்கல்வி - மாத இதழ் - காஞ்சி நாகலிங்க முதலியார்
3. சித்தாந்த தீபிகை - ஆங்கில இதழ் - ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை
4. ஞானசாகரம்
5. இந்து சாதனம்
6. காமன்வில்

அந்நாளிலேயே தொழிற்கல்வியின் பெருமை, தேவை இவற்றை உணர்ந்து தொழில் வளர்ச்சிக் கட்டுரைகள் தாங்கிய ஓர் இதழ் சைவ அன்பரால் நடத்தப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்கும் வியப்பிற்கும் உரியது. இதன் விலை, தொடங்கப்பட்ட ஆண்டு தெரியவில்லை. எனினும் இந்நூல் பற்றிய செய்தி 1914 மே மாதம் வெளிவந்திருப்பதால் ஒருவாறு நாள் அறியலாம்.

## நீதி

'நீதி' என்ற தலைப்பில் சிறுசிறு செய்திகள் (Box News - பெட்டிச் செய்தி) வெளியிடப்பட்டுள்ளன. கதை வடிவிலும் அறவுரை வடிவிலும் அவை உள்ளன.

> பிடாரன் பெட்டியில் பாம்பு பசியோடு இருக்க, எலி ஒன்று அப்பெட்டியைத் துளைத்து உள்ளே சென்று நேரே பாம்பின் வாயில் புகவும் பாம்பு பசியாறி எலி துளைத்த வழியே வெளியேறியது. இறைவன் காக்க வேண்டியவைகளைக் காப்பான்; கொல்ல வேண்டியவை களைக் கொல்வான்.

> எவனுக்குச் செல்வம் குறைய வேண்டிய காலம் வருகிறதோ அப்போது கிராமக் கணக்கனைக் கோபிப்பான். அல்பாயுசு உடையவன் மருத்துவனை விரோதிப்பான். இரண்டும் உடையவன் பெரியோரை இகழ்ந்து விரோதித்துக் கொள்வான்.

## தேவாரக் குறிப்பு

இத்தலைப்பில் அரிதாகப் பொருள் விளங்கிக் கொள்ளக் கூடிய தேவாரப் பாடல்களுக்கு விளக்கம் அளிக்கப்படுகின்றது. இவ்விளக்கம் செய்தவர் வி. குஞ்சிதபாதம் பிள்ளை.

திருஞானசம்பந்தர் தேவாரத்திலும் திருநாவுக்கரசர் தேவாரத்திலும் பல பாடல்கள் அவ்வாறு பொருள் அரிதாகத் தோன்றுவனவாக உள்ளன. திருப்பாசுரம் அத்தகையது என்ற கருத்தில்தான் சேக்கிழார் அதற்கு உரை விளக்கச் செய்யுள் பாடினார். திருஞானசம்பந்தரின் 'வீடலாலவாயிலாய்' அப்பரின் 'அன்னம்பாலிக்கும்' போன்ற பாடல்கள் பொருள் நெருடல் உள்ளவை. இந்தக் கருத்தைக் கொண்டே அப்பொழுது 'சித்தாந்தம்' இப்பகுதியை வெளியிட்டிருக்கிறது.

நல்லூர்ப் பெருமணம் வேண்டா - திருஞானசம்பந்தர்
புகைஎட்டும் போக்கெட்டும் - அப்பர்

இவை போன்ற பாடல்களுக்கு விளக்கங்கள் அளிக்கப்பட்டு உள்ளன.

## பாட வேறுபாடு

தமிழ் நூல்களில் பாட வேறுபாடுகள் காணப்படுவது நாம் அறிந்ததே. அவ்வேறுபாடுகளில் பொருள், இலக்கணம் பொருந்துவன ஏற்பது சிறப்பு. அவ்வகையில் 'சித்தாந்தம்' இதழில் சில பொருத்தமான பாடங்கள் கொள்ளப்பட்டுள்ளன.

சேக்கிழாரின் இளையான்குடி மாற நாயனார் புராணத்தில்,

அன்பனே! அன்பர் பூசை அளித்தநீ அணங்கி னோடும்
என்பெரும் உலகம் எய்தி

என வரும் பாடலில் என் 'பெரும் உலகம்' என்பது அரிய ஆட்சியாகக் கருதப்படுகிறது. இது ஓர் இலக்கணப் பிழையாகலாம் என்ற கருத்தில் 'விருந்தோம்பல்' - பொன்மார் நடேச முதலியார் 1915 ஏப்ரல் கட்டுரையில் இப்பாடல்,

அன்பனே! அன்பர் பூசை அளித்தநீ அணங்கி னோடும்
என்பெருந் தலத்தை எய்தி

என மாற்றியமைக்கப்பட்டுள்ளது.

துடிசை கிழார் கட்டுரையில் (1916 ஆகஸ்டு)

மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா

என்ற தொல்காப்பிய நூற்பா

மொழிப் பொருட் கிளவி விழிப்பத் தோன்றா

எனக் காணப்படுகின்றது.

தொல்காப்பியர் 'காரியம்' என்ற சொல்லை எடுத்தாளவில்லை. எனவே 'காரணம்' என்ற சொல்லாட்சி அவருடையதாக இராது என்ற கருத்தில் 'கிளவி' என மாற்றியமைத்துள்ளார் போலும்!

### மத மாற்றம்

மதமாற்றம் பற்றிய ஒரு வாசகர் கடிதம் ஒன்றைச் சித்தாந்தம் வெளியிட்டுள்ளது.

> நானொரு வைணவச் சிறுவன். 'கண்ணபிரான்' என்ற என் பெயரை மாற்றிக் கொண்டு 'கண்ணப்பன்' என்று பெயர் கொண்டுள்ளேன். தீட்சை பெற விரும்புகின்றேன். 108 - உபநிடதங்களிலும் 'ஹரிஓம்' என்றே தொடக்கம் இருப்பதால் எல்லா உபநிடதங்களும் 'விஷ்ணு சம்பந்தம் உடையதே' என்று என்னை வைணவர்கள் இகழ்கிறார்கள். 'ஹரிஓம்' என்ற சொற்குப் பொருள் விளக்கி விடை கூறுக

இவ்வாறு கேட்ட கேள்விக்கு மகேஸ்வரி, சங்கரி, உருத்திரி என்ற சொற்களில் 'அரி' என்ற சொல் உமையைக் குறிக்கும். எனவே 'ஹரிஓம்' என்பது சிவசம்பந்தம் உடையதே! எனப் பதிலளிக்கப் பட்டுள்ளது.

### சில சுவையான செய்திகள்

சித்தாந்தம் இதழில் சில நயமான - சுவை பயக்கும் செய்திகள் வெளிவந்துள்ளன. அவை ஆய்வுக் கட்டுரை, சொல்லாட்சி, கடிதம் மூலம் நமக்கு அறிமுகமாகின்றன.

1. வள்ளுவர் - சாதிப்பெயரன்று; காரணப் பெயர். நான்கு பயனையும் ஒரு சேரத் தொகுத்துதவிய வள்ளற்றன்மை யென்னும் காரணத்தால் இந் நுலாசிரியர் வள்ளுவர் எனப் பெயர் பெற்றனர் - பொ. முத்தையா பிள்ளை.

   'திருக்குறள் மாட்சி' 1912 ஜூலை / ஆகஸ்டு

2. ஔவையாருக்குப் பட்டப்பெயர் 'பூலோக சரஸ்வதி' - மணவழகு 1914 ஏப்ரல் / மே

3. திருவெண்ணை நல்லூர் - 'பெண்ணை நல்லூர்' என்பதே வெண்ணை நல்லூர் ஆயிற்று - துடிசை கிழார் 1914 ஏப்ரல் / மே

4. சமய அருட்சி - தெருட்சி, மருட்சி என்பது போல 'அருட்சி' என்ற சொல்லாட்சி - ந. சபாரத்தின முதலியார் 1916 ஜனவரி

5. தாயுமானவர் - சிவம் அன்பின் வடிவமாதலின் 'தாயுமானவர்' என்ற சொல் இறைவனுக்குப் பொருந்தும்

   பிள்ளை - பொதுச் சொல் : வேளாளர்க்குப் பொதுப் பெயர். பிள்ளை திருஞானசம்பந்தர் - ஆளுடைய பிள்ளை வைஷ்ணவத்தில் பெரியவாச்சான் பிள்ளை

   இறைவன் - தாய்

   உயிர்கள் - பிள்ளை - C. சங்கரராயர்

   'சைவ சமயமும் சைவத் தலைவர்களின் கடமையும்'

   1916 ஏப்ரல்

6. கடுஞ்சொல் :

   "சிவாகமத்தை உண்மைப் பிரமாண நூல் என ஒப்புக் கொள்ளாதவர்களும் தழுவி நடவாதவர்களும் தங்களைச் சிவமதஸ்தர் எனச் சொல்லிக் கொள்வதற்குக் கிஞ்சித்தும் நியாயமில்லை. அவர்களும் சிவசம்பந்தம் உடையார் போல் சைவ வேஷங்கள் பூண்டு கொள்ளுதல் 'கழுதைகள் சாம்பலில் புரளுவது போலன்றி' உண்மையிற் சைவராக முடியாது"

   - இப்படிக் கடுஞ்சொல் அறிவிப்பிற்குப் பக்கத்தில் 'கோபம்' (சுவாமி வேதாசலம்) கட்டுரை அச்சிடப்பட்டுள்ளது.

7. நாய்தான் விலங்கு வகைகளில் மக்களிடத்தில் முதன் முதலாகத் தானாக வந்து சேர்ந்திருக்க வேண்டும். 'நாயேன்' என்னும் வழக்குத் தென்னாட்டில்தான் இருந்து கொண்டிருக்கிறது.

- மாகறல் கார்த்திகேய முதலியார் 'பழஞ்சரித்திரச் சுருக்கம்'
1916 ஜூலை

8. ஆரியர்கள் தமிழ் அரசர்களை 'இராஜன்னியர்' என்று அழைப்பது வழக்கம். இவ்வழக்கு இருக்குவேதத்திலும் உபநிடத்துக்களிலும் உள்ளது.

- துடிசை கிழார் 'தமிழர்க்கான சில குறிப்புக்கள்'
1916 ஆகஸ்டு

9. தமிழன்னையைத் 'தமிழ் மாது' எனக் கூறப்பட்டுள்ளது.
1912 மார்ச்சு

10. மாக்ஸ் முல்லரை 'மோக்ஷமூல பட்டாசாரியர்' என்றும் (1912 மார்ச்சு)

'மோக்ஷமூலர்' என்றும் மொழி பெயர்த்துள்ளனர்.

'மோக்ஷமூலர்' - ஜே.எம். நல்லசாமி மொழிபெயர்ப்பு (1912 ஜூலை / ஆகஸ்டு)

11. இறைவன் பெயர் கொண்டவர்கள் காற்று, கடல், மிருகம் முதலிய பட்டப் பெயர் விரும்பல் தவிர்க்க - சே. சோமசுந்தரம் பிள்ளை

'சமய தருமக் கடமை' - 1912 மார்ச்சு

இது சண்ட மாருதம், ஞான சாகரம், சித்தாந்த சரபம் என்ற பட்டங்களைக் குறித்ததாகலாம்.

சித்தாந்த சரபம் - பூவை. கலியாணசுந்தரனார்.

சைவசித்தாந்த சண்ட மாருதம் - ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் இவர்களைக் குறிப்பாகக் கடிந்த உரையாயிருக்கலாம்.

12. 'சுண்ணாம்பில் சூட்சுமம்' என்ற பழமொழிக்குச் சுண்ணம் - திருநீறு; இதன் மூலம் சூட்சுமப் பொருளை உணரலாம் என்ற கருத்துக் கூறப்பட்டிருக்கிறது.

சோதியாய்ச் சுடரு மானார் சுண்ணவெண் சாந்து பூசி என்ற அப்பர் பாடலை எடுத்துக் காட்டிச் சுண்ணம் - திருநீறு என்னும் பொருள் தரப்பட்டுள்ளது. (1912 மார்ச்சு)

13. சமாஜப் பெருமக்களான சூளை சோமசுந்தர நாயகர், ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை இவர்களின் ஆங்கிலப் புலமை முன்பே அமெரிக்காவில் தெரிந்து அழைக்கப்பட்டிருப்பின் வேதாந்தம் பரப்பிய விவேகானந்த சுவாமிகளுக்கு அங்கு வேலை இருந்திருக்காது என மேற்குறித்த பெரியோர்களின் ஆங்கிலம், சைவ சித்தாந்தம் இவற்றில் அவர்கட்கு இருந்த புலமை பாராட்டப்பட்டுள்ளது. (1912 மார்ச்சு)

14. தமிழ்மொழி வடமொழியைவிடச் சிறந்தது என்பதை உயர்நீதி மன்ற நீதிபதியாய் விளங்கிய திவான்பகதூர் T. சதாசிவ ஐயர் ஒப்புக்கொண்டு தமிழை உயர்த்திப் பேசியுள்ளார்.

"வேதங்கள், தந்திரங்கள், மந்திரங்கள். . . உண்மை ஞானத்தைப் போதிப்பன அன்று; கடின ஓசையோடு இயங்கும் வடமொழியானது தமிழ் மொழியைப் போன்று அவ்வாறே மனமுருக்கும் இயல்பினதன்று. நமது உள்ளத்தை நெகிழ்விக்கும் ஆற்றல் வடமொழிக்கில்லாதது அதற்கொரு குறைவே" (1912 மார்ச்சு)

15. காஞ்சி பிரம்மஸ்ரீ வெங்கட்ராம ஐயர் தேவாரத்தின் சிறப்பை எடுத்துக் கூறுகின்றார்.

"இறந்து போன பிராமண சந்நியாசிக்குப் பின்னே வேதபாராயணம் சொல்லத் துணியும் பிராமணர் நாயன்மாருக்குப் பின்னே பாராயணம் செய்யப் பின் வாங்குவது கொடுமை! கொடுமை!" (1912 டிசம்பர்)

தேவார மூவர்க்குப் பின்னே வடமொழியை ஓதிக்கொண்டு வர மறுத்த அந்தணர்கட்குக் கூறப்பட்ட செய்தி இது.

16. பிரிட்டிஷ் அரசி, அவர் பேரன் ஜார்ஜ் சக்கரவர்த்தி, நோய் வாய்ப்பட்டிருந்த கவர்னர் ஜெனரல் இவர்கள் நலம் கருதிக் கோயில்களில் வழிபாடும் அருச்சனையும் நிகழ்த்தப் பட்டுள்ளன. சமாஜம் இதனை முன்னின்று நடத்தியுள்ளது. இரண்டாம் உலகப் போரில் பிரிட்டிஷார் வெற்றி பெறச் சிவபிரானை வேண்டிச் சமாஜம் வழிபட்டிருக்கிறது. (1916 ஜனவரி)

சித்தாந்த தீபிகை ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையால் 1897 ஆம் ஆண்டு பிரிட்டிஷ் மகாராணி விக்டோரியாவின் வைர ஜுப்லி நாளில் தொடங்கப்பட்டது; பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் விக்டோரியா மகாராணியாரின் விசுவாசம் மிக்க பிரஜைகளாகச் சைவர்கள் விளங்கியமை தெரிகிறது" எனக் கருத்துத் தெரிவிக்கிறார் இன்றைய பெருமன்றத் துணைத் தலைவர் சி.எஸ். குப்புராஜ் (சித்தாந்தம் பவள விழா இதழ், டிசம்பர் 1997).

17. 'தொழுவூர் வேலாயுதம்' எழுதிய நடை புரியாமல் அதற்கு விளக்கம் கேட்டு இதழுக்குக் கடிதம் எழுதியுள்ளார், மோ. கந்தசாமி. தொழுவூர் வேலாயுதம் எழுதுவது:

"உணர்ந்தோரானியல் வகையவின்ன வென்றவற்றிற் பின்மொழி மதிக்கு முன்மொழி மறைக்கு முதலீறு விளங்க முடிப்பதாயபின் மொழியடைசார் முன்மொழி ஞாங்கர் விளங்கிய ஞானிகட்கு, சில வினைச் சார்வான் விலங்கு சூடிய வரைவில் வெளியாம் இதனோடிரு வகைப்பட்ட வோர்சார் புதுநிலஞ் செலவுய்த்தனம். . . வேண்டுழி வேண்டியாங்குய்க்க, மற்றைய பின்னர் வரைதும் இற்றே விசும்பிற் கணைச்சலம்.

இங்ஙனம்

நங்கோச் சோழன் வீரமணிச் சூடியார்
திருவாணைப் படிக்கு அடிமை
தொழுவூர் வேலாயுதம்" (1916 டிசம்பர்)

18. சைவ உணவு உண்போர் யாவர் என உலகின் பல்வேறு நாட்டின் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. துரேனிய மலைவாசிகள், லெனிகாம்பியா மாண்டிகோ ஜாதியர், ஜப்பான், சீனா, மத்திய ஆப்பிரிக்கா, இஜிப்ட், ஸ்பெயின், இத்தாலியர், துருக்கி, அயர்லாந்து, பின்லாந்து போன்ற நாடுகளில் மரக்கறி உணவு உண்டு வாழ்கின்றனர்.

சாக்ரடீஸ், மில்டன், வேர்ட்ஸ்வொர்த், ஷெல்லி, பைரன், நியூட்டன், விவிலிய உரைகாரர்கள் புனித பால் (St.Paul), லூத்தர் போன்றோர் சைவ உணவினரே. கத்தோலிக்க சபையினரில் 73 ஞானிகள் சைவ உணவு ஏற்றவர்.

டாக்டர் நிக்கலஸ் கூறுவது: ஒரு வருடத்தில் சராசரி 2 பவுண்டு மாமிசம் ஒருவருக்குப் போதும்.

- மணவழகு, 'போஜனம்' (1914 ஜூலை)

19. தமிழில் 'அ' என்ற முதலெழுத்துப் பற்றி 50 ஆண்டுகட்கு முன்பு வைதீக சைவ சந்நியாசி ஆசிரமத்து அறிஞர் ஒருவர் 45 கேள்விகள் எழுப்பியுள்ளார். 'நாற்பத்தைந்து உசாக்கள்' என்ற தலைப்பில் அவை வெளிவந்துள்ளன.

1. வரி வரலாற்றின் இலக்கணம் என்ன?
2. ஒலி வரலாற்றின் இலக்கணம் என்ன?
3. தன்மை வரலாற்றின் இலக்கணம் என்ன?
4. உணர்ச்சி வரலாற்றின் இலக்கணம் என்ன?
5. அதன் உண்மை அனுபவ வரலாற்றின் இலக்கணம் என்ன?
6. வரிஉரு வரலாற்றின் இலக்கணம் என்ன?
7. ஒலிஉரு வரலாற்றின் இலக்கணம் என்ன?
8. தன்மைஉரு வரலாற்றின் இலக்கணம் என்ன?

இப்படிப் போகின்றன கேள்விகள். இவற்றிற்குப் பதில்களும் தரப்பட்டுள்ளன. (1914 அக்.)

20. திருமண நாளில் 'மொய்ப்பணம்' முதலியன வாங்குவது சாத்திர சம்மதம் அன்று எனக் கூறி அதற்குக் கி.பி.1422-1449இல் அரசு புரிந்த விஜயநகர கிருஷ்ண தேவராயர் II எடுத்த முயற்சி காட்டப்பட்டுள்ளது. கிருஷ்ண தேவராயர் கிராம மக்களின் மனத்தை மாற்ற முயன்றிருக்கிறார். (1916 செப்.)

21. பாம்பன் குமர குருதாச சுவாமிகள் தலைமையுரையில் 'பகவக்கீதை வங்காளத்தில் உள்ள சிலர்க்கு ஒப்பாக வில்லை; ஸ்ரீ கிருஷ்ண பகவான் சிவதீக்கையுடன் கூறிய அக்கீதை சிவபரத்துவம் போதிப்பது' எனக் கூறியுள்ளார் (1913 பிப்ரவரி)

22. சென்னை பக்கிங்காம் கர்னாடிக் பஞ்சு இயந்திர சாலையில் (பி அண்ட் சி மில்) பணிபுரியும் பணியாளரிடையில் சைவசமயக் கருத்துரைகள் சொற்பொழிவு செய்யப்பட்டன.

பணியாளர்களுக்கு அன்றைய தமிழ் 'கூலிகள்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தொழிலாளர் என்ற சொல் அப்போது நடைமுறையில் இல்லை போலும்! (1912 மார்ச்சு)

23. 'தவம்' என்பது தமிழ்ச் சொல்லே. தவு - என்ற வினையடிச் சொல்லிலிருந்து பிறப்பது. உலக இன்பங்களைக் கெடுப்பது எனப் பொருள்படுவதால் 'தவம்' என்ற சொல்-மணவழகு. (1913 ஏப்ரல்)

24. அயிர்ப்பு, ஐயம், சகடு போன்ற பல சொற்கள் 'சந்தேகம்' என்ற சொல்லுக்கு இணை என்றும் 'தமிழ்' என்ற சொல்லுக்கும் 'உலகம்' என்ற சொல்லுக்கும் சொற்பிறப்பு ஆராய்ச்சி கூறியும் ஆய்வுக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. (1914 அக்.)

25. சைவசித்தாந்த மகாசமாஜ விழாவில் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை போன்றோர் ஆங்கிலத்தில் பேசியுள்ளனர். (1912 மார்ச்சு)

26. ஆரியர்கள் தமிழ் அரசர்களை 'இராஜன்னியர்' என்று அழைப்பது வழக்கம். (1916 செப்.)

27. காரைக்கால் அம்மையார் புராணத்தில் அவர் கணவன் பரமதத்தன் பாண்டி நாட்டுப் பட்டினம் சென்று தங்கி விட்டான். அவ்வூர்ப்பெயர் பொருநையாற்றின் சங்கமத்திலுள்ள 'கனகலம்' என்கிறார் மணவழகு.

சேக்கிழார் இப்பெயரைக் குறிக்கவில்லை (1912 பிப்.)

28. பாசங்களிலிருந்து நீங்குவது பாசநீக்கம். இதுபோலப் பாசங்களோடு சேர்ந்திருத்தல் 'பாசவீக்கம்' எனப்படுகின்றது. (1912 மார்ச்சு)

29. சித்தாந்த சபைக்ளை 'ரீடிங் ரூம்' (Reading Room) என அழைத்துள்ளனர். மன்றத்துடன் நூலகமும் இருந்திருக்கலாம். அதனால் இப்படிக் குறிப்பிட்டிருக்கலாம். (1912 மார்ச்சு)

30. சமாஜ உறுப்பினர்களாகவும் நிகழ்ச்சிப் பங்கேற்பாளர் களாகவும் பெண்கள் இருந்தமை தெரிய வருகின்றது. நிறைய

பெயர்கள் காணப்படாவிடினும் அசலாம்பிகை அம்மையார், ஆண்டாள் அம்மையார், கிருஷ்ண வேணியம்மாள் போன்ற பெயர்கள் காணப்படுகின்றன.

இவர்களில் திருமதி ஆண்டாள் மகளிர் அணிச் செயலாளராக இருந்து பணியாற்றியிருக்கிறார். (1914 ஜனவரி)

திருமதி கிருஷ்ணவேணியம்மாளுக்கு 1914 மார்ச்சில் 'பண்டிதை' என்ற பட்டம் வழங்கப்பட்டிருக்கிறது.

இன்றும் சைவ சித்தாந்தப் பெருமன்ற உறுப்பினர்களாகப் பல பெண்கள் உள்ளனர். ஆண்டு விழாவில் 'சைவ சித்தாந்த மங்கையர் மாநாடு' என ஒருநாள் ஒதுக்கப்பட்டுக் கொண்டாடப்படுகின்றது.

31. சென்னை சிவனடியார் திருக்கூட்டத்தினர் சென்னைப் பூங்காவில் மின்வண்டியேறிப் பல்லாவரத்தில் இறங்கிக் குன்றத்தூர் சென்று 'சேக்கிழார் விழா' கொண்டாடியிருக்கின்றனர்.

32. அந்நாளில் சைவ சமயம் பரப்பிய மன்றங்கள் கீழ்க்காணும் ஊர்களில் இருந்தமை தெரியவருகின்றது.

சென்னை - சைதாப்பேட்டை - குன்றத்தூர்
காஞ்சிபுரம்
வேலூர்
பூவாளூர்
உத்தரமேரூர்
திருக்கோவிலூர்
தஞ்சாவூர்
விருத்தாசலம்
மாத்தளை (இலங்கை)
யாழ்ப்பாணம் (இலங்கை)

## புனைபெயர்

சித்தாந்தம் இதழ் ஆசிரியர், இன்னும் கட்டுரை எழுதியோர் முதலானோர் புனைபெயர் கொண்டிருந்தமை தெரிகின்றது.

மணவழகு - பூவை. கலியாண சுந்தர முதலியார்
களந்தைக் கிழான் - கி. குப்புசாமி

சித்தாந்தம் இதழுக்குக் கடிதம் எழுதிய ஒருவர் தம் பெயரைக் குறிக்காமல், 'ஓர் சைவன்' (1915 டிசம்பர்) எனக் குறித்திருக்கிறார்.

## என் தாத்தா

என் தாய் வழித் தாத்தா குமரகோட்ட வித்துவான் சோணாசல பாரதியார் (காஞ்சிபுரம்) அவர்கள் பற்றிய செய்தி சித்தாந்தம் இதழில் காணப்படுவதைக் குறிக்க வேண்டுவது எனக்குக் கடமையும் ஆர்வமும்.

சோணாசல பாரதியார் அவர்கள் 16 வயது வரை கல்வி கற்காதிருந்து பின் கச்சிக் குமரகோட்டம் முருகனருளால் கவி வரம் வாய்க்கப்பெற்றவர். அவர் பாடல்கள் ஒரு திரட்டாக என் தந்தையார் மகாவித்துவான் சி. அருணைவடிவேலு முதலியார் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது.

பாரதியார் வேலூரில் 1913ஆம் ஆண்டு நடந்த சமாஜ விழாவில் 'தொண்டு' என்ற தலைப்பில் பேசியிருக்கிறார்கள். ஒரு செய்தி இது பற்றிக் கூறப்படும்.

பாரதியார் பேச எழுந்தபோது தொண்டு பற்றி ¼ மணி நேரமே பேசுவார் என அறிவிக்கப்பட்டது. பேசத் தொடங்கிய பாரதியார்,

'தொண்டு செய்வது காலே தவிர அரையன்று இதை முக்காலும் சொல்வேன்' எனத் தொடங்கியதும் அவை ஆரவாரித்து அவரை ஒரு மணி நேரம் பேச ஒப்பியதாம். இச் செய்தி சித்தாந்தம் இதழில் இல்லை.

## சித்தாந்தம் பற்றிய அரிய செய்திகள்

சைவ சித்தாந்த நுண்பொருட்களை அக்காலத்திலேயே சைவ அறிஞர்கள் சித்தாந்தம் இதழ் மூலம் விளக்கி இருக்கின்றனர். அவ் வரிய விளக்கங்களில் ஒரு சில :

1. 'தானான வேதாந்தம் தானெனும் சித்தாந்தம்' என்ற திருமந்திரப் பாடலுக்கு,

தான் (ஆன்மா) அதுவான வேதாந்தம் - தானான வேதாந்தம்

தான் (ஆன்மா) உண்டு என்னும் சித்தாந்தம் - தானெனும் சித்தாந்தம்.

என விளக்கப்பட்டுள்ளது. 1912 ஜூன் பொ. முத்தையா பிள்ளை

2. 'இத்தை விளைவித்தல் மலம்'

சீதமின்மை பனியின்மை; துன்பம் இல்லை - மலமின்மை யாற் கொள்ளப்படும். 'கெடுப்பதூஉம்' என இல்பொருளை உள்பொருளாகச் சொல்லியது பொருந்தும்.

- பொ. முத்தையா பிள்ளை 1912 மே/ஜூன்

3. இருவினை ஒப்பு - (கர்ம சாம்யம்)

தராசு தட்டு - இவ்வுவமையில் நடுமுள்ளைக் காண்க. அதுபோல் இருபுறமும் சாயாது நிற்றல் இருவினை ஒப்பு.

- ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை 1912 ஜூலை / ஆகஸ்டு

4. சிவ - பஞ்சாட்சரத்தின் நடு

பஞ்சாட்சரம் - ஸ்ரீ ருத்ரத்தின் நடு

ஸ்ரீ ருத்ரம் - ஏழு காண்டங்களோடு கூடிய யஜுர் வேதத்தின் 4ஆவது காண்டம்

யஜுர் - வேத 'த்ரயி' என்பதால் இருக்கு, சாமத்திற்கு நடு.

சிவம் - பொதுச் சொல். எனவே வேதத்தில் 'பிரம்மம்' எனக் கூறப்படுவது இதுவே.

- ச.ந. வைத்தியலிங்க முதலியார்
பதிபுண்ணியம் 1912 ஜூலை / ஆகஸ்டு

5. சிவஞான போத வெண்பாவில் 'வேட்டுவனாம் அப்புழுப்போல்' என்ற தொடருக்குக் கிருமிசாஸ்திர வல்லவர் 'லப்பக்' என்பவர் ஆய்வை மேற்கோள் காட்டிச் சிவஞான சித்தியார் உரைகாரர் ஞானப்பிரகாசர் கருத்தைப் பாராட்டி எழுதியுள்ளனர்.

'குளவியின் முட்டைக்குப் புழு வெப்பம் தருகின்றது

பின் பொரிக்கப்பட்ட குளவிக்கு இரை'

பிரமாகீரிட நியாயம் பேசப்படுகிறது - மா.ஜீ. 1915 ஆகஸ்டு

6. பிரமசூத்திர உரைகாரர்கள்

கிருஷ்ணதுவையாயனர் என்னும் வியாசர் இயற்றிய பிரமசூத்திரத்திற்கு முதலில் ஏற்பட்ட வியாக்கியானம்.

1. போதாயன முனிவர் - போதாயன விருத்தி
2. பாஸ்கரியம் - இது வைஷ்ணவாத்துவிதம்
3. நீலகண்ட சிவாசாரியார் - சிவாத்துவிதம்
4. ஸ்ரீ சங்கராசாரியார் - கேவலாத்துவிதம்
5. யாதவப் பிரகாசர் - யாதவியம் - அத்துவிதபரம்
6. ஸ்ரீ ராமானுஜாசாரியார் - வைஷ்ணவபரம்
7. ஆனந்த தீர்த்தர் - துவைதபரம்
8. வல்லபாசாரியார்
9. ஸ்ரீ சோமநாதாராத்திரியர் - வீரசைவம்

ஸ்ரீ ஆனந்ததீர்த்தர் சரித்திரத்தில் இவர் 21-பாஷ்யங்களைக் கண்டித்ததாகத் தெரிகின்றது.

- மணவழகு, 'வியாசசூத்திர விசாரம்' 1914 ஜூன்

## இதழ் நடை

அக்கால இதழ்களின் போக்கிற்கு ஏற்பவே சித்தாந்தம் இதழும் ஆங்கிலம், வடமொழிக் கலப்போடு கூடிய தமிழ் நடையைக் கொண்டுள்ளது. ஆயினும் சில தூய தமிழ்ச் சொற்களும் காணப்படுகின்றன.

ஸ்ரீமான், ஸ்ரீமந் என்ற பெயர் அடைகள் பல்கிக் காணப்படினும், J.M. நல்லசாமிப் பிள்ளைக்குத் 'திருமறைத் திருவன்' என்ற பட்டம் தரப்பட்டிருக்கிறது. (1914 - ஜனவரி) இதுபோல முடிவுரை, திரட்டுரை என்ற சொற்களைக் காணமுடிகின்றது.

அச்சு விமானத் தேற்றல் - (அச்சேற்றல்)

ஆங்கிலேயத்தில் (ஆங்கிலத்தில்)

சார்வாக (சார்பாக)

புகைரதம் (புகைவண்டி)

வாதசபை (பட்டிமன்றம்)

பாலியர் (இளைஞர்)

வேதனம் கொடுத்தல் (வேதனம் - கூலி)

மேதாவி (அறிஞர்)

பிரசங்கித்தார் (சொற்பொழிவு ஆற்றினார்)

திநேதிநே (நாற்தோறும்)

ஈஸ்வரன் (ஈஸ்வரன்)

தனியாக வச்சிட்டு (தனியாக அச்சிட்டு)

(உடம்படு மெய்யோடு)

இவ்வாறு சொற்கள் காணப்படுகின்றன.

வங்காளம் - பங்காளம்

சித்தூர் - சிற்றூர்

கிண்டி - கெண்டி, கண்டி

திருக்கோவிலூர் - கோவல்

குன்றக்குடி - குன்றாக்குடி

பரங்கிமலை - பிருங்கிமலை

இவ்வாறு ஊர்ப் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

இதழில் காணப்படும் பிழைகள் அச்சுப் பிழை எனக் கொள்ளலாம். இவற்றைக் களைந்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்.

சொர்க்கள் - சொற்கள் மகேசுரபூஜை - மாகேசுவரபூஜை

இந்நிசை - இன்னிசை மாகேசுரபூஜை - மாகேசுவரபூஜை

தர்க்ககாலம் - தற்காலம் தமிழ் கல்வி - தமிழ்க்கல்வி

காஞ்சிபுராணம் - காஞ்சிப் புராணம்

## பவள விழா – சித்தாந்தம்

அச்சு வசதி, நிதி வளம், வாசகர் விருப்பம் எனப் பல வளர்ச்சி நிலையுள்ள இக்காலத்தில் தோன்றிய பல இதழ்கள் குறைந்த ஆயுளில் நின்று போயுள்ளன.

தினமணி கதிர் - இப்போது இலவச இணைப்பு
சாவி - இடையில் நின்று இப்போது வருகின்றது.
அன்னம் விடுதூது
திசைகள்
மயன்
அஸ்வினி

தீம்தரிகிட எனப் பல இதழ்கள் இதழுலகில் ஆழ்ந்த தடம் பதிக்க இயலாது போயின. இந்நிலையில் இடையில் 6 ஆண்டுக் காலம் நின்று போக நேர்ந்தாலும் மீண்டும் புத்துயிர் ஊட்டப்பெற்று இரண்டாம் பிறவி எடுத்து 1928ஆம் ஆண்டு முதல் இன்றுவரை வெளிவந்து பவளவிழாவைக் கண்டு பீடுநடை போடும் சித்தாந்தம் இதழ், இதழுலகின் ஒரு சாதனை இதழ் எனக் கூறலாம்.

ஏனெனில் ஒரு சமயம் சார்ந்து - தத்துவம் - அறம் - திருக்கோயில் - பக்தி என்ற நுண்பொருட்களை மட்டுமே விளக்கி மக்களிடையே செல்வாக்குப் பெறுவது இதழியலில் இயலாத ஒன்று. வணிக நோக்குத்துறையில் வாழ்வியல் தத்துவமான சைவ சித்தாந்தம் பரப்பும் நோக்கில் தோன்றிய சித்தாந்தம் இதழ் தனித்துப் பாராட்டப்பட வேண்டிய ஒன்று.

இவ் இதழின் இன்றைய வெற்றிக்கு உரமிட்ட அனைத்துப் பெருமக்களையும் வணங்கிக் கொள்வது இக்கட்டுரையின் கடமையாகின்றது. 1997ஆம் ஆண்டு முழுவதும் வெளிவந்த இதழ்களில் சித்தாந்தம் இதழ் வரலாற்றைக் 'கடந்த அறுபத்தொன்பது ஆண்டுகளில்' என்ற தலைப்பில் எழுதிப் பதியவைத்த பெருமன்றத் துணைத் தலைவர் சி.எஸ். குப்புராஜ் பி.இ. அவர்களை இக்கட்டுரை நிறைவில் நன்றியோடு நெஞ்சில் நிறுத்துகின்றேன்.

# குமரன்

**1923** பழ. அதியமான்

*நாத்திகரோ என்று பின்னாளில் மயங்குகிற அளவிற்கு, தந்தை பெரியாரின் சுயமரியாதைப் பிரசாரத்தைச் செய்த சொ. முருகப்பா (1893-1956) ஒரு தீவிர சைவராகவே 'குமரன்' இதழ்களில் காணக் கிடைக்கிறார். தம் இதழுக்குக் குமரன் எனச் சைவக் கடவுளான முருகனின் பெயரையே வைக்கிறார். 'ஆலயந் தொழுவது சாலவும் நன்று', "திரைகட லோடியும் திரவியம் தேடு", "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் இம்மூன்று சொல் - தொடர்களையே முகப்பு வாக்கியங்களாக (Logo)க் குமரன் கொண்டிருந்தது. திரை கடலோடித் திரவியம் தேடும் செட்டிமார்களின் நலன்களுக்காக, இதழியல் பணியைச் செய்யத் தொடங்கிய முருகப்பா, ஆலயந் தொழும் ஆத்திகராகவே குமரன் இதழ் வழி அறியப்படுகிறார்.*

*திராவிட இயக்கத்தவரின் வலுவான பார்ப்பன எதிர்ப்பு பிரசாரத்திற்கு முன்பாக, இடதுசாரிகளின் பலமான வர்க்கப் பிரசாரத்திற்கு முன்பாக, தமிழகம் சாதீய நிதியாக உணரப்பட்டு வர்ணாசிரமக் கட்டுக்குள் வர்ணங்களாகவே இருந்ததை நாம் ஒப்புக் கொண்டாக வேண்டும்.*

*நால்வகை வருணங்களுள், வைசியப் பிரிவினர் பொருளாதார நிலையில் மேம்பட்ட இடத்தை வகித்தனர். எனினும் பார்ப்பனர்களுக்குக் கீழேயே சமூக அடுக்கில் வைக்கப்பட்டிருந்தனர். ஆங்கிலக் கல்வி தந்த விழிப்புணர்வு, அவர்களிடையே புதிய கிளர்ச்சியை ஊட்டியிருக்க வேண்டும். பொருளாதார நிலையில் மற்றவர்களுக்கு மேம்பட்டும், உதவக் கூடியதுமான நிலையில் உள்ள நாம் ஏன் பார்ப்பனர்களுக்கு அடிமையாக அல்லது அவர்களை நம்பி இருக்கவேண்டும்? எனவே அறிவு ரீதியில் தங்களை வளர்த்துக் கொள்ளும் பட்சத்தில் அவர்களுக்கு மேம்பட்டோ அல்லது அவர்களின் பிடியிலிருந்து விடுபட்டோ இயங்க முடியும் எனக் கருதியிருக்க வேண்டும். இந்த நிலைக்குத் தங்களை உயர்த்திக் கொள்ள அவர்களுக்கு ஓர் ஊடகம் தேவைப்பட்டது. அதற்கு அன்றைய*

ஆயுதமான இதழை அவர்கள் கையில் எடுத்தார்கள். தங்கள் சமூகத்தினருக்கு அறிவூட்டவும், தங்கள் இனத்தில் ஏற்பட்டுள்ள துர் ஆசாரங்களைக் களைந்து திருத்தம் செய்யவும், அதன் மூலம் தங்கள் பொருளாதார நிலையை ஸ்திரப்படுத்திக் கொள்ளவும், வேறு நாடுகளில் பரவியுள்ள தம் இனத்தவரைச் சாதிக் கட்டுக்குள்ளேயே தக்க வைக்கவும், அதன் மூலம் பொருளாதார வலுவை இழக்காதிருக்கவும், தங்கள் மதத்தைக் கட்டிக் காக்கவும், அந்த இதழ்களை அவர்கள் பயன்படுத்திக் கொண்டனர்.

இப்போது சொன்ன இந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்ய 1920களில் தோன்றிய இதழ்களே தன வைசிய ஊழியனும் குமரனும் ஆகும். ஊழியனைத் தொடங்கி, பின் சில காலம் சென்று குமரனை, 1923 இல் சொ. முருகப்பா தொடங்குகிறார். இவ்விதழ் 1944 வரை நடந்ததாகத் தெரிகிறது. குமரன், மெல்ல வளர்ச்சியைப் பெற்று முன்னேறி வந்திருப்பதாகத் தெரிகிறது. வளர்ச்சியின் குறியீடாகக் குமரன் பத்திரிகை லிமிடெட் கம்பெனியாக (5.8.26) மாறியதாகவும் தெரிகிறது.

வெளியிடுபவராகவும், ஆசிரியராகவும் தம்மை அறிவித்துக் கொண்ட சொ. முருகப்பா, குமரனைச் செட்டிமார்களின் கேந்திர ஸ்தலமான காரைக்குடியிலிருந்தே வெளியிட்டு வந்தார். இன்றைய தினமணியின் அளவு கொண்ட எட்டுப் பக்கங்களைக் கொண்ட வார இதழாக ஓராண்டு வரை வந்தது. பின்னர் 12 பக்கங்களைக் கொண்டதாக வளர்ச்சி பெற்றது. ஓராண்டிற்குப் பிறகு, தினமணியின் ஒரு தாளைச் சரி பாதியாக மடிக்கப்பட்ட அளவில் கட்டடம் செய்து வைத்துக் கொள்ளுவதற்கு ஏற்ற வகையில் தொடர்ந்து வெளிவந்தது. ஆண்டுக் கணக்கை ஆரம் என்றும் இதழ் கணக்கை முத்து என்றும் சொல்லிக் கொண்டது. முதல் இரண்டு ஆண்டுகளில் புதன் கிழமை தோறும் வெளிவந்த குமரன் பிறகு வியாழன் தோறும் வெளிவந்தது.

குமரன் மாதப் பதிப்புகளையும் இலக்கிய மலர் போல வெளியிட்டுள்ளது.

குமரனின் முதல் மூன்று ஆண்டுகள் மட்டும் ஆய்வுக்குக் கொள்ளப்படுகின்றன. 1923 (10.10.1923) இலிருந்து 1926 (12.08.1926) வரையிலான காலத்தில் வெளிவந்த குமரன் இதழ்களைக் கொண்டு மட்டும் இக்குறிப்புகள் தரப்படுகின்றன.

முதல் பக்கத்தில் ஒரு இலக்கியம் அல்லது சமூகக் கட்டுரையும், இரண்டாவது பக்கத்தில் செய்திக் கட்டுரையும் மூன்றாவது பக்கத்தில் சமயம் அல்லது செய்திக் கட்டுரையும் நான்காவது பக்கத்தில் தலையங்கமும், ஐந்தாவது பக்கத்தில் வெளிநாடு வாழ் செட்டிமார் (அ) அவர்களுக்கான செய்திகளும், ஆறாவது பக்கத்தில் செய்தித் திரட்டு, செட்டிநாட்டுச் செய்திகளும், கடைத்தெரு என்ற பகுதியில் லண்டன், சென்னை, பம்பாய், உள்ளூர் தலங்களில் தங்கம், வெள்ளி ஆகியவற்றின் விலை விவரங்களும், கப்பற் செய்தி என்ற தலைப்பில் செட்டிமார் வாழும் வெளிநாடுகளுக்குச் செல்லும் கப்பலின் நேரங்களும், ஏழாவது பக்கத்தில் 'குட்டிச் சாத்தான்' என்ற பெயரில் சமூகக் கண்ணோட்டக் குறிப்புகளும், மனோரஞ்சிதம் என்ற பெயரில் சமூக நிகழ்வுகள் பற்றிய விருப்பங்களும் விமர்சனங்களும் இடம்பெறுவது வழக்கமாக இருந்தது.

கடைசிப் பக்கத்தில், அந்தக் கால வழக்கப்படி விளம்பரங்கள் இடம் பெற்றிருந்தன. குமரனின் கதர்க்கடை விளம்பரமும், குமரன் வார/மாதப்பதிப்பு விளம்பரங்களும் வெளியாகி இருந்தன. பெரும்பான்மையான இதழ்களில் இம்முறையே பின்பற்றப் பட்டிருந்தது. சிலபோது மாறுவது உண்டு. 23.7.24 லிருந்து 12 பக்கங்களாகக் கூடுதலானபோது, கூழையரங்கன் என்ற நாவல் தொடரும், சமயம் பற்றிய செய்திகளும் அப்பக்கங்களை அடைத்தன. இந்த வழக்கத்தையொட்டியே இதழ் வெளிவந்தாலும், 1925ஆம் ஆண்டு சில சிறப்பு அனுபந்தங்கள் (செட்டிமார்களுக்கு மட்டும்) வெளியாகி உள்ளன.

மேலே கண்ட பொருள் அடக்கத்திலிருந்தே, இப்பத்திரிகையில் செய்திகளுக்கே முக்கியத்துவம் என அறிந்திருப்போம். எனினும் இலக்கியங்களை, குறிப்பாக சைவ இலக்கியங்களை வெளியிடுவதில் ஆர்வம் காட்டியிருக்கிறார்கள். நவீனம் என்ற நிலையில் கூழைரங்கன் நாவலைக் குறிப்பிடலாம்.

குமரன் இதழில் கட்டுரை எழுதியவர்களாக, சொ. முருகப்பா, அரு. சோமசுந்தரம், தியாகராஜன், பி.ஸ்ரீ., மற்றும் சில செட்டிமார் களைக் குறிப்பிடலாம். வாகீசபக்தன், அஞ்சா நெஞ்சன், குட்டிச்சாத்தான், கண்ணன் என்ற புனைப் பெயர்களிலும்(?) கடிதங்கள், கட்டுரைகள், குறிப்புகள் வெளியாகியுள்ளன.

'வாகீச பக்தன்' என்ற பெயரில் இலக்கியம் அதிலும் குறிப்பாகச் சைவ இலக்கியம் குறித்த கட்டுரைகளும், 'அஞ்சா நெஞ்சன்,' 'குட்டிச் சாத்தான்' என்ற பெயர்களில் சமூக சீர்திருத்தம், கோயில் சீர்திருத்தம் முதலிய தலைப்பிலான கட்டுரைகளும், குறிப்புகளும் வெளியாகியுள்ளன.

உண்மையில், 'குடியரசு' இதழ் எடுத்துக்கொண்ட பாணியை எதிர்ப்பிரசாரம் என்றால், குமரனின் பாணி நேர் அணுகல்முறை எனச் சொல்லலாம். எதிரியைப் பலவீனப்படுத்தும் முறையை விடவும், தன்னைப் பலப்படுத்திக் கொள்ளும் முறையையே குமரன் கைக்கொண்டது எனலாம்.

. . .துயர் நீக்கிக் கிருதயுகந்
தனை யுலகி லிசைக்க வல்ல
புத்தமுதாம் ஹிந்துமதம் பெருமைதனைப்
பாரறிய புகட்டும் வண்ணம்

. . . . .
உத்தமராந் தன வணிகர் குலத்துதித்த
இளைஞர் பலர் ஊக்கமிக்கார்.
- (9.11.1919, பாரதியார் கவிதைகள்,
பக்.537, தஞ்சைத் த.ப. பதிப்பு)

என்று மகாகவி பாரதியார் குறிப்பிட்ட இளைஞருள் சொ. முருகப்பாவும் ஒருவர். காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்க உறுப்பினரான முருகப்பா, சைவத்தை ஹிந்து மதத்தின் உறுதி மிக்க வேர் என நினைத்தார்.

'சைவமும் தமிழும் தழைத் தோங்குக' என்ற சைவத் தமிழ் நெறியே குமரனின் இலக்கிய நெறியாகும். சைவ இலக்கியங்களைப் பரப்புவதையும், சைவக் கருத்துகளைப் பரப்புவதையும், சைவக் கோயில்களைப் பராமரிப்பு செய்வதையும், சைவ மடங்களைப் போற்றுவதையும் குமரன் தன் கடமையாக எண்ணிச் செயல்பட்டது.

இந்து மதத்தின் ஒரு கூறாகவே சைவத்தைக் குமரன் நினைத்தது. வடநாட்டு இந்துக்களின் பழக்கமான பசுவதை கூடாது, நோயுற்ற, வயதான பசுக்களைப் பாதுகாக்க - பரிபாலிக்க உதவும் சங்கங்களை நடத்தவேண்டும் எனக் குமரன் பலவிடங்களில் வலியுறுத்தியது.

'எவ்விடத்தும் கொலை தீது' என்ற உயிர்க் கொலை மறுப்புக் கோட்பாட்டை முன்னிறுத்தி ஜீவ காருண்யத்தைப் பலமாகக் குமரன் வலியுறுத்தியது. வேள்வி, சடங்கு, பலியிடுதல், உணவு என இப்படி எதற்காகவும் உயிர்க்கொலை கூடாது என்பதில் குமரன் உறுதியாகவிருந்தது. இவ்வகையில் உயிர்ப்பலி கூடாது என இந்து மதத்தின் பல சடங்குகளையும் குமரன் விமர்சித்தது. இது வேள்வி இயற்றும் பார்ப்பனர்களுக்கு எதிராகச் செய்யப்பட்ட பிரசாரம் என்பதைப் போல ஒரு எதிர்வினை கிளம்பியது. அதனை வெளியிட்ட குமரன், அதற்குப் பதிலும் எழுதியது.

"நாம் பிராமணர்களையாவது, அவர்களுடைய வேதத்தை யாவது, யாகத்தையாவது, பிறவற்றையாவது தள்ளுபடி செய்ய வேண்டுமென்று கூறியிருக்கவில்லை. எதிலும் உயிர்க்கொலை வேண்டாம் என்பதே எமது வேண்டுகோள்" (7.5.1924 குமரன்) என்று பதில் எழுதியது.

உயிர்க்கொலை, உணவுக்காகவும் உடல் வலுவுக்காவும்தான் நடக்கிறது என்ற வாதத்தையும் குமரன் ஏற்றுக் கொள்ளவில்லை. சைவமே தம் இனத்தவரின் பழைமை உணவுமுறை என்றும் குமரன் நினைத்தது. இவ்வடிப்படையில் உப்புக்கண்டம் ஏற்றுமதியாவதைக் கிண்டல் செய்து குமரன் எழுதியது. சைவச் சமையலை ஆதரித்தும் இயற்கை உணவைப் பரிந்துரைத்தும் பல கட்டுரைகளைக் குமரன் வெளியிட்டுள்ளது.

மதத்தை நவீன காலத்திற்கேற்ப நவீனப்படுத்தக் குமரன் நினைக்கிறது. அதையொட்டியே, சந்நியாசிகளுக்குக் கல்வி வேண்டும் என்று வலியுறுத்தியது. பழைய மடங்களை, நவீனத்திற்கு ஏற்றாற் போல் மாற்றுவதே நடைபெறவேண்டும். தவிர புதிய மடங்கள் வேண்டாம். புதுச் சமாதிகள் வேண்டாம். காவியுடை தரித்து ஏமாற்றும் கபட சந்நியாசிகள், பணம் ஒன்றே குறிக்கோளாய்க் கொண்டு புதுமடம் கட்ட வருவோரை மறுதலிக்க வேண்டும் என குமரன் எழுதியது.

தன் பண்பாட்டின்மேல் கவலை கொண்டு, அதைக் காப்பாற்றும் முயற்சியில் இறங்கிய குமரன், ஆங்கிலக் கல்வியின் வாயிலாக, மக்களிடையே பரவிய கிறித்துவமத ஆதிக்கத்தை எதிர்கொண்டது. பாப்ளி பாதிரியார் என்பவர் கிறிஸ்தவ மத ஐக்கிய இளைஞர்கள் சங்கம் என்ற பெயரில் இந்து இளைஞர்களையும்

பயன்படுத்தியதைக் குமரன் கண்டித்தது. ஆனால் அதேசமயம், தங்களது பொருளாதாரத்தை ஸ்திரப்படுத்தத் தேவைப்பட்ட ஆங்கில அதிகார வர்க்கத்தின் அணைப்பையும் எந்த விதத்திலும் விட்டுக் கொடுக்கவில்லை. அதைத் தக்கவைத்துக்கொண்டே இப்பிரச்சினையையும் குமரன் எதிர்கொண்டது.

செட்டிநாட்டுக்கு இருப்புப் பாதை கொண்டுவர அரசாங்கத்தின் உதவி, அவர்களுக்குத் தேவையாக இருந்தது. அரசாங்கத்தின் ஆதரவைப் பெற, அண்ணாமலைச் செட்டியாரைப் பயன்படுத்தினர். ஆளுநரைச் செட்டி நாட்டுக்கே அழைத்து விருந்து வைத்துக் கௌரவித்தனர். இப்படி பொருளாதார நிலைப்புக்கு அரசாங்கத்தைப் பயன் கொண்டனர். அதே சமயம் அவ்வரசாங்கச் செயல்பாட்டின் விளைபயன்களுள் ஒன்றான கிறித்தவ மதப் பரவலையும் எதிர்த்தனர்.

எவ்வாறு உயர்த்தலாம்? என்ற தலைப்பிடப்பட்ட 23.1.1924ஆம் தேதிய முதல் பக்கக் கட்டுரை, தாழ்வு பெற்றுள்ள வகுப்பாரை எவ்வாறு உயர்த்தலாம் என்று யோசனை சொல்லும் கட்டுரையாகும்.

> பள்ளர், பறையர், சக்கிலியர், நாவிதர், குறவர், தீயர் முதலிய வகுப்பார்களை உயர்த்த, அவர்கள்பால் அறியாமை காரணமாக நிகழும் பல தீய பழக்கங்களை 'அறிவுச்சுடர் கொளுத்தி' மாற்ற முற்படுதல் வேண்டும். அவர்களைப் பெரிதும் புறக்கணித்து இழிவு படுத்துதலாலேயே அவர்களில் பெரும்பாலோர் நாள்தோறும் கிறிஸ்தவர்களாகி விடுகின்றார்கள். (23.1.1924, குமரன்)

என்கிறார் கட்டுரை ஆசிரியர். இதிலிருந்து தலித் மக்களின் உயர்விற்கு ஏங்கும் ஏக்கம்கூட இந்து மதத்தைக் கட்டிக் காக்கும் நோக்கத்தில், மதமாற்றத்தைத் தடுக்கும் செயலாகவே சுருங்கி விடுகிறது. இங்கே விவேகானந்தரின் குரலைக் கேட்கமுடியும். மேலும் அவர்களுக்கு அறிவு கொளுத்துவதன் மூலம், அவர்களின் தீய பழக்கங்கள் மாற்றப் படும் என்பதன் மூலம், வர்ணாசிரமக் கட்டுக்குள்ளேயே அவர்களைக் குளிப்பாட்டி வைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் இருப்பதை உணர முடிகிறது.

அடுத்து 'சைவமும் தமிழும் தழைத்தோங்குக' என இலக்கிய நெறியில் இரண்டாம் பகுதியில் இலங்கும் தமிழைத் தழைக்க வைக்க வலுவான குரலைக் குமரன் எழுப்பியது.

தமிழை எப்படி வளர்ப்பது? என்ற முதல் பக்க கட்டுரையின் செறிவும், தமிழ்க் கலாசாலைகள் நாடு முழுவதும் வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தது (இங்கே, குமரனுக்கு நாடு, நகர் எல்லாம் செட்டிநாடுதான்). தமிழ்ப் பல்கலைக்கழகம் வேண்டும் என்பதில் உறுதியாக இருந்ததும் குமரனின் தமிழ்ப் பணிகளுக்குச் சான்றுரைப்பனவாகும்.

சைவப் பெரியாராக, குமரன் போற்றிய, திரு.வி.க. அவர்கள் காங்கிரஸ் தலைவராகத் தெரிந்தெடுக்கப் பெற்றுத் தலைமைச் சொற்பொழிவாற்றினார். அச்சொற்பொழிவை முழுமையாக வெளியிட்டு மகிழ்ந்தது குமரன். ஆனால், டாக்டர் வரதராஜிலு நாயுடுவின் 'தமிழ்நாடு' அச்சொற்பொழிவைப் பண்டிதர்களுக்குப் புரியாத கடுந்தமிழ் என்ற சாடியது; இதனைக் குமரன் வெகுவாகக் கண்டித்தது.

> வட நாட்டில் சிறந்த தேசாபிமானிகளாக விளங்குபவர் முழுமையும் தாய்மொழியில் வல்லுநராகவே, பண்டிதராகவே இருப்பதைக் காண்கிறோம். இங்குள்ளவர்தாம் தமிழின் பெருமையை அறியாமல் போனதுடன் சிறந்த தமிழ்நடை எழுதுதலையும் புறக்கணிக்கின்றனர், கேலி செய்கின்றனர் (9.12.1925 குமரன்)

என்று தாய்மொழியின் நிலையை எடுத்துக்காட்டி வருந்துகிறது குமரன்.

செட்டிமார்களின் வாழ்வில் காணும் பிரச்சினைகளைத் தீர்ப்பதும், அவர்களை அறிவிலும், பொருளதார நிலையிலும் உயர்த்துவதும் ஆன கொள்கையுடன் உலா வந்த குமரன் நாம் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட முதல் மூன்று ஆண்டுகளில் ஒவ்வொரு விஷயத்தையும் கூர்மைப்படுத்திப் பேசி வந்திருப்பது தெரியவருகிறது.

நாம் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட முதல் மூன்று ஆண்டுகளில் ஒவ்வொரு ஆண்டும் ஒரு பிரச்னை என மூன்று பிரச்சினைகள் முன்னின்றன.

செட்டிமார்களின் நலன் கருதியே தொடங்கப்பட்ட இதழ், செட்டிமார்களின் குறிப்பாக இளைஞர்களின் நலன் குறித்தும், அவர்களின் சமூக வாழ்க்கையில் கால ஓட்டத்தில் புகுந்துவிட்ட பல புதிய மோசமான வழக்கங்கள் குறித்தும் அதிக கவனம் செலுத்தியது.

செட்டிமார்களின் பொதுவாழ்க்கையின் உயிராகக் கருதப்பட்ட நாணயத்தைக் காப்பாற்றுதல், அவர்களிடையே காணப்பெற்ற பெண் விலைப்பணம், திருப்பூட்டுதல், திருமணச் சடங்குகளில் அதிக செலவு போன்றவற்றில் குமரன் மிகுந்த கவனம் செலுத்தியது. 96 ஊர்க் கூட்டம் கூடி, கலந்து பேசி, சமூக நிகழ்வுகளை நடத்தவேண்டிய முறை பற்றி முடிவெடுத்துச் செயல்படுத்துவது அவர்களிடம் தொன்றுதொட்டு வந்த வழக்கமாகும். இவ்வகைக் கட்டுப்பாடு, சாதிக் கட்டமைப்பை வலுப்படுத்தும். தனிமனிதர்களின் பணச்செல்வாக்கு சமூகத்தில் குறைந்து, சமூக நல்லிணக்கம் இதனால் ஏற்படும். இக்கூட்டம் தேவையின் அடிப்படையில் ஆண்டுக்கு ஒரு முறையோ தேவைப்படும் சமயத்திலோ நடைபெறும் எனத் தெரிகிறது. பல காலமாகக் கூடாமல் இருந்த இக்கூட்டத்தைக் கூட்டி சமூக ஒழுங்கை வரையறுக்க வேண்டும் என முருகப்பா விரும்பினார். தாம் இதழ் தொடங்கியதிலிருந்தே, ஒவ்வொரு இதழிலும் இக்கூட்டத்தின் தேவை, இக்கூட்டமின்மையால் ஏற்படும் இடர்கள், இக்கூட்டத்தைக் கூட்ட வேண்டிய முறை, இப்படி பலவாறான கருத்துக்களைத் தொடர்ந்து எழுதிவந்தார். இக்கூட்டத்தினர் எழுதிய, எழுத்துகளே முதலாண்டுக்கு உரியன.

இரண்டாவது ஆண்டில், மிக முக்கியமாய் வடிவம் பெற்றது. சேரன்மாதேவி குருகுலம் பிரச்சினை. தமிழ்நாட்டையே ஒரு குலுக்குக் குலுக்கி இன்றைக்கு வரை, பார்ப்பனர் - பார்ப்பனரல்லாதவர் பிரச்சினையில் ஒரு நினைவுக் குறிப்பாய்த் தொடரும் பிரச்சினை இதுதான்.

முதலில் கல்லிடைக் குறிச்சியில் தொடங்கப்பட்டு, சேரன் மாதேவிக்கு மாற்றப்பட்ட குருகுலம் வ.வே.சு. ஐயரால் தொடங்கப் பட்டதாகும். பாரத்வாஜ ஆசிரமம் என்ற பெயரில் தொடங்கப்பட்ட ஆசிரமத்தில் இக்குருகுலம் இயங்கி வந்தது. இதில் பார்ப்பனர் மற்றும் அல்லாதாரும் சேர்ந்து படித்தனர். அவர்கள் உணவருந்தும்போது தனித்தனி பந்திகளில் உட்கார்ந்து உணவருந்துமாறு ஏற்பாடு இருந்தது. இதைக் கண்ணுற்ற 'தமிழ்நாடு' பத்திரிகை ஆசிரியரும், காங்கிரஸ் தலைவர்களுள் ஒருவருமான டாக்டர் வரதராஜிலு நாயுடு அவர்கள் இம்முறையைக் கண்டித்தார். சமத்துவத்தை விரும்புகிற வ.வே.சு.ஐயர் இப்படிச் செய்வது தவறு என்று தன் பத்திரிகையில் எழுதினார். குமரன் இதழும், நேரில் சென்று ஆசிரம நடைமுறையைப் பார்வையிட்டு, இப்பாரபட்ச முறையைக் கண்டித்து எழுதியது.

ஊழியன் உள்பட பல பத்திரிகைகளும் இச்செய்தியை வெளியிட்டன. வ.வே.சு. ஐயர் முதலில், அமைதியைக் கடைப்பிடித்து பிரச்சினையைச் சாகடிக்க முயன்றார். அதில் அவர் தோற்றார். பிரச்சினை மேலும் மேலும் பெரிதானது. குமரன் இதழிலும், அவரே நடத்தி வந்த 'பாலபாரதி'யிலும் இப்பிரச்சினையைப் பற்றி எழுதினார். ஆசிரமத்து மாணவர்களும், அவர்களது பெற்றோர்களும் விரும்பாத ஒன்றை, அவர்கள்மேல் திணிக்க முடியாது என்று ----- வேதமறிந்த சாஸ்திரிகளின் ---- பின்னர், திருமணமாகாத பார்ப்பன இளைஞர்கள் - அவர்கள் விரும்பினால் - ஒன்றாக அமர்ந்து சாப்பிடலாம் என்றும் எழுதினார். எந்த நிலையிலும் பந்தி நடந்தால் அது அனைவரும் அமர்ந்துண்ணும் ஒரே பந்தியாகவே நடக்க வேண்டும் என்பதில் குமரன் உறுதியாக நின்றது. வேறு வழியில்லாமல் பெல்காம் காங்கிரஸ் மாநாட்டிற்குப் பிறகு மகாத்மாவின் பஞ்சாயத்துப்படி ஏற்பாடு செய்யலாம் என்று ஒரு முடிவுக்கு எல்லாரும் வந்தனர். அந்த நாளும் வந்தது, மகாத்மாவும் ஆலோசனை வழங்கினார். மகாத்மாவின் பஞ்சாயத்தாகக் குமரன் தெரிவிப்பதும், பாலபாரதி தெரிவிப்பதும் வெவ்வேறாக இருக்கின்றன. எனினும், ஒரே பந்தியைக் குருகுலம் நடத்தவேயில்லை. குருகுலத்தின் மற்றொரு ஆசாரியரான மகாதேவ ஐயர், செட்டியார்கள் வாழும் மலேயா முதலிய நாடுகளுக்குச் சென்று குருகுலத்திற்கு நிதி திரட்டினார். ஆங்காங்கே உள்ள செட்டியார் பிரதிநிதிகளும் முன்னின்று பணம் பெற்றுக் குருகுலத்திற்கு உதவி வந்தனர். குருகுலத்தின் இந்த நடவடிக்கையால் வெறுப்புற்றிருந்த செட்டிமார், இப்பிரச்சினைக்கு ஒரு முடிவு தெரியாமல் வசூலித்த பணத்தைத் தர முடியாது என்று தெரிவித்து விட்டனர். எனினும், பணம் இல்லாமல் நான் கிளம்ப மாட்டேன் என்று ஒரு செட்டியார் கடை கல்லா அருகில் உட்கார்ந்து சத்யாக்கிரகம் (?) செய்து சிறிது பணத்துடன் மகாதேவ ஐயர் தன் பயணத்தைத் தொடர்ந்தார். இச்செயலும் குமரனில் வன்மையாகக் கண்டிக்கப்பட்டது. இதற்கிடையில் வ.வே.சு. ஐயர் குற்றால அருவியில் விழுந்த தன் மகள் சுபத்ராவைக் காப்பாற்ற முயன்றதில் தோல்வி --- இறந்தார். இவ்விறப்பிற்குப் பிறகான --- உதவவில்லை என்ற குறிப்பும் குமரனில் கிடைக்கிறது. வ.வே.சு. ஐயரின் மறைவிற்குப் பிறகும் அதே நிலை தொடர்ந்ததால், ஆசிரமத்தை வயிசு. சண்முகம் செட்டியார் தலைமையிலான பிராமணரல்லாதார் குழு கைப்பற்றத் தீர்மானம் செய்தது. இவை குருகுலப் போர் என வர்ணிக்கப்பட்ட நிகழ்வில் சில சம்பவங்களாகும். இச்சம்பவங்களுக்குப் பின்னால் இருந்த

உணர்ச்சி, பிராமணல்லாதார் அனைவரையும் (வயிசு, பெரியார், டாக்டர் வரதராஜிலு நாயுடு) ஒன்றாக்கியது எனச் சொல்லலாம். இக்காலகட்டத்தைக் குமரன், சமூகத் தளத்தில் மிக வேகமாக இயங்கிவந்த கட்டமாகக் குறிப்பிடலாம். குருகுலப் பிரச்சினை என்பது பொதுப் பிரச்சினை யென்றாலும், இக்குருகுலத்தில் கல்வி பயின்றவர் சிலரும், குருகுலம் இயங்க நிதி அளித்தவர்களில் பெரும்பான்மையானவர்களும் செட்டிமார் என்பது கவனிக்கத் தக்கது.

குருகுலம் பிரச்னையில் குமரனில், சொ. முருகப்பா, வ.வே.சு.ஐயர், வயிசு ஆகியோர் தங்கள் கருத்துகளை எழுதினர். இப்பிரச்னையில் குமரனின் நிலை, பார்ப்பனரல்லாதார் சார்பாகவும், சமூக நீதிக்குச் சார்பாகவும் இருந்தது. இது குமரனின் உறுதியையும் முருகப்பாவின் அஞ்சா நெஞ்சினையும் காட்டுவதாகும். குமரன் இதழை நாம் இன்றும் நாளையும் நினைப்பதற்கும் பேசுவதற்கும் இது ஒன்றையே கூடப் பெரிய தகுதியாகக் கருத முடியும்.

மூன்றாவது ஆண்டில் குமரன், 96 ஊர்க் கூட்டம் நடந்ததை யடுத்து, அக்கூட்ட நடவடிக்கைகளைப் பிரசாரம் செய்வதை முக்கிய பணியாக எடுத்துக்கொண்டதாகத் தெரிகிறது. தொடர்ந்து பல வாரங்களுக்குச் சிறப்பு மலர்கள் (வைசிய நாட்டுத் தன வைசியர்களுக்கு மட்டும்) வெளியிட்டுள்ளது. இக்கூட்ட நடவடிக்கைகள் முற்றிலும் 'நகரத்தாரின்' வாழ்வியல் நடைமுறை பிரச்னைகளைப் பற்றியதே ஆகும். கால மாறுதலுக்கேற்றவாறு வாழ்வியல் நடைமுறைகளை மாற்றிக் கொள்ள வேண்டியது அவசியம் என்பதை உணர்ந்து, கூட்டுச் சிந்தனையாக அதைத் திட்டமிட்டுச் செயல்படுத்தும் இந்நடைமுறை சிறப்பானதாகவே தோன்றுகிறது. இது அறிவினால் உயர்ந்த சமுதாயத்தில் நடைபெறக் கூடியது அல்லவா? பொருளாதாரப் பிரச்சினைகளைக் குறைக்கவும், வாழ்வியல் நடைமுறைப் பிரச்சினைகளைத் தவிர்க்கவும் இவ்வேற்பாடு நடைபெற்றதாகத் தெரிகிறது. இது 1926ஆம் ஆண்டுக் குமரனில் நடந்த மிகப் பெரிய பிரச்சாரமாகும்.

சொ. முருகப்பா தன் பத்திரிகையை எப்போதும் ஜாதிக் கட்டுக்கு மீறாமலேயே நடத்தி வந்தார். 96 ஊர்க்கூட்டம் நடைபெறத் தொடங்கி, முடிவடையாமல் இரண்டு மாதத்திற்குப் பிறகு கூடுவதாகக் கூறிக் கலைந்தது. இக்கூட்டம் நடைபெறுவதற்கு முன்னால் கூட்டத்

தீர்மானங்களை வெளியிடக் கூடாது என்று தீர்மானித்தது கூட்டம். இக்கூட்டத்தையடுத்து வந்த குமரன் இதழில் தலையங்கம் பகுதி ஆலோசனைக் கூட்டம் என்று தலைப்பு மட்டும் அச்சிடப் பெற்று வெற்றுப் பகுதியாக வெளிவந்தது. இதைப் பற்றி குறிப்பெழுதும் ஆசிரியர் இவ்வாறு எழுதுகிறார்.

> இது ஜாதீய திருத்தத்திற்காகவே தோன்றிய பத்திரிகையாதலால் இதற்கு ஜாதிய விஷயமே உயிராக விருக்கிறது. ஜாதிய விஷயத்தில் ஆலோசனைக் கூட்டத்தைப் பற்றிய செய்திகளைக் காட்டிலும் முக்கியமானவை வேறொன்றுமில்லை. நீண்ட நேரம் யோசித்துப் பார்த்தோம். தலையங்கத்தில் இவ்விஷயத்தைத் தவிர வேறொன்றைப் பற்றியெழுத ஒன்றும் தோன்றவில்லை. இந்த வாரத்தில் வேறு விஷயத்தைப் பற்றியெழுதுதல் பாவமென்று கூடத் தோன்றுகிறது. ஆதலால் இந்த இடத்தில் வேறு விஷயம் எழுதப்படவில்லை. (26.8.1925 - குமரன்)

இந்த வகையில் தன் ஜாதிக் கட்டுக்குள் அடங்கிய மனிதராகவே குமரன் முருகப்பா தோன்றுகிறார் எனினும், சமயம் நேரும்போது இக்கூட்டை உடைத்துக்கொண்டு பறக்கும் நெருப்புப் பறவையாகவும் நான் மாறுவேன் என்றும் அவர் நினைத்துள்ளார். அது, அதே நாள் (26.2.1925) குமரன் இதழில் வந்த வேறொரு குறிப்பில் வெளிப்படுகிறது.

". . . அரசியலார் அதிகார வகையில் நீட்டும் அடக்குமுறைகளை மீறிச் சிறை புகலாம். ஜாதிய கூட்டத்தினர் அன்புமுறையால் போடும் தீர்மானத்தை மீற இன்றைக்கு நாம் தயராக இல்லை" என்று எழுதும் குமரப்பா, இன்றைக்கு என்ற வார்த்தையைத் தடித்த எழுத்தில் கொடுத்துள்ளார்.

தன் சாதியாரை அறிவு, பொருளாதாரம், சமூக ஒழுங்கு, சரியான வாழ்தரம் ஆகியவற்றில் உயர்த்தும் காரியத்தைச் செய்யும்போது சமூக ரீதியில் செட்டியார், மற்றவரின் ஆதிக்கத்திலிருந்து விடுபடமுடியும் ------ வேண்டும். அதனாலேயே ----- பார்ப்பனரல்லாதாரின் ஒற்றுமையை அவர் வேண்டுகிறார். காங்கிரஸ் கட்சியை, அதன் தலைவரான காந்தியை ஆதரித்த குமரன் இதழ், அதன் தமிழ்நாட்டுப் பிரமுகர்களான இராஜாஜி, சீனுவாச

ஐயங்கார் போன்றோரைச் சிறப்பாகக் குறிப்பிடவில்லை. திரு.வி.க., டாக்டர் வரதராஜுலு நாயுடு, தந்தை பெரியார் ஆகியோரின் பேச்சுக்களையும், அறிக்கைகளையுமே குமரன் பிரசுரித்து வந்தது. திரு.வி.க.வின் தலைமை உரை ஒன்றைத் தமிழ்நாடு பத்திரிகையில் 'தேவிதாசன்' என்ற புனைபெயரில் கேலி செய்து கட்டுரை ஒன்று வெளிவந்தது. அதனைக் கண்டித்து குமரனில் ஒரு கடிதம் வெளிவந்துள்ளது (9.12.1925 குமரன்). இக்குறிப்பில் பின்வருமாறு உள்ளது.

"பிராமணரல்லாத தலைவர்கள் மிகச் சிலரே இருக்கின்றனர். அவர்களும் பிரிவுபட்டு நிற்கின்றார். எப்படியாவது இவர்களைப் பிரித்து வைத்துப் பார்க்கவும் ஒருவரோடு ஒருவரைச் சண்டைக்கு விட்டு வேடிக்கை பார்க்கவும் பலர் முன்னிற்கின்றனர். உஷார். ஏமாந்து போகவேண்டாம்" என்று மு. நடராசன் என்பவர் கடிதம் தெரிவிக்கிறது. இது குமரனின் சார்பைப் பளிச்செனப் பட்டப்பகல் போல் காட்டக்கூடியதாகும்.

மொத்தத்தில் சொல்வதானால் அரசியல், மதம், சமூகம், இலக்கியம் ஆகிய துறைகளில் (பழைய ஒழுங்கின் எதிரான) ஒழுங்கின்மைக்கு எதிரான, சமூக நீதிக்கெதிரான ஒரு உறுதியான குரலாக, குமரன் குரலைப் பதிவு செய்யலாம். தவிர, ஒழுங்கின்மைக்கு எதிரான ஒழுங்கை முன் வைப்பதிலும், நவீனப்படுத்தி நின்றது அதன் ஆக்கம்.

## குறிப்பு

**96 ஊர்க்கூட்டம்**

செட்டிநாடு என்பது இராமநாதபுர மாவட்டத்துத் தேவக் கோட்டை, சிவகங்கை கோட்டங்களையும் புதுக்கோட்டை மாவட்டத்துப் புதுக்கோட்டைக் கோட்டத்திலுள்ள திருமயம் வட்டம் ஆகியவற்றைக் குறிக்கும். இப்பகுதிகளில் அடங்கிய 96 ஊர்களில் நகரத்தார் வாழ்ந்து வந்தனர். எனவே இவர்கள் 96 ஊர்க் கூட்டம் என அழைத்துக் கொண்டனர். இப்போது இது 76 (1984 கணக்குப்படி) ஆக ஊர்களின் எண்ணிக்கை அருகிவிட்டதாகச் சோமலே ('செட்டிநாடும் செந்தமிழும்' நூலில் பக்கம் 2-4) தெரிவிக்கிறார்.

# ஹநுமான்

**1937** ரா.அ. பத்மநாபன்

'ஹநுமான்' என்ற பெயர் கொண்ட தமிழ் வார இதழ் 1937ஆம் ஆண்டு தோன்றியது.

ஹநுமான் தனித்தன்மை கொண்டதாக விளங்கவேண்டும் என்ற நோக்கத்தோடு தொடங்கப்பெற்ற இதழாகும். அதே போல, தனிச்சிறப்புடன் விளங்கவும் செய்தது.

இதழியல் வரலாற்றை நாம் நோக்கும்கால், முதலில் செய்திகளைத் தருவதற்கே வெளியீடுகள் தோன்றின என்பது விளங்கும். அதாவது, எல்லா வெளியீடுகளும் செய்திகளை எழுத்தில் வடித்துத் தந்தன.

ஆனால் ஒரு பத்திரிகையில் பத்தி பத்தியாகச் செய்திகள் வெளிவரும்போது, பார்ப்பதற்கும் சரி, படிப்பதற்கும் சரி அலுப்புத்தட்டுவது இயல்பு. இந்த அலுப்பு ஏற்படாவண்ணம், செய்திகளுக்கு ஒரு தலைப்பல்ல, அடுக்கடுக்காய்ப் பல தலைப்புகள் தருவது வழக்கத்துக்கு வந்தது.

அந்த செய்தித் தலைப்புகளை ஒரு பத்தி அளவிலேயே தருவதுதான் ஆரம்பத்தில் வழக்கமாக இருந்தது. ஒரு பத்தி அளவில், அடுக்கடுக்காய்ப் பல தலைப்புகள்.

பிற்பாடு, இரண்டு பத்தி அகலத் தலைப்புகள், மூன்று பத்தி அகலத் தலைப்புகள் என்றும், பெரிய பெரிய எழுத்துக்களிலும், கண்ணைப் பறிக்கும் கொட்டை எழுத்துகளிலும் தலைப்புகள் வரத் தொடங்கின.

எவ்வளவுதான் வசீகரமான தலைப்புக் கொடுத்தாலும், ஒரு செய்தியை முடிவில் வாசகர்தான் படிக்கவேண்டும்; அந்த அளவுக்கு வாசகரும் ஒத்துழைப்பது அவசியமாகிறது.

ஆனால் எழுத்தினாலான செய்திகளுக்குப் பதிலாக, அல்லது செய்திகளுடனேயே, ஒரு படம் போட்டால், வாசகரது கவனம்

முதலில் படத்தின்மீது செல்லும். அப் படம் அவரது கவனத்தை ஈர்த்து, செய்தியைப் படிக்கத் தூண்டுதலாக இருக்கும்.

பத்திரிகை உலகில், நாளேடுகளில் கூட, படத்துக்குத் தனி மதிப்புண்டு. "ஆயிரம் சொற்களால் சொல்லக்கூடியதை ஒரு படம் சொல்லிவிடும்" (A Picture tells a thousand words!) என்று பத்திரிகை உலகில் ஒரு வசனமே உண்டு.

படங்களின் முக்கியத்துவத்தை உணர்ந்து அவைகளுக்குச் சிறப்பான இடமளிக்கும் நோக்கத்துடன் தோன்றியதே ஹநுமான் வார ஏடு.

நினைத்துப் பார்த்தால் வேடிக்கையாக இருக்கிறது. ஒரு காலத்தில், வாரத்தின் ஆறு நாட்கள் மட்டுமே நாளேடுகள் வெளிவந்துகொண்டிருந்தன. ஞாயிறன்று வெளிவரா. ஒரு பத்திரிகைகூட வெளிவரமாட்டாது. அப்படி ஒரு காலம்!

ஆனால், ஞாயிறன்றுதான், அலுவலகம் இல்லாததால், பத்திரிகைகள் படிக்க நிறைய அவகாசம் இருக்கும். ஆனால் அன்றோ நாளேடு இராது. நாளேடு இல்லாததால், வார ஏடுகளைப் புரட்டவேண்டிய அவசியம் ஏற்படும்.

சிலருக்கு, செய்திகள் சம்பந்தமான வம்புதும்பு விஷயங்களைப் படிப்பதே பிடிக்கும். சிலருக்குச் செய்திகள் என்றாலே கசக்கும். ஞாயிறன்று செய்தி ஏடுகள் வராததால், செய்திகளை விரும்புவோர் இருப்புக்கொள்ளாமல் தவிப்பார்கள். அத்தகைய வாசகர்களுக்காக, செய்திகளும் படங்களும் கொண்ட வார இறுதி ஏடு ஒன்று துவங்கலாம் என்ற நோக்கில் துவங்கப்பட்டதுதான் ஹநுமான்.

அதிலும் ஒரு விசேஷம். படங்கள் என்றால், ஒரு பத்தி இரண்டு பத்தி அளவில், சிறு சிறு படங்களை வெளியிடுவதல்ல. படமென்றாலே பெரியதாக வெளிவந்தால்தான் கவர்ச்சியாக இருக்கும். ஆகையால், பெரிய பெரிய படங்கள் - அக்காலத்தில் மக்கள் கற்பனை செய்திராத அளவு பெரிய படங்கள்! - வெளியிடுவது என்று முதலில் தீர்மானமாயிற்று.

'ஆனந்த விகடன்' ஆசிரியக்குழுவிலிருந்தும் நிர்வாகக் குழுவிலிருந்தும் 1936-37 ஆண்டுகளில் ஐந்தாறு முக்கியப்

பணியாளர்கள் வெவ்வேறு காரணங்களுக்காக வெளியேறினார்கள். அவர்களில் மூத்தவர் 'துமிலன்' என்ற புனைபெயரில் எழுதிவந்த என். ராமஸ்வாமி என்பவர். இவர் 'ஆனந்தவிகட'னில் கல்கி கிருஷ்ணமூர்த்தி வந்து சேரும் முன்பே உதவியாசிரியராக இருந்தவர். நகைச்சுவையில் மன்னன். இயற்கையான நகைச்சுவை, தமிழ்நாட்டின் வாழ்க்கையையொட்டிய இனிய நகைச்சுவை இவருக்குக் கை வந்த கலை.

உதாரணமாக, 'கர்ணம் வெங்கப்பய்யர்' என்றொரு கதை. ஒரு கிராமத்தில் ஜமாபந்தி நடக்கிறது. ஜமாபந்தி என்றால், அந்த வட்டார அதிகாரிகள் அனைவரும் கூடியிருப்பார்கள். மாவட்ட மேலதிகாரியான கலெக்டரும் அவருடைய உதவியாளர்களான ஸப்-கலெக்டர், டிபுடி கலெக்டர், தாசில்தார் போன்ற எல்லா அதிகாரிகளும் தத்தம் இலாகா கோப்புகளுடன் தயாராக இருப்பார்கள்.

நிர்வாகம் என்றால், முதல் கேள்வி 'வரி வசூல் எப்படி இருக்கிறது?' என்பதுதான். ஆகவே வரி வசூல் பிரச்னைதான் ஜமாபந்தியின் முன்னால் நிற்கும்.

கிராமத்தில் கர்ணம் என்பவர் கணக்குப் பிள்ளை. ஊரிலுள்ள நிலங்களின் அளவுகள், அவற்றுக்கான வரிவிகிதம், வரி வசூலாகி கஜானாவில் செலுத்தப்பட்ட விவரங்கள் எல்லாம் அவரிடம் இருக்கும்.

கர்ணம் வெங்கப்பையர் இருந்த கிராமத்துக்கு ஒரு புதிய மேலதிகாரி வந்தார். கிராம வாடையே தெரியாத ஒரு தஸ்-புஸ் இங்கிலீஷ் அதிகாரி. கிராமக் கணக்குகளை அவர் பார்வையிட்டார். கிராம நிலங்களில் சிலவற்றிற்கு வரிவிதிக்கப்படவில்லை; வசூலும் ஆகவில்லை என்பதைக் கவனித்தார். இது கர்ணத்தின் தவறு என்று தீர்மானித்தார். புகார்! ஜமாபந்தியில் விசாரணை!

கடைசியில் பார்த்தால், வரி விதிக்கப்படாத, வசூலிக்கப்படாத நிலம் புறம்போக்குத் தரிசு நிலம்! அதாவது சாகுபடி இல்லாத கட்டாந்தரை. இது சர்க்கார் சொத்து.

இதைக் கர்ணம் வெங்கப்பையர் நாசுக்காக விளக்கித் தம்மீது புகார் செய்த மேலதிகாரி முகத்தில் கரியைப் பூசுகிறார்.

துமிலனைத் தவிர ஆனந்த விகடனில் 'அரசியல் நிருபர் சரடு' என்ற நகைச்சுவைத் தொடரை எழுதிவந்த ஆர். பார்த்தசாரதியும், ஆனந்த விகடனுடைய முதல் சிறுகதைப் போட்டியில் பரிசு

பெற்றவரான நாலி என்ற அம்.ஜே. ராமலிங்கமும், 'விகட'னில் 'துக்கடா' பகுதியைக் கவனித்துவந்து பெயரெடுத்தவனான நானும் ஹநுமான் துவங்க ஒன்று சேர்ந்தோம். எங்களைத் தவிர, ஏ.வி. ராகவன் என்ற விகடன் சித்திரக்காரரும் எங்களுடன் இணைந்தார்.

விகடனது வளர்ச்சியில் ஒரு முக்கிய பங்கு வகித்தவரான விளம்பர இலாகா மானேஜர் டி. சதாசிவமும் எங்களுடன் சேர்ந்ததுதான், ஹநுமான் துவக்கப் பெருந்தூண்டுதலாயிற்று. விளம்பரங்கள் பெறுவதில் சதாசிவம் மகாமேதை என்பது உலகறிந்த விஷயம் - அன்றே கூட .

காலம் கூடியது. கேசரி அச்சுக் கூடம் என்ற ஒரு சிறந்த அச்சகத்தின் முதல்வர் சுந்தரம் ஐயர் என்பவரும், அவருடன் எல். ரகுராஜ பாரதி என்ற பிரமுகரும் வார இறுதி ஏடு ஒன்றைத் துவக்கும் யோசனைக்கு இணங்கினார்கள்.

பத்திரிகை, நாளேடுகள் போல ஏடாக இருக்குமென்றும், அதன் அளவு சாதாரண நாளேடுகளை விடச் சற்று சிறிதான கிரவுன் அளவில் இருக்குமென்றும் தீர்மானமாயிற்று. அக்காலத்தில் படங்கள் 'ப்ளாக்' செய்யப்பட்டு, பிறகு பக்கத்தில் பொருத்தப்பட்டு வெளியாகும். ப்ளாக் செலவு கணிசமாக இருக்கும். இருந்தபோதிலும், தம்மிடமே ப்ளாக் செய்யும் வசதி இருப்பதால், கவலைப்பட வேண்டாம் என்றார் சுந்தரம் ஐயர். படங்கள் பெரிய அளவில் வெளியாவதில் அவரும் முதலில் ஊக்கமாகவே இருந்தார்.

வார ஏட்டுக்கு ஹநுமான் என்ற ராசியான பெயர் தேர்ந்தெடுக்கப்பட்டது. ராசி எப்படியென்றால், அப்போதுதான் தமிழ்நாட்டில் சட்டசபைத் தேர்தல்களில் காங்கிரஸ் கட்சி ஹநுமான் சின்னத்தைக் கொண்டு அமோகமான வெற்றி பெற்றிருந்தது. கட்சித் தலைவர் சி. ராஜகோபாலாச்சாரியார் (ராஜாஜி) முதன் மந்திரியாகப் பதவியும் ஏற்றார்.

ஹநுமான் வார ஏட்டின் முதல் பக்கத்தில், அதன் பெயர், சஞ்சீவி பர்வதத்தைத் தூக்கி வானில் பறந்து வரும் ஹநுமான் படத்துடன் இருந்தது. இந்தக் கோலாகலத்துடன் ஹநுமான் வார ஏடு 1937ஆம் ஆண்டு ஜூலை மாதம் 11ஆம் தேதி வெளிவரத் தொடங்கியது.

பத்திரிகையின் உள்ளடக்கத்துக்கோ சொல்லத் தேவையில்லை. சுவையான அரசியல் செய்திகள், வெளிநாட்டு உள்நாட்டு வம்புச் செய்திகள், சிறுகதை, இலக்கியக் கட்டுரை, இவை தவிர 'கண்ணே பாப்பா!' என்ற தலைப்பில் ஒரு பக்கம் நிறைய சிறுவர்களுக்கான கதை கட்டுரைச் செய்திகள். அக்காலத்தில் பிரபலமடைந்திருந்த பேபி ஸரோஜா என்ற சினிமா நட்சத்திரக் குழந்தையின் கையெழுத்துப் போட்ட படம், குழந்தைகள் பக்கத்தை அலங்கரித்தது 'கண்ணே பாப்பா!' என்பது பேபி ஸரோஜா நடிக்கும் ஒரு படத்தில் வரும் புகழ்பெற்ற பாட்டு.

றாலியின் சிறுகதை, இதழுக்கு மெருகூட்டியது.

தமிழ்ப் பத்திரிகை உலகில் முதன் முறையாக, நகைச்சுவைப் படத்தொடர் ஒன்று 'குப்பு-சுப்பு' என்ற தலைப்பில் வெளியாயிற்று.

முதல் இதழின் விற்பனை எல்லாரையும் மலைக்க வைத்தது. 20,000 பிரதிகள்! அக்காலத்தில் ஒரு புதுப் பத்திரிகை அந்த அளவு விற்றது ஆச்சரியம்.

இரண்டாவது இதழின் முதல் பக்கம் முழுவதும் சென்னை மாகாணத்தில் ராஜாஜி தலைமையில் அமைந்திருந்த காங்கிரஸ் மந்திரி சபையின் படங்கள் வெளியாயின. ராஜாஜி, அவரது வலக்கரமாக விளங்கிய டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன், தொழிலாளர் தலைவரும் ஆந்திரத்தில் பெரிய வெற்றி பெற்றவருமான வி.வி. கிரி, தேசிய முஸ்லீம்களில் பழுத்த பழமான யாகூப் ஹஸன், இளம் ஆந்திர வீரர் பெஜ்வாடா கோயில் ரெட்டி, சட்டசபைத் தலைவரான புலுசு சாம்பமூர்த்தி, உதவி தலைவர் ருக்மிணி லக்ஷ்மிபதி இவர்களுடைய படங்கள் நிறைந்த முதல் பக்கம் அழகுற அமைந்திருந்தது.

நாலாவது இதழில், அதற்குமுன் தமிழ்ப் பத்திரிகை உலகம் கண்டிராத ஒரு அதிசயம் நடந்தது.

மாகாண முதன் மந்திரியான போதிலும்கூட, ராஜாஜி தினமும் தமது வேட்டியைத் தாமே துவைத்து வந்தார். அவர் அப்போது, தியாகராய நகரில் பஸ்லுல்லா தெருவில் வசித்து வந்தார். வீட்டின் கொல்லையில், திறந்த வெளியல் அவர் வேட்டி துவைப்பது, பஸ்லுல்லா தெருவுக்குப் பின் தெருவான ராஜாச்சார் தெருவழியே போகிறவர்களுக்கு நன்கு தெரியும்.

இதைப் பயன்படுத்திக் கொண்டு, சென்னை ஆங்கிலேயர் நாளேடான 'மெட்ராஸ் மெயில்' புகைப்படக்காரர் துண்டைக் கட்டிக் கொண்டு ராஜாஜி வேட்டி துவைப்பதைப் பிரமாதமாகப் படமெடுத்துவிட்டார்.

'மெயில்' ஆசிரியர் ஏ.ஏ. ஹெயில்ஸ், வாரம்தோறும் சனிக்கிழமை இதழின் கடைசி பக்கம் நிறைய, சென்னை நகரக் காட்சிகளைப் படமாக வெளியிடுவது வழக்கம். படங்களும் பெரிய அளவில் இருக்கும்.

வெறும் வாயை மெல்லுபவருக்கு அவல் கிடைத்தால் விடுவாரா? ராஜாஜி வேட்டி துவைக்கும் இரண்டு பெரிய படங்களை மெயில் நாளேட்டின் முதல் பக்கத்தில் வெளியிட்டு ஊரையே கவர்ந்து விட்டார், மெயில் ஆசிரியர். ஆங்கிலப் பத்திரிகையில் வெளிவந்த இப்படங்களைத் தமிழ்ப் பத்திரிகை உலகில் வெளியிடத் தனி உரிமையை மெயில் ஆசிரியரிடமிருந்து உடனே பெற்றுவிட்டார் பார்த்தசாரதி.

இவ்வாறு பெற்ற படங்கள் ஹநுமான் நான்காவது இதழின் முதல் பக்கத்தில் வெளிவந்தன.

இந்தப் படங்கள் உண்டாக்கிய உற்சாகத்தையும் அவைகளால் ஏற்பட்ட அதிக விற்பனையையும் கண்டு சுந்தரம் ஐயர் மிக்க மகிழ்ந்தார். ஆனால் இந்த மகிழ்ச்சி அதிக நாள் நீடிக்கவில்லை!

ஐரோப்பாவில் ஹிட்லர் என்றும் முஸோலினி என்றும் இரண்டு பெரும் தலைவர்கள், தத்தம் நாடுகளுக்கு ஏற்கனவே இழைக்கப்பட்ட அநீதிகளைச் சரிக்கட்டும் நோக்கில், சர்வாதிகார ஆட்சிகள் அமைத்து, ஐரோப்பாவையே கலக்கி வந்தார்கள். உலகம் இரண்டாவது உலக மகாயுத்தத்தின் விளிம்பில் நின்றது.

யுத்தத மேகம் பரவியதோ இல்லையோ, விலைவாசிகள் கிடுவிடுவென ஏறத் தொடங்கிவிட்டன. அச்சடிக்கும் ப்ளாக் செய்வற்கான துத்தநாகத்தகட்டின் விலையும் அமிலக் கலவைகளின் விலையும் வெகுவேகமாய் வானை நோக்கி ஏறிச் சென்றன. படங்களைப் பெரிய அளவில் வெளியிடுவதென்ற நோக்கம் கொண்ட ஹநுமான் வார ஏட்டுக்கு இது சோதனைக் காலமாயிற்று.

ஒன்பதாவது இதழுக்கான விஷயங்களை அச்சுக் கோத்து, பத்தி பத்தியாக அடுக்கி, தலையங்கம் பக்கம் தயாராகிக் கொண்டிருந்தது. அந்தப் பக்கத்தில் வெளியிட இரண்டு படங்கள் ப்ளாக் செய்யத் தரப்பட்டிருந்தன. அந்தப் படங்களின் ப்ளாக்குகளுக்கு இடம் விட்டுவிட்டு, மற்ற பகுதிகளெல்லாம் அடுக்கப்பட்டுப் பக்கம் முடிவாகத் தயார் ஆகியிருந்தது.

பிளாக்குகள் இரவில்தான் கிடைக்கும் என்ற நிலை. ஆகையால், பிளாக்குகள் வந்ததும் அந்தந்த இடத்தில் அவைகளைச் சேர்த்துக்கொண்டு, அப்பக்கத்தை அச்சடிக்கலாம் என ஆசிரியர் உத்தரவு கொடுத்துவிட்டு வீட்டுக்குப் போய்விட்டார். மற்றவர்களும் வீடு சென்றோம்.

ஆனால் மறுநாள் காலையில் நான் அலுவலகத்துக்கு வந்தபோது, அந்தப் பக்கங்கள் அச்சேறவில்லை. அதனால் அச்சு மெஷின் தூங்கும்படி ஆகிவிட்டது என்று புகார் வந்தது.

ஏன்? என்று விசாரித்தேன்.

வேறொன்றுமில்லை. பிளாக்குகள் பெரிது பெரிதாக இருப்பதால் செலவு அதிகமாகிறது என்று, அச்சக அதிபர் சுந்தரம் ஐயர் தலையங்கப் பக்கத்தில் இடம் விடப்பட்டிருந்த இரண்டு பிளாக்குகளைச் சிறிய அளவில் செய்யச் சொல்லிவிட்டார்! பிளாக்குகள் சிறிய அளவில் இருந்ததால், நாங்கள் திட்டமிட்டபடி தலையங்கப் பக்கத்தில் பொருந்தவில்லை.

''பக்கத்தை மாற்றியமைத்துக் கொடுங்கள்: மெஷின் காத்திருக்கிறது!" என்று கெடுபிடி செய்தார்கள்.

நான் யோசித்தேன். பத்திரிகையில் வரும் விஷயங்கள் ஆசிரியரின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவை. அச்சகத்தார்க்கு தம் இஷ்டப்படி பிளாக்குகளின் அளவை மாற்ற உரிமை இல்லை. ஆகையால், ஆசிரியர் வந்து என்ன சொல்கிறாரோ அதன்படியே செய்வேன் என்று உறுதியாகச் சொல்லிவிட்டேன்.

ஆசிரியர் பதினோரு மணிக்கு வந்தார். நிர்வாகத் தலைவர் சதாசிவமும் வந்தார். அச்சக அதிபர் சுந்தரம் ஐயருடன் கலந்து பேசினார்கள். ஆனால் எவ்வித உடன்பாடும் ஏற்படவில்லை.

ஆசிரியர் உரிமைகளில் வேறு யாரும் தலையிட அனுமதிக்க முடியாது என்று நாங்கள் அனைவரும் ஒரே குரலில் சொல்லிவிட்டோம். சட்டபூர்வமாக, ஒரு வக்கீல் நோட்டீஸும் தந்தோம்.

ஆனால், அச்சக அதிபர் தமது முரட்டுப் பிடிவாதத்திலிருந்து மாறவில்லை. "முதல் வருஷம் மூன்று லட்சம் ரூபாய் நஷ்டமானாலும் சரி!" என்று கூறிய அவர், பத்து வாரத்தில் நடுநடுங்கிப் போய்விட்டார். இதன் பலனாக, ஆசிரியர் முதல் குமாஸ்தா வரை நாங்கள் அனைவரும் ராஜிநாமா செய்தோம்.

நாங்கள் வெளியேறிய இடத்தில், சங்கு சுப்பிரமணியம் ஆசிரியர் ஆனார். ஆனால் அவரது காலத்தில், அது சாதாரண வார ஏடு போலவே விளங்கியது. பத்திரிகை விற்பனை படிப்படியாகக் குறையலாயிற்று. அப்படியும் அது சில ஆண்டுகள் ஓடிற்று.

இரண்டாவது உலக மகாயுத்தமும் வந்துவிடவே, குற்றுயிரும் குலையுயிருமாக இருந்த ஹநுமான் இதழ், பக்க அளவிலும் எண்ணிக்கையிலும் பாதியாகி, விற்கலாயிற்று. சங்கு சுப்பிரமணியனுக்குப் பதிலாக ஆசிரியராக 'றாலி' வந்தார். அவர் காலத்தில், பாரதியார் பற்றிய நினைவுக் கட்டுரைகள் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியரது புதல்வி யதுகிரி அம்மாள் எழுதியவை வெளிவந்தன.

1942இல் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் றாலி தீவிரமாக ஈடுபட்டிருந்தார். பிரிட்டிஷ் அரசுக்கு விரோதமான பல பிரசுரங்களை அவர் பெற்று, வெளியூரில் உள்ள நண்பர்களுக்கு அனுப்பிவந்தார்.

அப்போது திருச்சியில் வானொலியில் பணிபுரிந்த எனக்கு அடிக்கடி அத்தகைய பிரசுரங்களைப் பார்க்க வாய்ப்பு கிடைக்கும். நானும் ரகசியமாக அவைகளைத் திருச்சியில் விநியோகித்து வந்தேன்.

கடைசியில் ஒரு நாள், றாலி கைதாகிச் சிறைச்சாலைக்குச் சென்றார். பத்திரிகை தத்தளித்தது. இரண்டாண்டுகளுக்குப் பின் அவர் விடுதலையாகி வந்த சமயம், மறுபடி ஆசிரியர் பொறுப்பை ஏற்றார். ஆனால், விலைவாசி ஏற்றம், சென்னை நகரில் யுத்த பயத்தில் ஊரே காலியானது, மக்களின் மனப்போக்கில் மாற்றம் - பல காரணங்களால்

ஹநுமான் தன் பழைய உயர்நிலையை மீண்டும் அடைய முடியவில்லை.

இந்நிலையில் றாலியும் நோய்வாய்ப்பட்டு, 1948 டிசம்பர் 6ஆம் தேதி காலமானார். கொஞ்ச காலம் ஹநுமான் ஊசலாடி, முடிவில் மறைந்தும் போயிற்று.

1930ஆம் ஆண்டுக் காலத்தில் மேனாடுகளில் இருந்த படப் பத்திரிகை மோகம் சொல்லிமாளாது. 'லைஃப்', (LIFE) என்ற புகழ்பெற்ற படப்பத்திரிகை அமெரிக்காவிலிருந்து வெளிவந்து, கொடிகட்டிப் பறந்தது. இங்கிலாந்தில் 'லுக்' (LOOK) என்ற அதேபோல் இன்னொரு பத்திரிகை ஓரளவு புகழுடன் விளங்கியது. ஆனால் இவையெல்லாம் கம்பி கோக்காத ஏடுகள் அல்ல. கம்பி கோத்த இதழ்கள். இவை தந்த ஊக்கத்தால், தமிழகத்தில் ஹநுமான் பட ஏடாக வெளிவர முயற்சி நடந்தது. இதில் ஓரளவு வெற்றி பெற்றாலும், முற்றும் படங்களாலான இதழ்கள் அல்லது ஏடுகள் இன்றளவில் தமிழில் இல்லை.

முன்பெல்லாம், அச்சு முறை பழைய வழியில் சென்றது. ப்ளாக் செய்துதான் படங்களை வெளியிட முடிந்தது. அதற்குச் செலவோ அதிகமாயிற்று.

ஆனால், தற்போது, 'ஆஃப்ஸெட்' என்ற அச்சுமுறை எங்கும் பரவிவிட்டது. இம்முறைப்படி, படங்களுக்காகத் தனிச் செலவு ஏதும் இல்லை. பக்கம் முழுவதையும் - அச்சுச் செய்தி, படம் எல்லாமே - ஒரே தகட்டில் பதிவாகி அச்சடிக்கும் இந்த வசதி உள்ள இக்காலத்தில், வண்ணவண்ணப் படங்கள் எடுக்கப்படும் வசதி உள்ள தற்காலத்தில், நல்ல படப் பத்திரிகை ஏதும் தமிழில் இல்லாதது பெருங்குறையே யாகும். நம்முடைய பத்திரிகைகளின் ரசனையை வளர்க்கத்தக்க வழியில் அவை முன்னேற இது ஒரு வாய்ப்பாகும். ஹநுமான், 'படப் பத்திரிகை' வகையில் தமிழ் இதழ் உலகிற்கு ஏற்கனவே முன்னோடியாக அமைந்திருக்கிறது.

# கல்கி

**1941** மு. தங்கராசு

தமிழ்ப் பத்திரிகை வரலாற்றில் குறிப்பிடத் தக்க நாள், விசு ஆண்டு, ஆடி மாதம் பதினேழாம் நாள் (1.8.1941). இந்த நாள்தான் முதல் 'கல்கி' இதழ் வெளிவந்த நாள்.

கல்கி, இது ரா. கிருஷ்ணமூர்த்தியின் புனை பெயர். இவர் 1899ஆம் ஆண்டு, தஞ்சை மாவட்டத்தில் உள்ள புத்தமங்கலம் என்னும் சிற்றூரில் பிறந்தவர். பட்டப்படிப்பு படித்தவர் அல்லர். ஆனால் அறிஞர் பலரும் போற்றும் அளவுக்குப் பட்டறிவாளர்.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பை நிறைவு செய்வதற்கு முன்பே விடுதலை இயக்கத்தில் தம்மை இணைத்துக்கொண்டார். தேர்ந்த பத்திரிகையாளரான திரு.வி.க. நடத்திய நவசக்தியில் நான்கு ஆண்டுகள் பயிற்சி பெற்றவர்.

கல்கி என்ற புனை பெயரில் 'ஏட்டிக்குப் போட்டி' என்ற தலைப்பில் கிருஷ்ணமூர்த்தி எழுதிய நகைச்சுவை கட்டுரை, அவரை ஆனந்த விகடனின் ஆசிரியராக அமர்த்தியது.

> நமது முன்னோர்கள் இருக்கும் திக்கு நோக்கி இரண்டு கரங்களையும் கூப்பித் தண்டனிடுகின்றேன். ஆகா, அவர்கள் நமக்குச் செய்திருக்கும் நன்மைதான் என்ன? வருஷம் 365 நாளில் ஏறக்குறைய 300 நாள் நமக்கு விடுமுறையளித்திருக்கிறார்கள். இக்காலத்தில் வாரத்திற்கு ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை விடுமுறை கிடைப்பதே கஷ்டமா யிருக்கிறது. ஆனால், நமது முன்னோர்கள் செய்துவைத்த ஏற்பாடு எவ்வளவு அழகானது பாருங்கள். மாதங்களில் மார்கழியும் புரட்டாசியும் கெட்டவை. ஒரு மாதத்தை எடுத்துக்கொண்டால் அமாவாசை, பாட்டிமை முகம், நவமி திதி, இவை உதவா. பின்னர், பரணி, கார்த்திகை நட்சத்திரங்கள். வாரத்திலோ வெள்ளிக்கிழமை கலக

நாள். சனிக்கிழமை, செவ்வாய்க்கிழமை ஆகா. செவ்வாயோ வெறுவாயோ என்று கேட்டதில்லையா? பின்னர் மரண யோகமும் கரிநாளும் மாதம், திதி, நட்சத்திரம், கிழமை, யோகம் எல்லாம் கூடிய நாள் ஒன்றிருந்தால் அதில் ராகு காலம், தியாஜ்யம், பிரதோஷம் இந்த வேளைகள் கூடா. இவ்வளவு விபத்துகளையும் கடந்து ஒருவன் ஏதேனும் காரியம் செய்யப்போனால் யாரேனும் ஒரு சிறு தும்மல் தும்மி விட்டால் போதும். அன்று விடுமுறைதான். ஆகா இவ்வளவும் பூரணமாக அமலிலிருந்த அந்தப் பழைய காலம்,. நினைத்தால் நாவில் ஜலம் சொட்டுகிறது. இப்போது வரவரக் கலியுகமல்லவா முற்றி வருகின்றது?

என்பது 'ஏட்டிக்குப் போட்டி'யின் ஒரு பகுதி. இக்கட்டுரை நகைச் சுவை நிறைந்தது மட்டுமன்று; நஞ்சாய் நிலவிய மூடப்பழக்கங்களைச் சாடும் நயம் மிக்கது. இப்பகுதியால் கல்கியின் எண்ணமும் குறிக்கோளும் புலப்படுகின்றன.

கல்கி இயல்பாகவே நகைச்சுவை உணர்வு மிக்கவர். ஒரு நாள் அவர் நகைச்சுவை நடிகர் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் வீட்டுக்குச் சென்றார். என்.எஸ். கிருஷ்ணன், கல்கியைப் பார்த்து, "என்ன சாப்பிடுகிறீர்கள்? காப்பி கொண்டுவரச் சொல்லட்டுமா? டீ கொண்டுவரச் சொல்லட்டுமா? என்று கேட்டாராம். உடனே கல்கி 'டீயே மதுரம்' என்று பதில் அளித்தார்.

## கல்கி – பெயர்

தமிழகத்தில் முதன்முதலில் தம் பெயரிலேயே ஒரு பத்திரிகையைத் தொடங்கி வெற்றி கண்டவர் கல்கி. இரா. கிருஷ்ணமூர்த்தி கல்கியானது பற்றிய செய்தியும் சுவையானது. இரா. கிருஷ்ணமூர்த்தி, திரு. வி.க. அவர்களைத் தம் குருநாதராகக் கொண்டவர். அவர் பெயரில் உள்ள முதற் பகுதியான 'கல்' என்பதையும், தம் பெயரின் முதல் எழுத்தான 'கி' என்பதையும் சேர்த்துக் கல்கி என்று அமைத்துக் கொண்டார் என்பர்.

இப்பெயருக்கு இன்னொரு விளக்கமும் தருகின்றனர். இரா. கிருஷ்ணமூர்த்தியின் மனைவி பெயர் கல்யாணி. அந்தப்

பெயரில் உள்ள முதற்பகுதியாகிய ‘கல்’ என்பதோடு, தம் பெயரின் முதல் எழுத்தைச் சேர்த்து கல்கி என அமைத்துக்கொண்டார் என்பர்.

1941இல் ஆனந்த விகடனில் இருந்து விலகிய கல்கி ஏழு மாதத்திற்குப் பிறகு 1.8.1941இல் தம் சொந்த இதழான கல்கியைத் தொடங்கினார்.

## புனை பெயர்கள்

இரா. கிருஷ்ணமூர்த்திக்குக் கல்கி என்ற பெயரே நிலைத்து விட்டது. இயற்பெயரைச் சொன்னால் பலருக்கு நினைவு வருவது கடினம். கல்கி மேலும் கர்நாடகம், தமிழ் மகன், விவசாயி தமிழ்த் தேனீ, யமன், ராகி, அகஸ்தியர், லாங்குலன் போன்றவற்றையும் தமக்குப் புனைபெயர்களாகச் சூட்டிக்கொண்டிருந்தார்.

## முதல் இதழ்

கல்கி தொண்ணூற்று ஆறு பக்கங்களில் முதன் முதலில் மலர்ந்தது. மூவண்ணக் கொடியும் எழும்பூர் இரயில் நிலையமும் முகப்புப் படமாக அமைந்தன. இவ் இதழ் கல்கி, சதாசிவம் ஆகிய இருவர் கூட்டு முயற்சியால் தொடங்கப்பெற்றது என்பதனைப்,

“பிரிய நண்பர்கள்
ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கும்
சதாசிவத்துக்கும் :
நீங்கள் ஆரம்பிக்கும்
‘கல்கி’
பத்திரிகை சீர்சிறப்புடனும்
பேர் புகழுடனும் வளர்ந்தோங்கி
நாட்டுத் தொண்டு இயற்றுமாறு
பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு
எம்.கே. கிருஷ்ண செட்டி
கோயமுத்தூர்”

என்ற வாழ்த்துச் செய்தி புலப்படுத்துகின்றது.

## அமைப்பு

கல்கி தொடங்கப்பெற்ற காலம் முதல் பல ஆண்டுகள் ஒரே அமைப்பில் வெளிவந்தது குறிப்பிடத்தக்கது. தேவைக்கு ஏற்ப ஒரு சில பகுதிகள் சேர்க்கப்பெற்றன.

முதல் இதழின் முதல் பதினான்கு பக்கங்கள் விளம்பரங்கள். அவற்றுள்ளும் பெரும்பாலானவை திரைப்படம் பற்றியவை. பதினைந்தாம் பக்கத்தில் பொருளடக்கம் அமைந்துள்ளது. மீண்டும் பதினாறாம் பக்கம் ஒரு விளம்பரம். கடைசி எட்டுப்பக்கம் முழுமையாக விளம்பரம். அவையும் பெரும்பாலும் திரை விளம்பரங்களே. பின் அட்டையின் உள்பக்கம் திரை விளம்பரம், வெளிப்பக்கம் வானொலிப் பெட்டி விளம்பரம்.

## நோக்கம்

'பலசரக்கு' என்னும் பகுதியில் 'உபய குசலோபதி' என்னும் தலைப்பில் கல்கி இதழ் தொடங்கப்பெற்றதன் நோக்கத்தை,

"முதலாவது நோக்கம் தேச நன்மை
இரண்டாவது நோக்கம் தேச நன்மை
மூன்றாவது தேச நன்மை"

என்று குறிப்பிட்டுள்ளார்.

## பாரதியின் பாடல் வரி

விளம்பரங்கள் முடிந்து, செய்தி தொடங்குவதற்கு முன்,

"தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா"

என்ற பாரதியின் வரிகள் இடம் பெற்றுள்ளன. இது கல்கியின் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பெற்றுள்ளது.

## பொருளடக்கம்

அரசியல், இலக்கியம், கதைகள், கட்டுரைகள், நட்சத்திர மண்டலம், பாப்பா மலர், பலசரக்கு, படங்கள் என்று பொருளடக்கம் பல பகுதிகளையும் பக்கங்களுடன் சுட்டுகின்றது. இந்த முறையைப்

பெரும்பாலும் அப்படியே பின்பற்றியுள்ளனர். இரண்டாம் இதழ் முதல் 'ஆடல் பாடல்' என்ற ஒரு பகுதி சேர்க்கப் பெற்றுள்ளது.

## அட்டைப்பட விளக்கம்

> அட்டைப் படம்: நமது காரியாலயம் அமைந்துள்ள காந்தி - இர்வின் சாலையை இவ்விதழின் அட்டைப் படத்தில் காணலாம். மேலே தோன்றும் மூவர்ண தேசியக்கொடி நமது பத்திரிகையின் பிரதான நோக்கத்துக்கு அறிகுறியாக வானளாவிப் பறக்கின்றது. இந்த அட்டைப் படத்தைப் பொருத்தமாகவும் அழகாகவும் அமைத்துக் கொடுத்தவர் ஸ்ரீ. டபுள்யூ.ஏ. மேனன்

என்று பொருளடக்கத்தின் கீழே அட்டைப் படத்திற்கு விளக்கம் அளிக்கப் பெற்றுள்ளது.

## செய்தியின் தொடக்கம்

கல்கி முதல் இதழின் முதல் செய்தி மிகவும் சுவையாகவும் புதுமையாகவும் அமைக்கப் பெற்றுள்ளது.

> நல்ல சேதிதான்!
>
> ரொம்ப பேஷான சேதி! தமிழர்களின் புதிய பத்திரிகை திவ்யமான சகுனங்களுடன் ஜனனமாகி யிருக்கிறது. ஜனனமான நாள், திருநாள்; நட்சத்திரம், ஜன்ம நட்சத்திரம்; லக்னம், சுப லக்னம் அதோ மேளச் சத்தம் முழங்குகிறதல்லவா? இந்தச் சுப சமாசாரத்தை முன்னிட்டுத்தான் ஆனி - ஆடியில் சென்னையில் மழை கொட்டுகிறதல்லவா? நமது பத்திரிகையின் வரவை உத்தேசித்துத்தான், மேற்குத் திசையில் படார்படார் என்று வெடி சத்தம் கேட்கிறதோ, இல்லையோ? அதுவும் நமக்காகத்தான். சில நாளாக சூரியோதயம் என்றுமில்லாத பிரகாசத்துடன் ஜொலிக்கிறதல்லவா? காலை வேளையில் பட்சி ஜாலங்களின் கானம் வழக்கத்தை விட அதிக இனிமையாக ஒலிக்கின்றதல்லவா? எல்லாவற்றுக்கும் கல்கி பத்திரிகையின் வரவுதான் காரணம். கொஞ்ச நாளைக்கு முன் சென்னையில் பூகம்பம் உண்டாயிற்றே, அதற்குக் கூட இந்த அற்புத

> சம்பவத்தை எதிர்பார்த்துப் பூமி தேவி கொண்ட குதூகலந்தான் காரணமாயிருக்க வேண்டும்.

இதுதான் முதல் இதழின் தொடக்கம். இந்த இதழ் நிலைத்த பேறுடன், அனைத்துத் தரப்பினராலும், பலகாலும் போற்றப் பெறும் என்ற தன்னம்பிக்கையில் எழுதப்பெற்ற வரிகள் இவை. அவருடைய தன்னம்பிக்கை வீண் போகவில்லை.

## புதுமையும் சுவையும்

கல்கி செய்திகளைத் தருவதில் புதிய உத்தியைக் கையாண்டார்; சுவையாக வழங்கினார். கல்கி இதழ் வருகிறது என்றவுடன் திரு. ஆர். விநாயகம் பிள்ளை என்பவர் தமக்கும், திரு. க.நா. சுப்பிரமணியத்துக்கும் சந்தா கட்டினார். இதனை,

> விநாயகரே முதல் சந்தாதாரர், முருகன் இரண்டாவது சந்தாதாரர். இருவருக்கும் சந்தா கட்டியவர் விநாயகர்.

என்று குறிப்பிட்டுள்ளார்.

தலைவர்கள் பலரும் சிறைபட்ட செய்தியை,

> அடுத்தபடி முக்கியமான செய்தி, நமது அரும்பெரும் தலைவர்கள் ராஜாஜி, வல்லபாய், ஜவஹர்லால் முதலியோர் சிறைச்சாலைக்குள் சௌக்கியமாய் இருக்கிறார்களென்பது. யுத்தமானது மேற்கேயிருந்தும் கிழக்கேயிருந்தும் இந்தியாவை நெருங்கிக் கொண்டிருப்பதால், இப்படிப்பட்ட சமயத்தில் நமது தலைவர்களுக்கு எவ்விதமான ஆபத்தும் நேரக்கூடாது என்றுதான் சர்க்கார் அவர்களைப் பத்திரமாய்ச் சிறைக்குள் வைத்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது

என்று வெளியிட்டுள்ளார். இச் செய்தி கல்கியின் நுவல் திறத்திற்கு ஒரு சிறந்த சான்றாகும்.

## தமிழ்ச் சோலை

கல்கி முதல் இதழில் இடம்பெற்றுள்ள 'தமிழ்ச்சோலை' குறிப்பிட வேண்டிய ஒன்று. தேசிக விநாயகம் பிள்ளை கல்கியை வாழ்த்தி எழுதிய ஒரு பாடலையே தமிழ்ச் சோலையாக்கியுள்ளார்.

அழகான ஒரு சோலைக் காட்சியைப் படமாக வரைந்து, அக் காட்சியின் நடுவில்,

"புத்தம் புதுமலர்கள் பூக்குமே வண்டினங்கள்
சித்தம் மகிழ்ந்துண்ணச் சேருமே - நித்தமும்
பல்கி வளரும் பசுந்தமிழ்ச் சோலையாம்
'கல்கி' படர்ந்துவருங் கால்"

என்னும் வாழ்த்துப் பாடலை இடம்பெறச் செய்துள்ளார். கவிஞர் குறிப்பிடும் சோலைக் காட்சியை வரையச் செய்து, அதன் நடுவில் பாடலை அமைத்து, தேசிக விநயாகம் பிள்ளையின் கூற்றை மெய்யாக்கியுள்ளார் கல்கி.

**கட்டுரைகள்**

மாதமிரு முறையாக வெளிவரும் ஓரிதழில் தரமான கட்டுரைகளை வெளியிடுவதும் குறிப்பிடத்தக்க சாதனையாகும். முதல் இதழில் திரு. கனச்யாமதாஸ் பிர்லா எழுதிய 'கடல் கடந்த காந்தி', திருமதி என். சகுந்தலா எழுதிய 'என் தந்தை', திரு. ஏ.கே. செட்டியார் எழுதிய 'பெர்லின் நகரில்' என்னும் பயணத் தொடர் ஆகியவை சீரிய கட்டுரைகளாக அமைந்தன.

'என் தந்தை' என்ற கட்டுரையில் பாரதியார் பாப்பா பாட்டு பாடியது யாருக்காக என்பதை அறிய முடிகின்றது.

> ஒரு நாள் நான் என் தாயார் சொன்னதைக் கேளாமல் எதிர்த்துப் பேசினேன், 'தாய் சொன்ன சொல்லைத் தட்டாதே பாப்பா' என்று பாடினார். 'நான் செய்ய வேண்டியதற்கெல்லாம் ஒரு பாட்டு எழுதிக் கொடு' என்று கேட்டேன். உடனே 'பாப்பா பாட்டு' எழுதிக் கொடுத்தார்.

என்று திருமதி சகுந்தலா எழுதியிருக்கின்றார்.

மேலும், பாரதியார் குளிக்கும் போது பாடும் இயல்புடையவர் என்பதையும்,

நரைகூடிக் கிழப்பருவ மெய்தி,
கொடுங் கூற்றுக் கிரையெனப் பின்மாயும் பல
வேடிக்கை மனிதரைப் போல் நான், வீழ்வேன் என்று

> நினைத்தாயோ? - என்று என் தந்தை ஸ்நானம் செய்யும்பொழுது ஒவ்வொரு நாளும் பராசக்தியைக் குறித்துக் கோபத்துடன் பாடுவது போலப் பாடுவார். என்னுடைய குழந்தை உள்ளத்தில் அவருடைய வார்த்தைகள் பசுமரத்தாணி போல் பதிந்தன

என்னும் பகுதி அறிவிக்கின்றது.

> பெர்லின் நகரத்து மிருகக்காட்சி சாலை மிகவும் பெரிது. இம் மிருகக்காட்சி சாலையில் 10 அல்லது 15 வருடங்கட்கு முன் சில சீனர்களையும், சுமார் 25 இந்தியர்களையும் வைத்திருந்தார்களாம். ஜெர்மானியர்கள், பணத்தைக் கொடுத்து மிருகக்காட்சி சாலைக்குள் சென்று சிங்கம், புலி முதலிய மிருகங்களையும், அந்த மிருகங்களைப் போல அடைக்கப்பட்டுக் காட்சியாக வைக்கப்பட்டிருந்த இந்தியர்களையும் பார்த்து மகிழ்ந்தார்கள். அப்பொழுது ஜெர்மனிக்குச் சென்ற சில இந்தியத் தேசிய தலவர்களின் முயற்சியால் இந்தக் கொடுமை ஒழிந்தது

என்பது ஏ.கே. செட்டியார் கட்டுரை தரும் செய்தி.

ரசிகமணி டி.கே.சி. 'கம்பர் தரும் காட்சி' என்ற தலைப்பில் இலக்கிய நயம் ததும்ப, கட்டுரை எழுதியுள்ளார். தொடர்ந்து எழுதினார். அவர் கட்டுரையை வெளியிடும்போது,

> "இந்தச் சமயத்தில் புதிய பத்திரிகை தொடங்குவதில் உங்களுக்கு எவ்வளவோ கஷ்ட நஷ்டங்கள் ஏற்படலாம். ஆனால், டி.கே.ஸியை மட்டும் ஒழுங்காகத் தமிழ் இலக்கியத்தைப் பற்றி எழுதிவரச் செய்தீர்களானால், அவ்வளவு கஷ்ட நஷ்டங்களுக்கும் ஈடாயிருக்கும்" என்று அன்பர் பி.ஸ்ரீ. ஆச்சாரியா கூறினார். இதோ டி.கே.ஸி.யின் முதல் கட்டுரை வெளியாகிறது. மேலும் கட்டுரைகள் ஒழுங்காக எழுத வருவதாய் டி.கே.ஸி.யின் வாக்குறுதியும் கிடைத்திருக்கிறது." - ஆசிரியர்

என்ற குறிப்புரையை எழுதியுள்ளார். இதனால் டி.கே.ஸி.யின் எழுத்துக்கு இருந்த வரவேற்பு நன்கு புலப்படுகின்றது.

## ஆகாச வெடி

ஆகாச வெடி என்ற பகுதியும் சுவையானது. அவ்வப்போது வெளிவரும் ஏதாவது செய்தியை வெளியிட்டு, அச் செய்திக்குக் கல்கி தம் கிண்டலான இடித்துரையைச் சேர்ப்பார். சான்றுக்கு,

> சிறையிலுள்ள ராஷ்டிரபதி மௌலானா ஆஸாதுக்கு ஏற்பட்ட பல்வலியின் காரணம் கண்டு பிடிக்கப் பட்டது. வெகு காலத்துக்கு முன்னால் அகற்றப்பட்ட ஒரு பல்லின் முனை தங்கியிருந்ததை வைத்தியர்கள் சிகிக்சை மூலம் அகற்றினார்கள்

என்பது தினசரியில் வந்த செய்தி.

> இவ்வளவு காலமாகப் பல்லைக் கடித்துக்கொண்டு ராஷ்டிரபதி எப்படித்தான் பொறுத்துக் கொண்டிருந்தாரோ பாவம்!

என்பது கல்கியின் கிண்டல் இடித்துரை.

## நகைச்சுவை

ஒரு காவலரும் (போலீசு) இன்னொருவரும் உரையாடுவது போன்ற ஒரு நிகழ்ச்சி:

> "டேய்! நீ தானேடா இப்போ இரைச்சல் போட்டு என்.எஸ். கிருஷ்ணன் பாட்டு பாடிண்டிருந்தே?"
>
> "இல்லைங்க, ஸார்! நெஜம்மா. . ."
>
> "பொய் சொல்லித் தப்பிச்சிக்கலாம்னு பாத்தியா? அதெல்லாம் இங்கே நடக்காது. அந்தப் பாட்டை இன்னும் இரண்டு தடவை பாடு."

இந்த நகைச்சுவையின் மூலம் என்.எஸ்.கே.வின் பாட்டுக்கு இருந்த வரவேற்பு தெரிகிறது.

> ராயர்வாள்! நம்ம பையனை ஐ.ஸி.எஸ்.ஸுக்கு அனுப்பிச்சேனே தெரியுமோன்னா? பாஸ் பண்ணிட்டு வந்தான்னா, கபாலீசுர ஸ்சுவாமிக்கு நூறுருபாய் செலவு பண்ணி அபிஷேகம் பண்றதாக வேண்டிக்கொண்டிருக்கேன்"

"அடாடா அடாடா! நீங்கள் ஏன் விசாரப்படுறேள், ஸார்! உங்களுக்குப் போய், அப்படியெல்லாம் ஸ்வாமி செலவு வைப்பாரா?

என்பது இன்னொரு நகைச்சுவை.

இப்படி மிக நல்ல செய்திகள் பலவற்றைத் தாங்கி வந்தது முதல் கல்கி. தரம் தளராமல் தொடர்ந்து வெற்றி நடை போட்டது.

## தமிழ் இசை

தமிழ் இசையின் மறுமலர்ச்சியிலும் வளர்ச்சியிலும் கல்கி மிகுந்த ஆர்வம் காட்டினார். 16.8.1941 அன்று வெளிவந்த இரண்டாம் இதழிலேயே 'ஆடல் பாடல்' என்ற பகுதியைச் சேர்த்தார். இப்பகுதியை அவரே 'கர்நாடகம்' என்ற புனை பெயரில் எழுதினார். 'சங்கீதத்துக்கு யோகம்" என்ற தலைப்பில்,

> 'கச்சேரிகளில் தமிழ்ப் பாட்டுக்கள் அதிகம் பாட வேண்டும்' என்ற பல்லவியைச் சில சிநேகிதர்களுடன் நானும் வெகு நாளாகப் பாடிக்கொண்டு வந்திருக்கிறேன். தமிழ் நாட்டில் தமிழ் வித்துவான்கள் செய்யும் கச்சேரிகள் விஷயத்திலேதான் இதைச் சொல்லி வந்தோம். பலன் கொஞ்சம் ஏற்படத்தான் செய்தது. ஆனால் போதிய அளவு இல்லை. செவிடன் காதில் ஊதின சங்காக முடியுமோ? என்றுகூட சந்தேகப்படும்படி இருந்தது.
>
> ஆனால் எதிர்பாரா முறையில் இந்தக் கட்சிக்குப் பிரமாதமான ஆதரவு இப்போது ஏற்பட்டிருக்கிறது. ஒரு பெரிய தனவந்தர், தமிழ் நாட்டிலேயே பெரிய தனவந்தர் என்று கூடச் சொல்லலாம். தமிழ்ப் பாட்டுக் கட்சியை ஆதரிக்கத் தொடங்கியிருக்கிறார். வெறும் வாய்ப் பேச்சினால் இல்லை. அதற்காக ரூபாய் பத்தாயிரம் பணம் செலவழிக்க முன்வந்திருக்கிறார். இந்த முயற்சியில் ஒரு பெரிய கல்வி ஸ்தாபனமும் ஈடுபட முன்வந்திருக்கிறது. அண்ணாமலை சர்வகலாசாலை இந்தச் சிறந்த பணியை ஏற்றுக்கொண்டிருக்கிறது. அதற்காக ஒரு மகாநாடு

கூட்டியிருக்கிறது. மகாநாடு 14ஆம் தேதி முதல் 17ஆம் தேதிவரை நடைபெறுகிறது. தமிழுக்கு யோகம்தான். கேட்பானேன்? சங்கீதத்துக்கு யோகம்தான்!"

என்று எழுதியுள்ளார்.

இவ் வருஷம் மியூசிக் அகாடமியில் மத்தியான வேளையில் நமது இளம் வித்வான்கள் கச்சேரி செய்தார்களே, அவர்களுக்குக் கனகாபிஷேகம் செய்ய வேண்டும். எதிரே கண்ணுக்கெட்டிய தூரம் காலி நாற்காலிகளைப் பார்த்துக் கொண்டு யார்தான் உற்சாகமாகப் பாட முடியும்? ஆனாலும் நமது இளம் வித்வான்கள் தங்களால் கூடிய வரையில் வஞ்சனையில்லாமல் உற்சாகத்துடன்தான் பாடினார்கள்

என்று 20.1.43 இதழிலும்

சென்னையில் மியூசிக் அகாடமி என்று இங்கிலீஷ் படித்தவர்களால் அழைக்கப்படும் சங்கீத வித்வத் சபை சென்ற பதினாறு வருஷ காலமாக நடந்து வருகிறது. இந்தச் சபையின் நிர்வாகிகள் பெரும்பாலும் தமிழர்கள்தான்; தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள்தான். ஆனால் எப்படியோ இந்தச் சபையில் தாய் பாஷை துவேசம் கொண்டுவிட்டது மிகவும் துரதிஷ்டவசமான ஒரு சம்பவமாகும்

என்று 10.1.43 இதழிலும்

"தமிழிசை விவாதத்தினால் வேறு நன்மை எது விளைந்தாலும் விளையா விட்டாலும், ஒரு நல்ல பலன் அவசியம் ஏற்பட்டிருக்கிறது. அது, ஸ்ரீ டி.டி. கிருஷ்ணமாச் சாரியாரைத் தமிழில் கட்டுரை எழுதும்படி செய்ததுதான்"

என்று 16.1.1942 இதழிலும்

"டி.கே.சியிடம்,

'உங்களுக்குத் தெலுங்கின் மேல் என்ன துவேஷம்?' என்று சிலர் கேட்டார்கள். இப்படிக் கேட்ட ஒரு நண்பரைப் பார்த்து, டி.கே.சி. திருப்பி ஒரு கேள்வி

> கேட்டார். 'உங்களுக்குக் கிரீக் பாஷை தெரியுமா?' என்றார். 'தெரியாது' என்றார் நண்பர், 'கிரீக் பாஷை மீது உங்களுக்கு என்ன ஐயா துவேஷம்?' என்று கேட்டார் டி.கே.சி.

என்று 1.9.1941 இதழிலும் வந்த செய்திகள், கல்கி, தமிழ் இசையின் வளர்ச்சியில் காட்டிய ஆர்வத்தை வெளிப்படுத்துகின்றன. தமிழ் இசை வளர்ச்சிக்குத் தொடர்ந்து ஆதரவளித்து வந்தார் கல்கி. அவருடைய ஆர்வமும் உழைப்பும் வீண்போகவில்லை. தமிழ் இன்று பூத்துக் குலுங்குகின்றது.

## விடுதலை இயக்க உணர்வு

தம் இளமைப் பருவத்திலேயே விடுதலை இயக்கத்தோடு தம்மை இணைத்துக்கொண்டவர் கல்கி இரா. கிருஷ்ணமூர்த்தி. அவர் இதழ்களில், 'என்ன சேதி', என்ற பகுதி அரசியல் செய்திகளை அலசும் பகுதியாகவே அமைந்தது. 'அறிவுக்குத் தக்க பரிசு' என்ற தலைப்பில்,

1. ஸ்ரீ மோஹன் குமார மங்கலம் - 3½ வருஷம் கடுங்காவலும் - 500 ரூ அபராதமும்
2. ஸ்ரீ எஸ். சுப்பிரமணிய சர்மா - 3½ வருஷம் கடுங்காவல்
3. ஸ்ரீ ஏ. அனுமந்தராவ் - 3 வருஷம் கடுங்காவல்
4. ஸ்ரீ கேரளீயன் - 3 வருஷம் கடுங்காவல்
5. ஸ்ரீ பி. ராமமூர்த்தி - 4 வருஷம் கடுங்காவல்
6. ஸ்ரீ ஸி.எஸ். சுப்பிரமணியம் - 3 வருஷம் கடுங்காவல்
7. ஸ்ரீ ஏ. உமாநாத ராவ் - 2½ வருஷம் கடுங்காவல்

என்று ஒவ்வொருவருக்கும் உரிய தண்டனை பற்றிக் குறிப்பிட்டு விட்டு,

> "இவ்வளவு அறிவாற்றல் உள்ளவர்கள் என்பதற்காக மட்டும் அவர்களுக்கு மேற்படி பரிசுகள் கிடைத்திருக்குமா? பிரமாதமாக அவர்கள் ஏதாவது காரியங்கள் செய்திருக்க வேண்டுமே? அப்படி என்ன செய்தார்கள்? ஒளிந்திருந்து 'கொரில்லா யுத்தம் செய்து பிரிட்டிஷ் ஆட்சியை இந்தியாவிலிருந்து ஓட்டப் பார்த்தார்களா?

குண்டுகளையோ, கிண்டுகளையோ போட்டு ரகளை செய்தார்களா? என்று பார்த்தோமானால், இதெல்லாம் ஒன்றுமில்லை என்று தெரிகிறது. கையிலே துண்டுப் பிரசுரங்கள் வைத்துக் கொண்டிருந்தார்களாம்!. . .

என்று ஆங்கில அரசைக் கேலி செய்து எழுதினார். இப்படி வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் விடுதலை இயக்க உணர்வு சுடர்விடும்படி மிகவும் எளிய நடையில், கேலிச்சுவை இழையோட எழுதினார்.

### தமிழ் உணர்வு

தமிழ் இசையின் வளர்ச்சியில் நாட்டம் செலுத்தியது போன்றே எளிய இனிய தமிழ் நடைமுறைக்கு வரவேண்டும் என்பதிலும் கவனம் செலுத்தினார் கல்கி. 1947 ஆண்டு மார்ச்சு மாதம் 1,2 நாள்களில் சென்னையில் கூடிய தமிழாசிரியர் மாநாடு பற்றி,

தமிழ்ப் புலவர்கள் சாதாரணமாக ஒன்றுபட்டு ஒரு முகமாகக் காரியம் செய்வதில்லை யென்று சொல்வதுண்டு. அந்த வழக்கத்துக்கு மாறாகச் சென்னை மாகாணம் முழுவதிலிருந்தும் முந்நூறு தமிழாசிரியர்களும் ஆசிரியைகளும் மார்ச் 1,2 தேதிகளில் சென்னை செண்ட் மேரி மண்டபத்தில் மாபெரும் மாநாடு கூடினார்கள். தமிழ், தமிழ்நாடு, தமிழாசிரியர் முன்னேற்றங்களைக் குறித்தும் பேசித் தீர்மானமும் செய்தார்கள்

என்று செய்தியாக வெளியிட்டார். மாநாட்டில் கலந்துகொண்ட ரா.பி. சேதுப்பிள்ளை, மு.வ., டாக்டர் சிதம்பரநாதன் செட்டியார், தெ.பொ.மீ. போன்றோரின் படங்களையும் வெளியிட்டுப் பெருமை படுத்தினார்.

இம் மாநாட்டில் மு.வ. நிகழ்த்திய,

தமிழ் மொழி மக்களுக்குப் பயன்படுகின்றதா என்றும் நாம் மக்களுக்குப் பயன்படுகின்றோமா என்றும் அடிக்கடி எண்ணிப் பார்க்க வேண்டும். . . நாம் பேசும் தமிழும், எழுதும் தமிழும் இயன்ற வரையில் மக்களுக்கு விளங்கும் எளிய நடையில் அமையவேண்டும்

என்னும் வரவேற்புரையின் பகுதியைக் குறிப்பிட்டு, அதில் 'இயன்றவரையில்' என்று மு.வ. குறிப்பிட்டதற்கு விளக்கம் தருவது போன்று,

> இந்த அருமையான, தெளிந்த கருத்தில் 'இயன்ற வரையில்' என்னும் குழப்பத்தொடர் சேர்ந்திரா விட்டால் மிக நன்றாய் இருந்திருக்கும். போனாற் போகட்டும்! தமிழாசிரியர் ஒருவர் 'எளிய நடை வேண்டும்' என்று சொன்னதே பெரிய காரியம்தான்

என்று எழுதினார்.

## பெருந்தன்மை

கல்கி பெருந்தன்மையான எழுத்தாளர்; நல்ல செய்திகளை வரவேற்கும் பண்பாளர்; தமிழுக்கும் நலம்சேர்க்கும் எதையும் பாராட்டி மகிழ்வார். 'தமிழன்' என்ற இதழ் மதுரையிலிருந்து வெளிவரத் தொடங்கியது. அதனை வரவேற்கும் பாங்கில்,

> சங்கம் நடத்தித் தமிழை வளர்த்த மதுரையில் இப்போது 'தமிழன்' தோன்றியிருக்கிறது. தமிழர் முன்னேற்றமும், தமிழ் ராஜ்ய ஸ்தாபனமும் இந்தப் பத்திரிகையின் முக்கிய நோக்கங்களாயிருக்குமென்று அறிந்து பெரிதும் மகிழ்கிறோம். பத்திரிகையை மிக மேலான முறையில் கொண்டு வருவதற்குத் தகுந்த அஸ்திவாரங்கள் முதல் இதழில் அமைந்திருக்கின்றன. பத்திரிகை முழுவதும் இரு வர்ணங்களில் அச்சிடப்படும் பத்திரிகை தமிழ் நாட்டில் இதுவே முதலாவதாகும். 'தமிழ'னை அன்புடனும் ஆர்வத்துடனும் வரவேற்கிறோம்.

என்று கல்கி எழுதியிருப்பது குறிப்பிடற்கு உரியது.

## சமுதாய விழிப்புணர்வு

கல்கி சமுதாய விழிப்புணர்வை உண்டாக்கிய இதழ்களுள் ஒன்று. தீண்டாமை என்னும் கொடுமை அகல பாடுபட்ட இதழ் இது. கோவில்களில் அரிசனங்கள் நுழைந்த செய்தியைப் பெருமையோடு வெளியிட்டது கல்கி.

> புது வருஷம் பிறந்ததும் பிறக்காததுமாகத் தமிழ்நாடு ஒரு பெருமைப் படத்தக்க காரியம் செய்திருக்கிறது. திருவாரூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீதியாகராஜ ஸ்வாமி தம்முடைய கோயிலின் கதவுகளைத் தம் கண்ணாலே கண்டிராத ஹரிஜன மக்களுக்குத் தரிசனம் அளித்திருக்கிறார்.
>
> இடைக்கால சர்க்காரின் தொழில் மந்திரியும், தென்னாட்டிலுள்ள எல்லாக் கோவில்களையும் ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்டே செல்வது என்று கங்கணம் கட்டிக்கொண்டு வந்திருப்பவருமான ஸ்ரீ ஜகஜீவன்ராமும் மற்றும் ஸ்தலப் பிரமுகர் பலரும் இந்த வைபவத்தில் கலந்து கொண்டு அதைச் சிறப்பாக நடத்தி வைத்திருக்கிறார்கள்

என்று போற்றிப் பாராட்டிய கல்கி, 'திருவருள் வேண்டும்' என்னும் தலைப்பில்,

> கொஞ்ச நாளைக்கு முன்னாலேயே திருச்செந்தூர் முருகப்பெருமானுடைய கோவில் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டது வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். இப்போது திருவாரூரிலுள்ள தியாகராஜ சுவாமிகளின் சந்நிதி ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டிருப்பதாகச் சுப செய்தி வந்திருக்கிறது. இன்னும் திருநெல்வேலியில் ஸ்ரீ நெல்லையப்பரின் ஆலயத்தையும் சென்னையில் ஸ்ரீ பார்த்தசாரதி கோவிலையும் திறந்து விடுவதற்கு முயற்சிகள் நடைபெறுவதாகத் தெரிகிறது. இங்ஙனம் தமிழ் நாட்டுத் திருக்கோவில்களின் கதவுகள் படார் படார் என்று திறக்கப்படும் சத்தம் வடக்கே வெகுதூரத்துக் கப்பால் உள்ள நம்முடைய சர்தார் வல்லபாய் படேலின் காதிலும் விழுந்திருக்கிறது. அவர் சமீபத்தில் குஜராத்தில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில், கடுமையான சனாதன தருமத்தை அனுஷ்டிக்கும் தென்னாட்டில் இம்மாதிரியாக ஒன்றன் பின் ஒன்றாகப் பல ஆலயங்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடுவதைப் பார்த்து ஆச்சரியப்படுவதாகச் சொல்லியிருக்கிறார்

என்று எழுதித் தம் ஆதரவையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துள்ளார். அவரே,

> ஆலயப் பிரவேசத்தின் மூலம் தமிழ் நாட்டின் பெருமையும் தமிழ் நாட்டுத் திருக்கோவில்களின் பெருமையும் அகில இந்தியாவிலும் பரவுவது குறித்து நாம் இரட்டிப்பு மகிழ்ச்சி அடையலாம்

என்று எழுதியிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

ஏமாற்றி வேலை வாங்குகிறவர்களும் அத்தகையவர்களுக்குத் துணை நிற்பவர்களும் உண்டு என்பதைச் சுட்டும் வகையில் 'வேலை கிடைத்தது' என்று தலைப்பிட்டுச் சுட்டிக்காட்டியுள்ளார்.

> ஒரு குமாஸ்தா வேலைக்குப் 'பார்ப்பனரல்லாதார் மட்டும் விண்ணப்பம் செய்யவும்' என்று பத்திரிகையில் விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. இதைப் படித்த மகாதானபுரம் மார்க்க சகாயம் 'இருக்கட்டும்; ஒரு கை பார்க்கலாம்' என்று எண்ணிக்கொண்டு, மேற்படி ஆபீஸ் மேனேஜரைப் போய்க் கண்டார்.
>
> மேனேஜர் (மார்க்கசகாயத்திடம்); யார் ஐயா நீர்?
>
> மார்க்க சகாயம் : நான் தான் சுந்தரம் பிள்ளை. தங்களுடைய ஆபீஸில் குமாஸ்தா வேலைக்கு மனுப் போட வந்தேன்.
>
> மேனேஜர் : சுந்தரம் பிள்ளையா? பார்த்தால் பிராமணர் போலிருக்கே?
>
> மாக்க சகாயம் : ஆமாம், சார்! என் தகப்பனாரின் பெயர் சுந்தரம் ஐயர். சுருக்கமாக, சுந்தரம் பிள்ளை என்றேன்.
>
> மார்க்க சகாயத்துக்கு வேலை கிடைத்து விட்டது.

என்பது ஒரு சுவையான உரையாடல் பகுதியாக அமைந்துள்ளது. உரியவர்களை உயர்ந்த இனத்தார் எப்படி எளிமையாக ஏமாற்றி விடுகிறார் பாருங்கள் என்று காட்டுவதற்காக இவ்வாறு எழுதினார். கல்கி எழுதியுள்ள இப்பகுதி படிப்பவர்க்கு நகைச்சுவையை உண்டாக்கும். அதே நேரத்தில் சிந்தனையையும் தொடும்.

## பிற செய்திகள்

கல்கி இதழில் திரைப்படத் தொடர்பான விளம்பரங்கள் மிகுதியாக வந்தன. திரைப்பட நடிகர் நடிகையர் பற்றிய செய்திகளை 'நட்சத்திர மண்டலம்' என்னும் ப்குதியில் தொடர்ந்து வெளியிட்டார்.

கல்கியைப் படிக்கின்ற நேயர்களுக்கு வாழ்த்துக் கூற, வம்புக்கு இழுக்க, சந்தேகம் கேட்க, சண்டை போட, மறுப்பு எழுத, எதிர்ப்புத் தெரிவிக்க உரிமை வழங்கப்பெற்றது. அவர்கள் அவ்வாறு எழுதுபவை 'நமது வட்டமேஜை' என்னும் தலைப்பில் வெளிவந்தன.

7.8.1941 இரவீந்திரநாத் தாகூர் மறைந்த செய்தியைப் படத்துடன் வெளியிட்டார் கல்கி. 16.8.1942 இதழில் இச்செய்தி வந்தது.

> ரவீந்திரர் இவ்வுலகில் எண்பது வருஷம் உயிர் வாழ்ந்தார். ஆனால் எண்ணூறு வருஷம் வாழ்ந்திருந்தால் எவ்வளவு இலக்கியச் செல்வத்தை உலகத்துக்கு அளிக்கலாமோ அவ்வளவும் அளித்து விட்டார். அவர் அருளிய கவிதைகள், கதைகள், நாடகங்கள், கட்டுரைகள் அளவில்லாதவை. ஒவ்வொன்றும் அட்சர லட்சம் பெறுமானவை

என்று தாகூருக்குப் புகழாரம் சூட்டினார். அந்த இதழில் தாகூரின் 'பொம்மைத் திருடன்' என்ற சிறுகதையும் வெளியிடப்பெற்றது.

பயணக் கட்டுரைகள் தொடர்ந்து வெளியிடப்பெற்றன. கம்பர் தரும் காட்சி தொடர்ந்து இலக்கியக் கட்டுரையாக வெளிவந்தது.

இதழ்கள் தோறும் புதுப்புது நூல்கள் அறிமுகம் செய்யப் பெற்றன. 'படித்துப் பார்' என்ற தலைப்பு இதற்கு இடப்பெற்றது. நாமக்கல் கவிஞரின் 'தமிழன் இதயம்', 'மலைக்கள்ளன்', தேசிக விநாயகம் பிள்ளையின் 'நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்' போன்ற நூல்களையும் கல்கி அறிமுகம் செய்துள்ளது.

'அக்கப்போர்' என்ற பகுதி மிகவும் சுவையானது. இங்கிலாந்து அரசரின் மகுடத்துடன் நாணயம் அச்சிடப்பெற்றபோது, 'இனிமேல் பூவா தலையா' என்று உபயோகப்படுத்த முடியாது, 'முடியோ இலையோ' என்றுதான் கூறவேண்டும் என்று எழுதினார். அதேபோல்

நடுவில் ஓட்டையுடன் காசு வெளியிடப்பெற்றதையும் கேலி செய்து எழுதியுள்ளார். இதுபோன்ற பல அக்கப்போர்களைத் தொடர்ந்து எழுதிவந்தார்.

கல்கி எழுதிய புதினங்கள் தொடர்ந்து இதழ் தோறும் தொடர் கதையாக வெளிவந்தன. 'பார்த்திபன் கனவு' 16.10.1941இல் தொடங்கியது. முதல் அத்தியாயம் தோணித்துறை. 10.2.1943இல் நிறைவுற்றது. 'கனவு நிறைவேறியது' என்று தம் புதினத்தை நிறைவு செய்தார்.

செட்டி நாட்டு அரசர் இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், டாக்டர் அழகப்பச் செட்டியார், வடபாதி மங்கலம் சி. தியாகராஜ முதலியார் ஆகியோர் 'கலைக் களஞ்சியம்' வெளிவருவதற்குப் பொருளுதவி அளித்த செய்தியை வெளியிட்டதோடு, மற்றவரும் இவ்வாறு முன்வந்து உதவி செய்ய வேண்டும் என்ற வேண்டுகோளை விடுத்தார்.

பேரிகை கொட்டுங்கள்! முரசம்
முழங்குங்கள்! சங்கம் ஊதுங்கள்!
கொடி உயர்த்துங்கள்!
விழா நடத்துங்கள்! "வந்தே மாதரம்" என்று வணங்குங்கள்!
"வாழ்க பாரதம்" என்று வாழ்த்துங்கள்!
"ஜே ஹிந்த்" என்று கோஷமிடுங்கள்!"

என்று இந்திய விடுதலையைப் போற்றி எழுதினார். தேசியக் கொடியை அட்டைப்படமாக வெளியிட்டார். விடுதலைப் போராட்டத் தலைவர்களின் படங்களை வெளியிட்டார். ஒவ்வொரு படத்தின் கீழும் அவரவரின் சிறப்பு வெளிப்படுமாறு குறிப்பு எழுதினார்.

## கல்கியில் எழுதியவர்கள்

கல்கி, ராஜாஜி, டி.கே.சி., சாவி, விந்தன், சின்ன அண்ணாமலை, நாடோடி, பகீரதன், நாமக்கல் கவிஞர், தேசிக விநயாகம் பிள்ளை, சுப்புடு, அநுத்தம்மா, பெ. தூரன், அரு. இராமநாதன், டாக்டர் அழகப்பச் செட்டியார், எல்லீஸ் ஆர் டங்கன், கோமதி சாமிநாதன், போன்ற பலர் கல்கியின் எழுத்தாளர்கள் ஆவர்.

பல சிறுகதைகள் வெளிவந்தன. சிறுகதை போட்டி நடத்திப் புதிய எழுத்தாளர்களை ஊக்குவித்தார். பரிசுக்குத் தேர்ந்தெடுக்கப்

பட்ட கதைகளுடன், மேலும் பல கதைகளைத் தேர்ந்து அவற்றை வெளியிட்டார். இதனால் புதிய எழுத்தாளர்களுக்கு உற்சாகமும் ஊக்கமும் உண்டாயிற்று.

> கல்கி எளிய குடும்பத்தில் பிறந்தவர். பெரிய படிப்பாளி அல்லர். என்றாலும், தன் சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்த மேதை. தமிழ்ப் பத்திரிகை உலகத்தில் தம் இருபதாம் வயதில் காலடி வைத்த அவர், ஐம்பத்தி மூன்றில் தாம் மறையும் வரை பணியாற்றிக் கொண்டிருந்தார். சுப்பிரமணிய பாரதி தமிழ்க் கவிதையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தினார். மக்களை நோக்கி மக்களுக்காகவே பாட்டுக்களை அவர் இயற்றினார். பாட்டுத் திறத்தாலே வையத்தைப் பாலித்த பெருமை பாரதிக்கு உண்டு என்றால், தம் பத்திரிகைப் பணி மூலம் உலகத்தை ஆட்டிப்படைத்த பெருமை கல்கிக்கு உண்டு, கல்கியின் எழுத்து அத்துணைச் சக்தி வாய்ந்தது

என்று 'தமிழ் நேசன்' பத்திரிகையின் ஆசிரியர் முருகு சுப்பிரமணியன் கல்கிக்குச் சூட்டியுள்ள புகழாரம் மிகவும் பொருந்தும்.

> சாவதற்கு முன் என் சக்தி முழுவதையும் உபயோகித்து விட விரும்புகிறேன். வாழ்க்கையை ஒரு சிறு மெழுகுவர்த்தியாக நான் கருதவில்லை. அதை ஓர் அற்புத ஜோதியாக மதிக்கிறேன். அதை எதிர்காலச் சந்ததியாருக்குக் கொடுப்பதற்கு முன், எவ்வளவு பிரகாசமாக எரிய வைக்க முடியுமோ அவ்வளவு பிரகாசமாக எரிய வைக்க விரும்புகின்றேன்

என்று தம்மைப் பற்றிக் கூறிக் கொண்டவர் கல்கி. அப்படி ஒளி விடும் சுடராகத்தான் வாழ்ந்தார். இன்றும் அவர் புகழ் வாழ்ந்து கொண்டிருக்கின்றது.

# இதழாளர் பாரதியார்

பா. இறையரசன்

மாகவி சி. சுப்பிரமணிய பாரதியார் மிகச் சிறந்த கவிஞர் மட்டுமல்லாமல் மிகச் சிறந்த இதழாளரும் ஆவார். திருநெல்வேலிக்கு அருகில் உள்ள எட்டையபுரத்தில் இருந்த சிற்றரசில் - சமத்தானத்தில் - அவைக்களப் புலவராக அடங்கிக் கிடந்த பாரதியை, இதழியலே மாகவியாகப் படிப்படியே வளர்த்தது. ஏழு வயதிலிருந்தே கவிதை எழுதிவந்த பாரதி, பன்னீராயிரம் பாக்கள் யாத்துக் கவிப் பேரரசாக - கவிச்சக்கரவர்த்தியாக - மாகாப்பியம் பாடும் கம்பரைப்போல உயர்ந்திருப்பார். ஆயின் பதினேழு வயதில் இதழியலில் நுழைந்ததால் அவர் கவிதை மட்டுமன்றி உரைநடையும் எழுதலானார். கட்டுரைகள் மலர்ந்தன. இதழியல் எழுத்துகள் பிறந்தன. அரசியல் ஈடுபாடும் இயக்கத் தலைமையும் தோன்றின. கவிதையில் அவர் சிறு காப்பியங்களோடு நின்றதற்கும் எண்ணற்ற புதுமைகள் செய்ததற்கும் எளிமையாய் எழுதியமைக்கும் இதழியல் ஓர் மாபெருங் காரணியாய் அமைந்தது. பாரதியாரை மாகவிஞராக அறிந்த தமிழுலகம், அவர் சிறந்த கட்டுரையாளர், சிறந்த கதையாசிரியர், சிறந்த இதழாளர் என்பதைப் பெரிதும் அறிந்திருக்கவில்லை. இறுதி மூச்சுவரை சிறந்த இதழாளராக இருந்து மறைந்தவர் சி. சுப்பிரமணிய பாரதியார் ஆவார்.

## இதழியல் முன்னோடி

தமிழக இதழியலில் தந்தை ஜி. சுப்பிரமணிய அய்யரிடம் இதழியல் பயிற்சியும் அரசியல் அறிவும் பெற்று வளர்ந்தவர் பாரதி. சுதேசமித்திரனில் உதவி ஆசிரியர். சக்கரவர்த்தினி, இந்தியா, பாலபாரதா, ஆர் யங் இண்டியா, விஜயா, கர்மயோகி, சூரியோதயம், தருமம் இதழ்களில் ஆசிரியர். சித்திராவளி என்ற முழுதும் படங்கள் கொண்ட இதழ், அமிருதம் என்ற இதழ் ஆகியன நடத்த விரும்பியுள்ளார். இளசை சுப்பிரமணியன், எட்டையபுரம் ஸி. சுப்பிரமணிய பாரதி, சி. சுப்பிரமணிய பாரதி, சி.சு. பாரதி எனத் தம்மைக் குறித்துக்கொண்ட பாரதி, வேதாந்தி, நித்திய தீரர், உத்தம தேசாபிமானி, ஷெல்லிதாஸ், ராமதாஸன், காளிதாஸன், சக்திதாசன்,

சாவித்திரி எனப் புனைபெயர்கள் ஏற்றுள்ளார். சிறந்த எளிய இதழியல் நடையைத் தமிழில் உருவாக்கிய பெருமை பாரதிக்கு உண்டு. தமிழ்ச் சிறுகதை முதல்வர். தீவிரவாதத் தமிழ் இதழியலிலும் அவரே வழிகாட்டி.

## இதழியல் நுழைவு

நெல்லையிலிருந்து வெளிவந்துகொண்டிருந்த சர்வ ஜனமித்திரனில் பணக்காரர்களின் அட்டூழியங்களைக் கண்டித்துப் பாரதி கட்டுரை எழுதியதால் எட்டையபுரம் சமீன்தாருக்கும் அவருக்கும் மனவேறுபாடு ஏற்பட்டது என்று பாரதியாரின் தம்பி சி. விஸ்வநாத அய்யர் கூறியுள்ளார் (கவி பிறந்த கதை, ப. 168). மனவேறுபாடு ஏற்பட்டதால் எட்டையபுரத்தில் கட்டிப்போட்ட பூனையாக இல்லாமல் பாரதிக்குக் கவிச் சிங்கமாக உலவ உலாப் புறப்பட இதழியலே காரணியாய் அமைந்தது. மதுரை 'விவேகபாநு' இதழில் 1904 ஜூலையில் 'தனிமை இரக்கம்' என்ற கவிதை எழுதியிருந்தார். 1904 ஆகஸ்டில் மதுரை சேதுபதி பள்ளியில் இடைக்காலப் பணியாகத் தமிழாசிரியர் வேலை கிடைத்தது. சோழவந்தான் பெரும்புலவர் அரசஞ்சண்முகனாரின் 3 மாத மருத்துவ விடுப்புக் காலத்தில் பணியாற்றினார். அரசஞ்சண்முகனாரின் மாணவர் ம. கோபால கிருஷ்ணய்யரும் அப்பள்ளியில் பணியாற்றி வந்தார். அவர் பாரதியை ஜி. சுப்பிரமணிய அய்யரிடம் உதவி ஆசிரியராகப் பரிந்துரைத்ததாகச் சுத்தானந்த பாரதி எழுதியுள்ளார்.

## சுதேசமித்திரன்

பாரதி, நவம்பர் 1904 முதல் ஆகஸ்டு 1906 வரை சுதேசமித்திரனில் பணியாற்றினார். 1915 முதல் 1920 வரை வெளி எழுத்தாளராக இருந்து அவ்வப்போது எழுதிவந்த பாரதி ஆகஸ்டு 1920 முதல் தம் வாணாள் இறுதிவரை சுதேசமித்திரனில் உதவி ஆசிரியராக விளங்கினார். ஞானபாநு, ஆர்யா, மெட்ராஸ் ஸ்டாண்டர்ட், காமன்வீல், நியூ இண்டியா, பெண் கல்வி, கலைமகள், தேசபக்தன், கதாரத்னாகரம் முதலிய இதழ்களிலும் எழுதியுள்ளார். சுதேசமித்திரனில் உதவி ஆசிரியர் ஆதலால் மொழிபெயர்ப்பைத் தவிர, தாமாக எழுதும் வாய்ப்பு பெறாத பாரதி சக்கரவர்த்தினியில் ஆசிரியர் ஆனதால் தனித்துப் பல கட்டுரைகள், கதைகள் எழுதினார். 1907 ஆகஸ்டு வரை இவ்விதழில் பணியாற்றினார்.

## இந்தியா

ஜி. சுப்பிரமணிய அய்யரால் சுதேசமித்திரனிலும் சக்கரவர்த்தினியிலும் அரசியல் அறிவையும் இதழியல் பயிற்சியையும் பெற்ற பாரதியார் இந்தியா இதழுக்கு ஆசிரியராகச் சென்றார். இந்தியா வார இதழ் 4.5.1906 முதல் வெளிவந்தது. ஜி. சுப்பிரமணிய அய்யரிடம் மனக் கசப்பு ஏதும் கொள்ளாமல் 1906 ஆகஸ்டில் சுதேசமித்திரன், சக்கரவர்த்தினி இரண்டிலிருந்தும் பாரதி முழுதும் விலகி இருக்கிறார். இந்தியா இதழைத் தொடங்கியவர் மண்டையம் எஸ்.என். திருமலாச்சாரி ஆவார். இந்தியா இதழில் கனல் பறக்கும் கடுநடையில் பாரதி எழுதினார். இதனால் இந்தியா இதழின் மேலாளர் எம். சீனிவாச அய்யங்கார் 20.8.1908இல் சிறை செய்யப்பட்டார். பாரதி 26.8.1908இல் புதுவைக்குத் தப்பித்துச் சென்றார். சென்னையில் 5.9.1908 இதழுடன் நின்றுபோன இந்தியா மறுபடியும் புதுவையில் 10.10.1908 முதல் வெளிவந்தது. பிரஞ்சு மக்களின் சிறந்த கோட்பாடாகிய சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்பனவற்றைத் தம் இதழ் முழக்கமாகத் (Motto) தமிழிலும், மேற்புறத்தில் பிரஞ்சிலும் இந்தியா இதழில் பொறித்தார் பாரதியார். மேலும், புதுவைக்கு வந்தபின் இந்தியா இதழுக்குப் பொருளியல் அடிப்படையில் கட்டணம் அமைத்தார்.

| | ரூ. | அ |
|---|---|---|
| எல்லா கவர்மெண்டாருக்கும் | 50 | 0 |
| ஜமீந்தார்கள், ராஜாக்கள் முதலிய பிரபுக்களுக்கு | 30 | 0 |
| மாதம் 200-க்கு மேற்பட்ட வருமானம் உடையோர்க்கு | 15 | 0 |
| மற்றவர்களுக்கு | 3 | 0 |

இந்தியா இதழ் 12.3.1910 இதழுடன் நின்றுபோயிற்று என்று கூறுவர். ஆயின் 2.7.1910, 23.7.1910 ஆகிய நாட்களிலும் இதழ்கள் வந்துள்ளன. எனவே, செப்டம்பர் 1910 வரை இடையீடுகளுடன் இந்தியா இதழ் சில வந்துள்ளன.

## பாலபாரதா ஆர் யங் இண்டியா

இது 3.11.1906 முதல் வெளிவந்த ஆங்கில வார இதழ். இதனைப் பாரதியாரை ஆசிரியராக வெளிப்படையாக அறிவித்து

எஸ்.என். திருமலாச்சாரியாரே நடத்தியுள்ளார். நவம்பர் 1907 முதற்கொண்டு மாத இதழாக மருத்துவர் நஞ்சுண்ட ராவ் வெளியிட்டார். பாரதி புதுச்சேரி சென்றதும் இந்தியா அலுவலகத்திலேயே இவ்விதழும் வெளியிடப்பட்டுள்ளது.

### கர்மயோகி

கல்கத்தாவில் அரவிந்தர் 'கர்மயோகின்' என்ற ஆங்கில வார இதழை 1909இல் வெளியிட்டதைத் தொடர்ந்து, பாரதி 1910இல் 'கர்மயோகி' என்ற தமிழ் மாத இதழை அச்சக உரிமையாளர் ஆகிய சைகோன் சின்னையா நாயுடு என்பார் உதவியால் வெளியிட்டுள்ளார். மூன்று இதழ்கள் வந்ததாகத் தெரிகின்றது.

### தர்மம்

கல்கத்தாவில் அரவிந்தர் நடத்திய 'தர்மா' இதழை அடியொற்றிப் பாரதியார் 'தர்மம்' மாத இதழைச் சைகோன் சின்னையா நாயுடு பொருளுதவியால் நடத்தினார். இலவச இதழாகிய இவ்விதழும் மூன்று இதழ்களே வெளிவந்துள்ளன என்று தெரிகிறது.

### விஜயா

இந்தியா இதழ் சென்னையில் 5.9.1908இல் நின்று போனதால் அக்குறையைப் போக்க மண்டையம் சீனிவாசாச்சாரியாரின் தமையனாராகிய எஸ். திருமலாச்சாரியார் விஜயா என்ற நாளிதழைச் சென்னையில் திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை எண்.83 என்ற இடத்திலிருந்து வெளியிட்டுள்ளார் (பெ.தூரன், பாரதி தமிழ், பக். 38-39). இதன் ஆசிரியராக ஆர்.ஏ. ஸ்ரீரங்கராஜன் இருந்தார். 200 படிகள் அச்சிடப்பெற்றன. 1908ஆம் ஆண்டின் செய்தித்தாள் அறிக்கை இவ்விதழை 'விஜியா' (Vijiya) என்று குறித்துள்ளது. இந்தியா 30.1.1909 இதழில்,

> ...விசாரணையைப் பற்றிச் சென்னையில் பிரசுரமாகும் 'விஜயா' என்ற பத்திரிகை நேர்த்தியான அபிப்பிராயம் கொடுத்திருக்கிறது

என்று பாரதி எழுதியுள்ளார். திருவல்லிக்கேணி நெடுஞ்சாலையிலிருந்து 1909 ஜூன் மாதம் சென்னை ஜார்ஜ் டவுன் பேக்கர் தெரு, 20ஆம் எண் இடத்துக்கு விஜயா இதழ் மாறியுள்ளது. இந்தியா 17.7.1909

இதழில் 'ஓர் சம்பாஷணை' என்ற தலைப்பில் சுதேசமித்திரன், விஜயா என்ற இரு நாளிதழ்களும் நாட்டுநலம் பேணுகின்றன என்றும் இந்தியா வார இதழ் விரைவில் நாளிதழ் ஆகலாம் என்றும் இருவர் உரையாடல் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

சென்னையில் வெளியான விஜயா நாளிதழ் பொருள் முடக்கத்தாலோ அரசினரின் தாக்கத்தாலோ பாரதி, எஸ்.என். திருமலாச்சாரியார் ஆகியோரைத் தொடர்ந்து சீனிவாசாச்சாரியாரும் புதுவைக்கு அடைக்கலம் சென்றதால் ஆகஸ்டு 1909இல் நின்றிருக்கக்கூடும். புதுவையில் இந்தியா இதழ் நன்கு நடக்கத் தொடங்கியதும் பாரதியும் நண்பர்களும் விஜயா நாளிதழையும் பாலபாரதா ஆங்கில மாத இதழையும் மீண்டும் 1909 நவம்பர் முதல் தொடங்கியுள்ளனர். இந்தியா 4.9.1909 இதழில்,

> விஜயா
>
> பிரதி தினமும் வெளியாகும்
>
> நமது பத்திரிகைக்கு முக்ய நிருபர்கள் ஸ்ரீமான் ஸி. சுப்பிரமண்ய பாரதி, ஸ்ரீமான் கா. வரதராஜன் முதலான இன்னும் அனேகர்கள், செப்டம்பர் 7ஆம் தியதி கிருஷ்ண ஜயந்தியன்று துவங்கி வெளிவரும்

என்று விளம்பரம் வந்துள்ளது. இவ்விளம்பரத்தில் பாரதமாதா, வந்தேமாதரம் என்பன நாகரி எழுத்துகளில் உள்ளன. உருது மொழியிலும் உள்ளன. இந்தியப் படத்தின் நடுவே பாரதத் தாய் நான்கு கைகளுடனும் இரு கைகளால் நான்கு குழந்தைகளை அரவணைத்திருப்பதாகவும் உள்ளது. இரண்டு கொடிகளில் ஒன்றில் 'த்வேஷம் வேண்டாம்' என்று தமிழிலும் மற்றொன்றில் தெலுங்கிலும் உள்ளன. ஒருபுறம் இந்துவும் முகமதியரும் இணைந்து குதிரையுடன் நிற்கும் படம்; மறுபுறம் இந்து முகமதியர் இணைந்து அன்னத்துடன் நிற்கும் படம். இவற்றின் கீழே விஜயா இதழ் விளம்பரம் உள்ளது.

பாரதியின் பெயர் வழக்கம்போல் இதழாசிரியர் என்று வெளிப்படையாகக் குறிக்கப்படாமல் 'முக்ய நிருபர்' என்ற அறிவிக்கப்பட்டுள்ளது. புதுவைக்கு வந்து விஜயா இதழைத் தொடங்கிய சீனிவாசாச்சாரியாரின் சமையல்காரர் கா. வரதராஜன் என்கிற பார்த்தசாரதி அய்யங்காரும் விஜயா இதழின் முக்ய நிருபர் என்று குறிக்கப்பட்டுள்ளார்.

இந்தியா, பாலபாரதா, விஜயா இதழ்கள் சரஸ்வதி அச்சுக் கூடத்திலிருந்து ஒரே முகவரியில் வெளிவந்துள்ளன. விஜயா நாளிதழ் 300 அச்சடிக்கப்பட்டுள்ளன. இவ்விதழின் ஆண்டுக் கட்டணம் ரூ. 10. தனி இதழ் அரையணா.

1910 மார்ச்சு திங்களில் பாரதியின் இதழ்கள், 1910ஆம் ஆண்டின் இதழியல் சட்டத்தின்படி தடை செய்யப்பட்டன. இந்தியா இதழின்மேல் ஆங்கில அரசு எடுத்த அடக்குமுறை நடவடிக்கை குறித்து 23.3.1909இல் விஜயா இதழ் எழுதியுள்ளது. பாரதியின் இந்தியா, விஜயா, சூரியோதயம் இதழ்கள் படிப்படியே அடக்குமுறைக்கு உட்பட்ட நிலையில்,

> இப்பொழுது இந்தியா சந்தாதாரர்களுக்கு நாம் ஒன்று கூற விரும்புகிறோம். விஜயா நாளிதழை வார இதழாக மாற்றப் போகிறோம். இந்திய மக்கள் முன்னேற்றத்திற்கான வழிமுறைகள் பற்றி விவாதிக்கப் போகிறோம். **பிரிட்டிஷ் அரசு தொடர்பான செய்திகள் பற்றிப் பேசப்போவதில்லை.**

என்று எழுதியுள்ளார் பாரதியார். இதன்பிறகு விஜயா வார இதழாக வெளிவந்துள்ளது. விஜயா, 1910 ஏப்ரல் 15, 22 நாட்களில் வார இதழாக வந்துள்ளது பற்றிய குறிப்புகள் உள்ளன (பெ.சு.மணி, பத்திரிகையாளர் பாரதியார் ப. 171). 17.5.1910 நாளிட்ட இரகசியக் காவலர் குறிப்பில் 1910 இந்திய இதழ்கள் சட்டத்தின்படி விஜயா இதழ் நின்று போய்விட்டது என்று உள்ளது.

> இந்தியா 2.10.1909 இதழில்,
>
> விஜயா
>
> ஏஜெண்டுகள் வேண்டும்
>
> மிக உதாரமான சன்மானங்கள் கொடுக்கப்படும். தினந்தோறும் புதுச்சேரியில் பிரசுரமாகும் தமிழ்ப் பத்திரிகை, தமிழ் ஜனங்கள் அறிவு, செல்வம், வல்லமை, ஸ்வதந்திரம் முதலிய நன்மைகளனைத்தும் பெற வழிகாட்டுவது. உலக வர்த்தமானங்களெல்லாம் அடங்கியது. விலை மிகவும் சொற்பம். வருஷத்திற்கு 10 ரூபாய்தான். இப்பத்திரிகைக்குச் சந்தா சேகரிப்பதையே

> தொழிலாக எடுத்துக்கொள்ள விரும்புபவர்கள் வேறு எத்தொழிலும் விரும்பாமல் கவுரவமான சம்பாத்தியம் பெற இடமுண்டு. 8 சந்தா சேகரித்துக் கொடுப்போருக்கு ஒரு வருஷப் பத்திரிகை இனாமாக அனுப்பப்படும்

என்று விளம்பரம் வந்துள்ளது.

பிரான்சு நாட்டிலுள்ள பாரிசு ஆவணக் காப்பகத்திலிருந்து 1910 பிப்ரவரி மாதத்து விஜயா இதழ்கள் என் நண்பர் செந்தாமரைக் கண்ணன் மூலம் கிடைத்தன. 1910 பிப்ரவரி 1, 2, 3, 4, 5, 7, 8, 9, 10, 11, 12, 14, 15, 18, 19, 22., 25, 26, 28 ஆகிய நாட்களின் இதழ்கள் உள்ளன. புத்தகம் 1 இலக்கம் 119 என்று 1910 பிப்ரவரி 1ஆம் நாள் இதழில் உள்ளது; புத்தகம் 1 இலக்கம் 141 என்று 28ஆம் நாள் இதழில் உள்ளது. இலக்கம் 132, 133, 136 ஆகிய இதழ்கள் கிடைக்கவில்லை. ஞாயிறு தோறும் விடுமுறை என்பதால் இதழ் வெளிவரவில்லை. 24.2.1910 மாசி மகம் என்பதால் இதழ் வெளிவரவில்லை.

## இதழ் அமைப்பு

இதழின் முதல் பக்கப் பெயர் முகப்புப் பகுதியில் விஜயா என்று தமிழிலும் கீழே உரோமன் எழுத்திலும் இருக்கும். மேலே பிரஞ்சுக் குடியரசின் முழக்கமாகிய 'ஸ்வதந்திரம் ஸமத்துவம் ஸஹோதரத்துவம்' என்பது நடுவிலும் மேலே அரைவட்டமாகப் பிரஞ்சு மொழியிலும் அமைத்துள்ளார் பாரதியார். இக் கொள்கை முழக்கத்தை (Motto) புதுவை புகுந்தபின் இந்தியா இதழில் பெயர் முகப்புப் பகுதியில் அமைத்திருந்தார். அதனாலே விஜயாவிலும் பின்பற்றினார். மேலே இரு ஓரத்திலும் இதழின் பதிவு எண் தமிழிலும் ஆங்கிலத்திலும் இருக்கும். பெயருக்குக் கீழே 'பிரதி தினமும் மாலையில் பிரசுரிக்கப்படும்' என்று இருக்கும். கீழே இரட்டைக் கோட்டுக்குள் 'புதுவை' என்று இடமும், தமிழ் ஆண்டு மாதம் நாள் கிழமை கிறித்துவ ஆண்டு, மாதம், நாள் ஆகியனவும் இருபுறமும் 'புத்தகம்' என ஆண்டு எண்ணும் 'இலக்கம்' என இதழ் எண்ணும் இருக்கும். மேலே இரு காதுப்பகுதிகளிலும் வெளிநாட்டுச் சந்தா, உள்நாட்டுச் சந்தா விவரம் இருக்கும். பக்க எண்கள், இதழின் பதிவு எண் ஆகியவை தமிழ் எண்களில் இருக்கும். விஜயா இதழில் பாரதியின் இந்தியா, பாலபாரதா, கர்மயோகி, தருமம் முதலிய இதழ்கள் பற்றிய விளம்பரங்கள் வந்துள்ளன. 'நமது ஆபீஸில்

கிடைக்கக்கூடிய புஸ்தகங்கள்' என்ற தலைப்பில் பாரதியின் ராணி லக்ஷ்மீபாய் சரித்திரம், ஜன்மபூமி, சுதேச கீதங்கள், எங்கள் காங்கிரஸ் யாத்திரை முதலிய நூல்கள் குறிக்கப்பட்டுள்ளன. இந்தியா இதழ் அச்சடிக்கப்பட்ட சரஸ்வதி அச்சக முகவரியே இறுதிப் பக்கத்தில் உள்ளது. இவற்றால் பாரதியே விஜயா இதழின் ஆசிரியர் என்று உறுதி செய்யலாம். இரகசியக் காவலர் குறிப்புகளும் விஜயா இதழின் ஆசிரியராகப் பாரதியைச் சுட்டுகின்றன.

முதற் பக்கத்திலும் நான்காம் பக்கமாகிய இறுதிப் பக்கத்திலும் விளம்பரங்கள் உள்ளன. இரண்டாம் பக்கத்தில் ஆசிரியவுரைகள் (தலையங்கங்கள்) 'பத்திராதிபர் குறிப்புகள்' என்று தலைப்பு இட்டோ இடாமலோ இருக்கும். மேற்பக்க நடுவில் ஓர் படம் இருக்கும். மூன்றாம் பக்கத்தில் 'தந்திகள்' என்று தலைப்பிட்டு, தந்தியில் வரும் செய்திகளும் பிற இதழ்களில் வந்த செய்திகளும் வாசகச் செய்தியளார்கள் எழுதிய சில செய்திகளும் இடம்பெற்றிருக்கும்.

இரண்டாம் பக்க மேற்பகுதி நடுவில் அமைந்துள்ள படங்களும் விளக்கங்களும் விஜயா இதழுக்குச் சிறப்பூட்டுவன. இடம்பெற்ற படங்கள் வருமாறு :

13.1.1910 : ஸ்ரீமான் லாலாலஜ்பத்ராய்
1.2.1910 : ஸ்ரீமதி மாதம்காமா
2.2.1910 : அத்தங்கி மஹாநகரம்
3.2.1910 : பர்மா தேசத்தில் . . . புத்த விஹாரம்
4.2.1910 : டில்லி பட்டணத்திலிருக்கும் ஸ்ரீராஜதேவன் ஜயஸ்தம்பம்
5.2.1910 : பம்பாய்க்கருகில் யானைத் தீவிலுள்ள குகை ஆலயங்கள்
6.2.1910 : கல்கத்தா ஹைகோர்ட்டு
7.2.1910 : கொலையுண்ட போலீஸ் உத்யோகஸ்தர்

என நாள்தோறும் படங்கள் வந்துள்ளன. இவற்றில் 1.2.1910இல் விஜயா இதழில் வந்த மாடம் காமா படம் இந்தியா 5.2.1910இல் வந்துள்ளது. 7.2.1910இல் விஜயா இதழில் வந்த கொலையுண்ட போலீஸ் உத்யோகஸ்தர் படம் இந்தியா 12.2.1910 இதழில் வந்துள்ளது. இதே போல் பாரிஸ் நகர வெள்ளக்காட்சி பற்றிய படங்கள் விஜயா இதழிலும் பின் இந்தியா இதழிலும் வந்துள்ளன.

விஜயா இதழில் வந்த 'பிரிட்டிஷ் இந்தியாவில் பயமுறுத்தும் சட்டங்கள்' என்ற ஆசிரியவுரை (தலையங்கம்), இந்தியா 22.1.1910 இதழிலும் 'பாரதநாட்டின் புண்ணிய ஸ்தலங்கள்' என்ற ஆசிரியவுரை இந்தியா 8.1.1910 இதழிலும் வந்துள்ளன. இதேபோல் 1.2.1910 விஜயா இதழில் வந்த நெல்லையப்பரும் வெள்ளையப்பரும், கர்ப்பம் கரைய மருந்து கொடுத்தது 2.2.1910 விஜயா இதழில் வந்த வன்னியர் விரதம் முதலிய ஆசிரியவுரைகள் இந்தியா 5.2.1910 இதழில் வந்துள்ளன. இவ்வாறு ஆசிரியவுரைகளும், படங்களும் செய்திகளும் விளம்பரங்களும் விஜயா நாளிதழில் வந்தவை அப்படியே இந்தியா, சூரியோதயம், கர்மயோகி இதழ்களில் இடம் பெற்றுள்ளன. இந்தியா, விஜயா, கர்மயோகி முதலிய இதழ்களில் பாரதியார் தமிழ் ஆண்டு, மாதம், நாள், தமிழில் பக்க எண்கள் பயன்படுத்தியுள்ளார். சூரியோதயம் இதழில் பக்க எண்கள் தமிழில் இல்லை.

பாரதியார் விஜயா இதழில் எழுதிய ஆசிரியவுரைகளில் மிகவும் கடுமை வாய்ந்ததாக 'எதிர்க்கிறாயா? துணை செல்கிறாயா?' என்ற தலைப்பு அமைந்துள்ளது. இது மிகவும் கடுநடையும் சுடு நடையும் கொண்டுள்ளது. வி. கிருஷ்ணசாமி அய்யர் 1909ஆம் ஆண்டின் இறுதியில் நீதிபதி பதவி ஏற்றார். இதனைத் துரோகம் என்று சாடினார் பாரதி. 1907இல் பாரதியின் பாடல்கள் 'ஸ்வதேச கீதங்கள்' என முதன்முதல் அச்சேறப் பொருளுதவி செய்தவர் வி. கிருஷ்ணசாமி அய்யர்.

> ஓய் கிருஷ்ணஸ்வாமி அய்யரே, நாளை உங்களுடைய சகாக்களான தீவிரவாதிகளில் எவரேனும் போலீஸாரால் உமது கோர்ட்டில் நிறுத்தப்பட்டால் நீங்கள் 'தயையும் கருணையும் கலந்து' பல வருஷம் கடுங்காவல் விதிப்பீர்களே அதுவும் தேசபக்தியான செயல்தானோ!

என்று தாக்கி எழுதியுள்ளார் பாரதி.

பாரதி, விஜயா 15.2.1910 இதழில் 'ஆகாய விமானமும் சென்னையும்' என்று ஆசிரியவுரை எழுதியுள்ளார். இதனை இந்தியா 19.2.1910 இதழில் இணைப்பிதழாகச் (அநுபந்தமாக) சிறப்பு மலர்போல் வெளியிட்டுள்ளார்.

இதில்,

> சென்னை மௌண்ட் ரோட்டில் பெயர் பெற்ற ஓட்டல் வைத்திருக்கும் டாஞ்சலிஸ் (டி. அஞ்சலிஸ் என்றும் சொல்வதுண்டு) என்னும் பிரஞ்சுக்காரரால் கண்டுபிடிக்கப்பட்டுத் தமிழ் வேலைக்காரர்களால் செய்யப்படுகிறது. ஸிம்சன் கம்பெனியின் மானேஜர் மேற்பார்வையின் கீழ் நடந்து வருகிறது

என எழுதியுள்ளார். 'ரைட்ஸ்' உடன் பிறப்பாளர்கள் விண்ணூர்தி (ஆகாய விமானம்) கண்டுபிடித்த 6 ஆண்டுகளில் இந்தியாவில் அதுவும் சென்னையில் செய்யப்பட்ட மகிழ்ச்சியைத் 'தமிழ் வேலைக்காரர்களால் செய்யப்படுகிறது' என்று வெளிப்படுத்துகிறார்.

விஜயா 13.1.1910 இதழில் 'கல்விப்பயிற்சி' என்ற மிக அருமையான கட்டுரை ஒன்று தலையங்கமாகப் பாரதியாரால் தீட்டப்பட்டுள்ளது. எக்காலத்துக்கும் உரிய இக்காலத்துக்கும் ஏற்ற கல்வியியல் கருத்துகள் அதில் உள்ளன. இதில்,

> பணம் சம்பாதிக்கும் வழியைக் காட்டும் படிப்பைவிட்டு வெறும் படிப்பே படித்தால் ஒரு காலத்திலும் தேசத்திற்கும் ஒருவித நன்மையும் விளையாது. . . .
>
> தொழிற்படிப்புடன் சேர்ந்துள்ள ஞான விருத்திகரமான படிப்பைத்தான் கட்டாயமாய் நம் நாட்டுச் சிறுவர்களுக்குப் பயிற்சி செய்விக்க வேண்டுமென்று நாம் சொல்லுகிறோம்

என்று எழுதியுள்ளார்.

உழவையும் தொழிலையும் போற்றிப் பல்வகைக் கலைகளையும் அறிவியல் வளர்ச்சிகளையும் நம் இளைஞர்கள் பெற வேண்டும் என்று கவிதைகளிலும் கட்டுரைகளிலும் தம் ஆசிரியவுரைகளிலும் பாரதி எழுதியுள்ளார். எடுத்துக்காட்டாக விஜயா, 8.2.1910 இதழில் 'திருச்சிராப்பள்ளியில் ஒரு தொழிற்கலாசாலை' என்று திருச்சிராப்பள்ளி தெப்பக்குளம் அருகில் தொடங்கப்பட்ட பொறியியற் கல்லூரி பற்றி மகிழ்ந்து பாராட்டி இதேபோல் நாடு முழுதும் வர வேண்டும் அப்போதுதான் அயல்நாட்டுப்

பொருள்களை விலக்கி, நாமே எல்லாவற்றையும் செய்துகொள்ள முடியும் என்று எழுதியுள்ளார். மேலும், விஜயா 10.2.1910 இதழில் 'சென்னை ராஜதானியில் ஸ்வதேசியம்' என்ற ஆசிரியவுரையில் 'திருச்சிராப்பள்ளியில் இயந்திரத்தொழில் வேலையையும் மின்சார சக்தியின் வேலையையும் படிப்பித்துக் கொடுக்கும் ஓர் புதிய வித்தியாசாலை' பற்றியும், தஞ்சை மாவட்டம் பின்னத்தூரில் உள்ள தேங்காய் ஓட்டிலிருந்து பொத்தான் செய்யும் தொழிற்சாலை பற்றியும், புன்னலூர் 'லக்ஷ்மீ பேபர் மில்ஸ்' சென்னை மெழுகுவர்த்தி தொழிற்சாலை பற்றியும் எழுதியுள்ளார்.

'கல்விப் பயிற்சி' பற்றிய ஆசிரியவுரையில்,

> நமது பாரத நாட்டில் தற்காலம் படித்துவரும் வாலிபர்களில் பெரும்பாலர் (நூற்றுக்குத் தொன்னூற்றொன்பது பேர்கள்) முக்கியமாய் ஆங்கிலம் படிப்பவர்கள் எவ்வளவு படித்த போதிலும் அவர்கள் வித்தியாசாலையை விட்டு வெளியே வந்தவுடன் ஒரு வேலைக்கும் உதவாமல் நிற்கின்றனர்

என்று எழுதியுள்ளார். இதே கருத்தை வெளிப்படுத்திக் கவிதையாகக் 'கனவு' என்னும் 'சுயசரிதை'யில்,

> 'அன்ன யாவும் அறிந்திலர் பாரதத்
> தாங்கிலம் பயில்பள்ளியுட் போகுநர்
> முன்ன நாடு திகழ்ந்த பெருமையும்
> மூண்டிருக்கு மிந்நாளில் இகழ்ச்சியும்
> பின்னர் நாடுறு பெற்றியுந் தேர்கிலார்
> பேடிக்கல்வி பயின்றுழல் பித்தர்கள்' (26)

என்று உள்ளம் எரிகின்றார்.

விஜயா 25.2.1910 இதழில்,

> ஆங்கிலப் பள்ளிக் கூடத்தில் இந்தியனுக்கு எங்கேயாகிலும் ஸ்வதந்திரம், ஸ்வஜனாபிமானம், ஸ்வகவுரவம் இவற்றைப் படித்துக் கொடுப்பதுண்டா? கிடையவே கிடையாது. ஒருகாலும் கிடையாது

என்று எழுதியுள்ளார். மிக அதிக மதிப்பெண் பெற்ற, உயர் கல்வி பெற்ற நம் நாட்டவர்களைப் பற்றிக் குறிப்பாகப் பெண்களைப் பற்றி

இந்தியா, சக்கரவர்த்தினி இதழ்களில் பெயர் குறித்துப் பாராட்டும் பாரதி, ஆங்கிலக் கல்வியால் 'மெட்ரிகுலேஷன்' தேர்வில் நம் மாணவர்கள் பெரிதும் தோல்வியுறுவதை 'மீண்டும் படுகொலை' என்று விஜயா 3.2.1910 இதழில் எழுதியுள்ளார்.

பாரதி தமது இதழ்களில் அடக்குமுறைச் சட்டங்களைப் பற்றியும், அவற்றால் பாதிக்கப் பெற்ற இதழ்களைப் பற்றியும், வழக்குகள், தண்டனைகள் பற்றியும் ஆசிரியவுரைகளாகவும் செய்திகளாகவும் வெளியிட்டுள்ளார். விஜயா 3.2.1910 இதழில் 'புதிய பத்திரிகைச் சட்டம்', 5.2.1910 இதழில் 'புதிய பத்திரிகைச் சட்ட மசோதா', 7.2.1910 இதழில் 'ஸாஹெர்பர்ட் ரிஸ்லியின் பேச்சு', 14.2.1910 இதழில் 'புதுப்பத்திரிகைச் சட்டம்', 23.2.1910 இதழில் 'ஸ்வதேசப் பத்திரிகை மசோதா' முதலிய ஆசிரியவுரைகளை எழுதியுள்ளார். இவை மீண்டும் இந்தியா இதழிலும் வந்துள்ளன.

விஜயா 23.2.1910 இதழிலும் இந்தியா 5.3.1910 இதழிலும் வந்துள்ள 'ஸ்வதேசப் பத்திரிகை மசோதா' என்ற ஆசிரியவுரை மிகவும் கடுமையாக உள்ளது. துஷ்ட சட்டம், அயோக்கியச் சட்டம், பேமானி, அனாமதேயர் என்ற கடுஞ்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கட்டுரையின் இறுதியில்,

> முன் யோசனையுள்ள ஒரு ராஜ நிபுணன் பிரமாணங்களை இங்கு சொல்லி முடித்தல் தகுதியாகும். பிரதேச கவர்ன்மெண்டாரும் ஸ்வதேச ஸ்வதந்திர பத்திரிகைகளும் பொருந்தாதவைகள். இப்படியே சில காலம் கழிந்தால் பத்திரிகையைச் சர்க்கார் நிறுத்திவிடுவார்கள். இல்லாவிடில் பத்திரிகைகள் கவர்ன்மெண்டாரை அடக்கிவிடும். இதினிமித்தம்தான் மசோதா சட்டமாய் விட்டது

என்று எழுதியுள்ளார். இஃது எவ்வளவு சிறந்த அரசியற் கணிப்பு என்பதை அடுத்த சில மாதங்களில் தேசிய இதழ்கள், குறிப்பாகப் பாரதி இதழ்கள் முடக்கப்பட்டதால் உணரலாம். மேலும் பாரதியின் இக்கருத்து 12.4.1922இல் ஆங்கில அரசுக்குத் தாமஸ் மன்றோ கொடுத்த அறிக்கையில்,

> உரிமையுள்ள இதழ்களும் அயலாராட்சியும் ஒருங்கே பல காலம் இருக்க முடியாது. மக்களுக்கு அறநெறியையும்

சமயத்தையும் கற்பிப்பதுதான் இந்திய இதழ்களின் கடமை. இதற்குமேல் அவை செல்லக்கூடாது. இதற்குமேல் சென்றால் பேசாமல் இருக்கும் மக்கள் அரசியலுக்காகப் போராடவும் அயலார் ஆட்சியைத் தூக்கி எறியவும் விரைவில் கற்றுக்கொள்ளக்கூடும்' (D. Sadasivan, The Growth of Public Opinion in The Madras Presidency 1859-1909, p. 63)

என்று கூறியுள்ள கருத்தோடு ஒத்திருக்கக் காணலாம்.

இச்சட்டத்தால் இந்திய இதழ்கள், இராமாயணக் கதைகள் எழுதத் தொடங்கிவிட்டன என்று எழுதிய பாரதி, இந்தியா 19.2.1910 இதழிலும் 5.3.1910 இதழிலும் 'சிற்பமும் கவிதையும்' என்று ஆசிரியவுரை எழுதியுள்ளார். விஜயா 4.2.1910 இதழில் 'பாரத நாட்டின் சிற்பிகளின் சிறந்த திறமை' என்று எழுதியுள்ளார்.

பாரதிக்கு நகைச்சுவை, விகட சித்திரம் அல்லது கருத்துப்படம், படம் இவையெல்லாம் பிடித்தமானவை. விஜயா இதழில் ஆலம் எனும் காவல் அதிகாரி கொலை பற்றிய செய்தியை, 3.2.1910 அன்று வெளியிட்டதோடு, இந்தியா 5.2.1910 இதழிலும் வெளியிட்டுள்ளார். அவ்வதிகாரியின் படத்தை விஜயா 7.2.1910 இதழிலும் இந்தியா 12.2.1910 இதழிலும் வெளியிட்டுள்ளார். அவரைக் கொலை செய்த தேசபக்தன் பேசுவதாக வேடிக்கையாக நாடகப் பாணியில் எழுதியுள்ளார்:

சீப் ஜஸ்டிசும், கொலையாளி வீரேந்திரநாத் குப்தாவும் பேசுகின்றனர்.

சீப்-ஜஸ்: உனக்கு ஸாக்ஷிகளுண்டா?

வீரே : எனக்கு எதற்காக ஸாக்ஷி? நான்தான் குற்றத்தை ஒப்புக்கொள்கிறேனே! தயவுசெய்து மேல் நடத்தும்.

மரண தண்டனை விதிக்கப்பட்ட பிறகு, 'உனக்கு என்ன இஷ்டமிருக்கிறது?' என்றதற்கு அவன் கூண்டிலிருந்து சிரித்த முகத்துடன் இறங்கி,

"இதற்காக எனக்கு ஸ்வதேச மிட்டாய் வேண்டும்" என்றான்.

'லண்டன் கடிதம்' என்று வ.வே.சு.அய்யர் எழுதும் மடல்கள் விஜயா, இந்தியா, சூரியோதயம் இதழ்களில் வந்துள்ளன. வ.உ. சிதம்பரனாரின் சுதேசிக்கப்பல் கம்பெனியின் விளம்பரம் சக்கரவர்த்தினி, விஜயா, இந்தியா இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்பட்டது. அதேபோல் வ.உ. சிதம்பரனாருக்குத் தண்டனை விதிக்கப் பெற்றதும் வழக்கு நடத்த நிதி கோரிய விளம்பரமும் அவர் மனைவி விடுத்த வேண்டுகோளும் வெளியிடப்பட்டன. கர்மயோகியின் இதழிலிருந்து மொழிபெயர்த்தவை விஜயா, இந்தியா, சூரியோதயம் இதழ்களில் வந்தன.

செய்தி எதுவாக இருந்தாலும் அதனை விடுதலைப் போராட்ட நோக்கில் எழுதுவது பாரதி வழக்கம். திருநெல்வேலி தெப்பத் திருவிழாவில் ஆங்கில நாட்டாரை இறைவனுக்குச் சமமாக உட்கார வைத்ததை நாட்டுணர்வோடு தொடர்புபடுத்திக் கண்டித்து விஜயா 1.2.1910 இதழில் எழுதியதை இந்தியா 5.2.1910 இதழில் வெளியிட்டுள்ளார். கருப்பம் கலைய மருந்து கொடுத்த பெண் இறந்த செய்தியைக் குறிப்பிட்டு இந்தியத் தாயின் விடுதலைக் கருப்பம் கலையாது என்று விஜயா 1.2.1910 இதழில் எழுதியதை இந்தியா 5.2.1910 இதழிலும் வெளியிட்டுள்ளார்.

செய்திகளைச் சமுதாயக் கண்ணோட்டத்துடனும் தருவது பாரதியின் வழக்கம். ஓர் எடுத்துக்காட்டு.

தஞ்சாவூரில் ஆறு துணிக்கடைகள் தீப்பற்றியதில் 50,000 ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் அழிந்தன என்ற செய்தியை வெளியிட்டு,

> 'அங்கு போலீஸார் தலைகாட்டவேயில்லை,
> தீயணைக்கும் இயந்திரம் பழுதாயிருந்ததாம்,
> ஆகையால் இதுவும் உபயோகப்படவில்லை' (விஜயா 15.2.1910)

என்று எழுதியுள்ளார்.

## சூரியோதயம்

1909ஆம் ஆண்டின் மார்ச்சு 28 நாளிட்ட ஓரிதழும், 1910ஆம் ஆண்டின் பிப்ரவரி 13, 20, 27 நாள் இட்ட 3 இதழ்களும் கிடைத்துள்ளன. தாழ்த்தப்பட்ட சாதி மக்களின் முன்னேற்றத்திற்கான

இதழாகச் 'சூரியோதயம்' என்ற பெயரில் 1869இல் ஓர் இதழ் வெளிவந்துள்ளது. புதுச்சேரியில் 1908இல் சூரியோதயம் வார இதழ் வெளிவந்தது. இந்த இதழை அச்சிட்டு வெளியிட்டவர் சைகோன் சின்னையா நாயுடு என்னும் பழனி சின்னையா இரத்தினசாமி நாயுடு ஆவார். இவர் சொந்த அச்சகம் வைத்திருந்தார். இவர் பாரதியின் நண்பர்.

மார்ச்சு 1909 இதழில் 'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடு வாழ்வார்' என்ற திருக்குறள் முதல் பக்க பெயர் முகப்புப் பகுதியில் இடம்பெற்றுள்ளது. பாரதி வேதத்தின் வரிகளை மொழிபெயர்த்து 'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனிசிறந்தனவே' என்று 1910 விஜயா இதழின் பெயர் முகப்பில் பயன்படுத்தியுள்ளார். மேலும் 1910 இதழ்களில்,

"விஷயதானஞ் செய்கிறவர்கள்
ஸ்ரீ ஸி. சுப்பிரமணிய பாரதி
ஸ்ரீ நீலகண்டன்
ஸ்ரீமதி கமல நாயகி"

என்று பொருளடக்கப் பகுதியும், பாரதிக்குப் பிடித்த பிரஞ்சுக் குடியரசின் மூன்று கொள்கைகளாகிய 'சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்' என்ற பிரஞ்சு மொழியிலான வசனமும் இருந்தன. இவையும் கருத்துப்படமும் 1909 மார்ச்சு இதழில் இல்லை. எனவே, கிடைத்தவற்றுள் 1910 பிப்ரவரி இதழ்கள் மூன்று மட்டும் இவண், பாரதியின் இதழ்களாகக் கொண்டு காணப்பெறுகின்றன. சூரியோதயம் இதழின் ஆசிரியராக நீலகண்ட பிரம்மச்சாரியும் தருமம் இதழின் ஆசிரியராக வ.வே.சு. அய்யரும் சொல்லப்பட்டாலும் பாரதியே மறைமுக ஆசிரியராக இருந்துள்ளார். கமலநாயகி என்பது நீலகண்ட பிரம்மச்சாரியின் புனைபெயர். நீலகண்ட பிரம்மச்சாரி மட்டுமன்றிப் பரலி சு. நெல்லையப்பரும் சூரியோதயம், இந்தியா, கர்மயோகி இதழ்களில் உதவியுள்ளார்.

விஜயா இதழிலும் இந்தியா இதழிலும் ஆசிரியவுரைப் பக்கத்தில் இடம்பெற்ற படங்கள் சூரியோதயம் இதழில் இடம் பெறவில்லை. ஆயின் இந்தியா இதழ்போல் கருத்துப்படம் முதற்பக்கத்தில் இடம்பெற்றது. இவ்விதழின் முகவரி 'புதுவை இரங்கப்பிள்ளை வீதி 75ஆம் இலக்கக் கிருகம்' என்றிருக்கும்.

சூரியோதயம் என்ற இதழின் பெயர் கலைத் தன்மையுடன் வரையப்பட்டுள்ளது. 'கீழே ஆதிவாரந்தோறும் பிரசுரிக்கப்பெறும்' என்று உள்ளது. பிரஞ்சு எழுத்தாளர் எமிலி ஜோலாவின் 'விடுதலை இல்லாமல் முன்னேற்றம் இல்லை' என்ற கருத்து பிரஞ்சுமொழியில் உள்ளது. இவை முன்னரே 1909 இதழில் உள்ளவைதான். கட்டணம் 3 ரூ. தனி இதழ் 1 அணா. வாரந்தோறும் 12 பக்கங்கள் வந்துள்ளன. 'சரித்திரம்' என்று தலைப்பிட்டு வரலாற்றிலிருந்து சில பகுதிகள் வந்தன. பாரதத்தாயின் படம் போட்டு ஒருபுறம் வ.உ. சிதம்பரனார் அமர்ந்திருப்பது போலவும் மறுபுறம் திலகர் எழுதிக்கொண்டிருப்பது போலவும் படம் வரைந்து அதன்கீழ் 'சரித்திரம்' என்று போடப்பட்டிருந்தது.

மூன்று இதழ்களிலும் இடம்பெற்றுள்ள கருத்துப்படங்களின் கீழுள்ள விளக்கம் வருமாறு:

1. ஜனஸ்வதந்திரம் என்ற புலத்தில் பிரிட்டிஷ் அதிகாரி என்ற மாடு மேய்ந்து செடி செடியாகத் தின்று அழிக்கிறது.

2. 'ஒட்டகமாவது மகமதிய மார்க்கம்', அஃது ஆப்பிரிக்காவை விழுங்குகிறது. டாக்டர் கம் என்ற ஐரோப்பியரொருவர் அதை நோக்கிப் பொறாமைப் படுகின்றார். அவர்தான் சித்திரத்திலுள்ள நாய்.

3. 'பத்திரிகை ஸ்வதந்திரம் இறந்துபோய்விட்டது. அதை ஸ்மசானத்துக்குக் கொண்டு போகிறார்கள். கோகலே நெருப்புச்சட்டி தூக்கிச் செல்கிறார். மாதா புன்னகை புரிகிறாள். அதிகாரிகள் கொடுத்த உரிமை; அதிகாரிகள் எடுத்துக்கொண்டார்கள். இதிலே எனக்கு யாதொரு வருத்தமுமில்லை. இதில் எனக்கு எவ்விதமான நஷ்டமும் ஏற்படமாட்டாது.'

'விகடம்' என்ற நகைச்சுவைப் பகுதியில் நாட்டுணர்வை வேடிக்கையாளர்கள் (விதூஷகர்கள்) மூலம் ஊட்டுகிறார். தமிழ் இதழ்கள் பற்றிக் குறிக்கும்போது,

> தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் போல இவ்வளவு கேலிக்கிடமான பத்திரிகைகள் நான் பார்த்ததே

கிடையாது.... கைபோனவை, செவி போனவை முதலிய அங்கஹீன எழுத்துகள் எங்கிருந்துதான் தமிழ்ப் பத்திராதிபர்களுக்கென்று பிரத்தியேகமாக அனுப்புகிறார்களோ தெரியவில்லை.

' 'அ' எந்த நக்ஷத்திரத்தில் பிறந்தது? 'கு' வுக்கு விவாகமாயிற்றா? இல்லையா? 'க' வுக்கு ஏன் வயிறு வீங்கியிருக்கிறது? என்று ஆலோசனை செய்யும் பண்டிதர்களுக்கெல்லாம் தமிழ்ப் பத்திரிகைகளில் வேலை கிடைப்பதாகத் தெரிகிறது.'

என்று எழுதியதோடு 'டிஸ்மிஸ்', 'எடிட்டர்' முதலிய ஆங்கிலச் சொற்களை எழுதிவிட்டு,

'இங்கிலீஷ் வார்த்தை சேர்க்கிறேன் பார்த்தீரா, காணும். சுதேசமித்திரன் பத்திராதிபர் சொல்லிக் கொடுத்தார்'

என்று ஆங்கிலம் கலந்து சுதேசமித்திரன் எழுதுவதைக் கேலி செய்துள்ளார்.

'இந்திய நாடகமும் ஆங்கிலோ இந்தியர்களும்' என்ற கட்டுரையும் விவேகானந்தர் பிறந்த நாள் விழாவில் வி.கிருஷ்ணசாமி அய்யர் பேசியது பற்றிய கட்டுரையும் சூரியோதயம் 13.2.1910 இதழில் வந்துள்ளன. இவை விஜயா 9.2.1910 இதழில் வந்துள்ள கட்டுரைகளோடு ஒத்துள்ளன. இவற்றில் இடம்பெற்றுள்ள, கெடில்கர் எழுதிய 'கீசகவதம்' என்னும் நாடகத்தில் துரெளபதை என்பது இந்தியத் தாயைக் குறிக்கும் என்ற செய்தி, 'பாஞ்சாலி சபதம்' உருவாகக் காரணம் ஆகலாம்; வி. கிருஷ்ணசாமி அய்யர் பேச்சு பற்றி எழுதியதில் குறித்துள்ள 'ஆறில் ஒரு பங்கு' என்பது, இத்தலைப்பில் சிறுகதை ஒன்றை நூலாகப் பாரதி வெளியிடக் காரணம் ஆகியிருக்கலாம்.

'செய்யுட்பகுதி' என்ற தலைப்பில் பாரதியின் இரண்டு கவிதைப் படைப்புகள் கிடைக்கின்றன. 13.2.1910 இதழில் மஹாசக்திக்கு விண்ணப்பம் என்ற தலைப்பில் 'மோகத்தைக் கொன்றுவிடு அல்லா லென்றன் மூச்சை நிறுத்திவிடு. . . ' எனத் தொடங்கும் பாடல் 'ராமதாஸன்' என்ற புனைபெயரில் வந்துள்ளது. 27.2.1910 இதழில் 'மஹாசக்தி' என்ற தலைப்பில் 'சந்திரிகையில் அவளைக் கண்டேன்..'

எனத் தொடங்கும் பாடல் 'ஸி. சுப்பிரமணிய பாரதி' என்று பாரதி பெயரிலேயே உள்ளது.

'தமிழ்நாட்டோருக்கு இறுதி விண்ணப்பம்' என்ற கட்டுரை சூரியோதயம் 13.2.1910 இதழில் பாரதியார் பெயரிலேயே வந்துள்ளது. அதை அப்படியே இரகசியக் காவலர்கள் மொழிபெயர்த்து அரசு அதிகாரிகளிடம் அளித்தனர்.

> 'சகோதரர்களே, கதை நெருங்குகிறது. சமாதானமான நியாய வழிகளிலே உங்களுக்கு ஸ்வதந்திர மார்க்கங் காட்டி வந்ததைக்கூட அதிகாரிகள் நிறுத்தி விட்டார்கள். . .
>
> நாம் கூறி வந்த மார்க்கஞ் சனங்களுக்கு ஹிதமானதுடன் ராஜாங்கத்தாருக்கும் அபாயமில்லாதது. ஆனால் ஆங்கிலேய அதிகாரிகள் அறிவை முழுதும் இழந்து விட்டார்கள். வெடிக் குண்டெறிபவர்களுக்கஞ்சி நமது சுதேச முயற்சியைக் கழுத்தை நெறிக்கத் தொடங்கு கிறார்கள்.
>
> இன்னொரு முறை சொல்ல எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்குமோ கிடையாதோ, அதுவே சந்தேகத்தி லிருக்கிறது. ஆகையால் தயவு செய்து இந்த ஒரு வார்த்தையை மனதில் பதிய வைக்கும்படி உங்கள் பாதங்களில் விழுந்து கேட்டுக்கொள்கிறேன். அதாவது எது வந்தாலும் அதைரியப்படாதேயுங்கள். மாதாவை மறக்க வேண்டாம். சுதேசிய விரதத்தை உயிருள்ளவரை கைவிடாமல் ஆதரித்து வர வேண்டும்.'

என்று எழுதியுள்ளார். இக்கட்டுரை ஓர் இதழாளர்க்கு இருக்க வேண்டிய அறிவோடு கூடிய நேர்மையை, மனவுறுதியை உணர்த்துகிறது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும்
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
இதழியல் ஆய்வு மையமும்

இணைந்து நடத்தும்

# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் மூன்றாம் கருத்தரங்கம்

## அழைப்பிதழ்

(இதழியல் கருத்தரங்கம் - 4)

அன்புடையீர்,

வணக்கம்.

'இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்' என்னும் பொருள் பற்றிய மூன்றாம் கருத்தரங்கு, காதி கிராமோத்யோக் பவன், வெள்ளிவிழா அரங்கத்தில் (236, அவ்வை சண்முகம் சாலை, கோபாலபுரம், சென்னை - 600 086) 3-4-1998, 4-4-1998 ஆகிய இரு நாள்களில் நடைபெறும்.

அனைவரும் வருகைதந்து சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

**இயக்குநர்**
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
இதழியல் ஆய்வு மையம்
சென்னை

**இயக்குநர்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை

அகில இந்திய வானொலி நிலையம் - சென்னை

நிலைய இயக்குநர்

திருமிகு *பா.ரா. குமார்* அவர்கள்

தலைமையில்

3-4-1998 அன்று முற்பகல் 10.00 மணியளவில்

திருமிகு *விஜய திருவேங்கடம்* அவர்கள்
(சென்னை வானொலி நிலைய இயக்குநர் - ஓய்வு)

கருத்தரங்கத்தைத் தொடங்கி வைத்து

இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

(தொகுதி - 1)

என்னும் நூலினை வெளியிடுவார்கள்



காஞ்சிபுரம் பச்சையப்பர் கல்லூரி முதல்வர் (ஓய்வு)

*பேராசிரியர் முனைவர்*

*மு.பி. பாலசுப்பிரமணியன்* அவர்கள்

தலைமையில்

4-4-1998 அன்று மாலை 5.00 மணியளவில்

திருமிகு *அ.மா. சாமி* அவர்கள்
(ஆசிரியர், ராணி வார இதழ்)

கருத்தரங்க நிறைவுரை நிகழ்த்துவார்கள்

## முதல் அமர்வு

3-04-1998 முற்பகல் 11.00 - 1.00

தலைமை :
முனைவர் இ. சுந்தரமூர்த்தி

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு. ரா.அ. பத்மநாபன் | ஹனுமான் |
| முனைவர் த. வசந்தாள் | செந்தமிழ் |
| திரு. இளங்கோ குமணன் | தமிழ் இதழியல் வரலாற்றில் நாகர்கோவில் |

## இரண்டாம் அமர்வு

3-04-1998 பிற்பகல் 2.00 - 5.00

தலைமை :
முனைவர் இராம. தட்சிணாமூர்த்தி

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் இரா. ஞானபுஷ்பம் | ஜநவிநோதிநி |
| முனைவர் அருணை பாலறாவாயன் | சித்தாந்தம் |
| முனைவர் முத்துசண்முகம் | பாலபாரதி |

## மூன்றாம் அமர்வு

**4.4.1998** **முற்பகல் 10.00 - 1.00**

**தலைமை :**
**முனைவர் இரா. இளவரசு**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் மு. தங்கராசு | கல்கி |
| திரு. மா.ரா. அரசு | ஆனந்தவிகடன் |
| முனைவர் பழ. அதியமான் | குமரன் |

## நான்காம் அமர்வு

**4.4.1998** **பிற்பகல் 2.00 - 5.00**

**தலைமை :**
**முனைவர் பொற்கோ**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு. பெ.சு. மணி | தத்துவபோதினி |
| முனைவர் ந. கடிகாசலம் | ஆனந்தபோதினி |
| முனைவர் பா. இறையரசன் | இதழாளர் பாரதியார் |

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| தொல்காப்பியத் தொடரியல் | 120.00 |
| வ.உ.சி. ஒரு பன்முகப் பார்வை | 25.00 |
| தமிழ் கடல் இராய சொக்கலிங்கம் | 30.00 |
| இலக்கண நூல்களில் கருத்து வளர்ச்சி | 35.00 |
| தெ.பொ.மீனாட்சிசுந்தரனாரின்தமிழ்த்தொண்டும்மொழியியல்பங்களிப்பும் | 25.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |
| பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | 80.00 |
| தமிழெனப்படுவது | 115.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி.500 வரை) | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.501 - கி.பி.900) | 70.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணியமுதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி. யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

**Pub.No. 518** இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - 3 **60 .00**